மகப்பேறா தெல்கலவி மறைதூது மேற்செலல்போர் வயஞ்ச ரூக்க, மிகப்பேறு பாச்சுவைமீ திருப்புபா வகத்துடன்யா வையுமவி ளக்கி, யுகப் பேறு மண்டலத்தோர் புரிந்தவமே யீதென்று வுரைத்துப் போற்றச், சுகப் பேறு பெறறுமெனப் பொன்னுலகோர் வாழ்த்தெடுப்பத் தோன்மை வாய்ந்து. (௩)

ஆய்ந்தவுப புராணத்துட் பார்க்கவத்தைத் துறைசைமுனி வரரின் ஞானம், தோய்ந்தகச்சி யப்பனவில விநாயகமா புராணத்தைத் தொகையாப் பிட்டே, வாயந்தகலைக கலலடையூாச சிதம்பரனா தப்பெயர்ப்பா வலன்சீர் செய்ய, வேய்ந்திடுமவி நாயகபு ராணசங்கி ரகமெனும்பே ரியற்றித்தந் தான். (௪)

‡ முச்சங்கந் தழைநகரு * முருகவள்ளன் மாணவர்தம முருகார் வெற்பும்
பச்சங்கந் திகழ்பதி வடிவாபழம பதிநாமப்ர பன்னி யாறு
மெசசங்கம டகூடறவாற றிட § முனிவர்க குதவரசி லிங்கந் தாபித்
துச்சகம் படிகடல வாயசிவபூசை செயுந்தலமுந் தொகக நாட்டில். (௫)

* சத்தமா தாகரா பரனைப் பூசிபபான படிகடத்தோர் தருணத் தாடை
வைதததவான் கவைவாய்வெற தனையொடுநீ ராடலுமால வெளவி யேக
முத்தமு சனாகாணரின் முககியயற் பாய்நதுகலைாய் முனைத்த நீரா
னைத்தரீ ருலகமெழ வனைமுகதி யெனபபுகனன் னகாவாழ்ந் துள்ளான் (௬)

கஙகைமா பிளைபடையான கமழ்குவளை நறுந்தொடையான் காள மேகச்
செங்கையினான் சண்முகபூ பதிகனிஷ்ட பிதாவாகச் சீவை குண்டத்
தங்கையினு மடகமென வுணாவெவாககுந் தெளிவிக்கு மறிஞ ரோருய்த்
தங்குபிசசப பெருமானற் றுதையா நாதமபூ நாத தகவோன். (௭)

ஆரமா தரின்மிகுமுற் றணைவனு வுள்ளானல லிநந்ர் நேயன்
வாரமா யெவ்வுயிர்க்கு தயைபுரிதெனு சினஙமேழி வண்ப தாகைத்
தீரமால் வேளவிக்கா வேளாண்மை சசெந்தமிழ்ச்சீர் சிறபப வோங்கும்
பாரமா பெரியவெனப் புகழ்சாமி நாதனெனுமப பாவல வோனே. (௮)

---

‡ முசசஙகந் தலைநகா, முதல, இடை, கடை, என்று மூவகைப்புலவர் தொகுதி தழையப்பெறற மதுரமாநகரம.

* முருகவள்ளல் மாணவாதம முருகாசலேற்பு, சாக்கேட்குரிய சந்தனாசலமும், அகத்தியற்குரிய பொதியாசலமும்.

§ முனிவர்க் குதவரசிலிங்கந்தாபித்ததலம், விசுவாமித்திரரியற்றும் வேள்விக்கு விக்கின நிவர்த்திசெய்த ஸ்ரீராமன் சிவலிஙகப பிரதிட்டை செய்து பூசைசெய்த தலமாகிய திருவிராமேச்சரம.

* சத்தமாதர்களாவார், அபிராமி, மகேச்சுவரி, கௌமாரி, நாரணி, வாராகி, இந்திராணி, காளியென்பவர்களாம்.

## சிறப்புப்பாயிரங்கள்.

### ஊற்றுமலை சமஸ்தான வித்வான் புளியங்குடி முத்துவீரக்கவிராஜர் இயற்றியது.

---

பூமருவு மிருமாதும் புகழ்மாதும் புகலிடமாத்
தாமருவி வளர்ந்தோங்குந் தமிழ்ப்பாண்டி நாட்டினுக்குண்
மாமருவு பொன்னகரும் வேட்குநலம் படைத்தசெல்வக்
காமருசீ ரைவகுண்ட மெனுங்கவின்சேர் மாநகரான். (௧)

கச்சைக்கொன் றைவயணிந்த கடவுளடி யைப்பரவு
மிச்சைப்பூ பதிசிந்தன் மணியாக வெயிறந்தோன்
பச்சைப்பூந் துகின்மணிப் பரந்தாமன் பாலனைநே
ரிச்சைப்பெயர் றெங்காறும் பூநாதன் றனக்கனுசன். [௨]

வேறு

திருநெல்வேலி யிற்றகலையா ரீசினிலக் கவுண்டாண்டுத் தியோகச் செல்வ
மருவியவிற் பரமமுகன் வாய்மையினி லரிசந்த்ரன் வள்ள லாகத்
தருகமலத் தடசமாகரான் றண்கங்கா குலதிலகன் சைவநீதி
யொருபொழுது மறவாத சிவநேசன் றவமேலோர்க் குதவி செய்வோன் [௩

நாமிஞ் தாவுசெய்வோ ஞவைதீர வெனநவின்றை வரைப்பு மந்த
பூமிஞ் தலைமலிந்து புவியிலுள வுயிர்க்கன்பு புரியு நீரான்
காமிஞ் தலைமேவுபூங் குழலிடைமூ ரலர்விரும்பு கவின்சே ராகன்
சாமிநா தமெய்யன்பன் றயாதரும சிலநிறை பொறைத லைத்தோன் [௪]

மாவடிவொன் றன்மயன் மற்றையொரு வடிவுமிலா வளஞ்சேர் சோலை
யாவடுதண் டுறைக்குருவைப் பரவுசச்சி யப்பமுனி யன்பு கூர்ந்து
நாவடுநன் காந்தபுரா ணவின்றவிசுகி னேசபுரா ணப்ப ரப்பாம்
பாவடிவெள் ளருவி நழு வாயிரச்சில வெண்ணெவரும் பரிவி னோச [௫]

சங்கிரக யாப்புரைத்தல் பத்தழுகி லொன்றெனவே தனுதுண் ணுடி
மங்கலஞ்சே ரையியாசில யாப்பினொவே வியிற்களகம் வழங்க நாட்டுந்
திங்களணி சிவநேசன் சிதம்பரநா தகவிசசிங் கேறு தன்னு
லெங்கதனைப் பார்வையிடு வித்தமுற்ற சினிகறயன் டதுசேர்த் தென்ன [௬]

அதிகாசப படிநந்தி நெல்லை நகர்க்குணபா லமுதவான் கங்கை யன்ன
முதிர்சுவைநக் கிடுநாம்பா பன்னிகடு முனைத்த சிந்திக் கணேசன் முன்பு
மதிமகனே மற்றுர்குழாஞ் செவிவாயாற் பொருளமுதை வாரி யுண்டு
திதிப்பீர்ப் வரங்கேற்றி ஞனிருமைப் பெரும்பயனுந் துய்க்கத் தானே [௭]

---

ற்குடக் தனித்தனை-யெக்கனை யவன்சீர் சொற்கிளைபயிலும்-கொக்கனை குள மே கோயிலாக கொண்டாள் — பாடுறு பழமறைப் பரசிவன் மைந்த-ஞூடருஞ் சீர்த்தியே நடமிடு நாவினன்-குவலயத் தரும்பெறற் குணப்பெருங் குன்ற- நச்சினர்க் கினிய நலந்தரு சிறப்பிற்- பிச்சப் பெருமான் பெருந்தவத் துதித்தோ-னேமி நாத னிகாக்குஞ் சாமி நாதத் தனிப் பெருந்தகையே.

---

திருநெல்வேலி ஜில்லா கலெ ஆபீசு கிளாக்கு டி. நெல்லையப்ப பிள்ளை இயற்றியது.

சீர்கொண்ட கொன்றையஞ் செஞ்சடைத் தேவுமத் தேவினோர் பாவின் வைகித், திருவருள் சுரந்தால லானமகோ டிகடந்த செல்வியு மச்செல்வி பால்,வார்கொண்ட வினைமுலையி னமுதுநுகர்சேயுமா மலயமமர் தமிழ்முனி வனு, மதிவழியின் வழுத்தருமரசுசெய மகிமைபெறு வளமைதிகழ் பாண்டி நாட்டிற், பார்கொண்டவரியயனு மறிவரிய பரம பதி பதிகள்பதி னென்க வற்றுட், பணையென்ன மறை தவ மியற்றுறு திருநெல்லையம்பதியி னுறைது வைகு, பேர்கொண்ட மலர்கள்சொரி சிந்துபூந் துறையினுறை பெருந்தையர் மேகதந்த, ஙியல்சரித மவன்முனமோர் கவிஞர்யா மணியமைகேற்றுதிற னைப்பசர்வனே. [க]

ஐம்பெருமபூதத்தி னுகின்ற விசசெக மனித்தமென் றெபரசிவ,னரிய பொற் பாதநாமரைதனது சென்னிமிசை யணிகின்ற பிருகுமுனிவன்,செம்பொரு ளுணர்ந்துகணபதிதிருப புகழைத திருந்தவே வடமொழிதனிற், செய்யபாக கவமெனச் செய்ததைத் தென்மொழி சிறப்பெய்த விரிசெய்யு ளாற், கம்பமற வன்பாற் குறுக்கசியபபகுக கழறுமுனிவன் றுறைசை யோன், கனிவோடுரைத்தனன் கதிகருவி நாயகக கடவுளார சரிதமெனவே யும்பரும போற்றிட வுயர்ந்ததிவ் வுலகத்தி னுள்ளோரக ளியாரு மெளிதி னேதியுணர் பான்மையரி தாவிருப பததுபற்றி யுவமனில புராணமிதனை[உ]

அருந்தவ வகத்தியன் றருமிலக் கணமெலா மமைவுபெற வான்பொரு ளெனு,மறமுதனு னகையு மளிநதிட வுளத்துறு யாவரீர் பெருகவெவரும்,வருந்துத விளாமலே பதியாதி முப்பொருளும வாய்செவிய தாதேருவான், வண்டணிப பாகதோ கண்டுதேறெ தேனதோ மாங்கனி பலாக்கனியதோ, இருந்தவா சிப்பவர்கள் கேட்பவாகள் சொலபவர்க டெளிவுறச்சிற்றடியிற், சேர்ந்தபொருள் சிறிதா யினும்பெரும பொருளதாச் செவ்விதிற் காட்டுமா பொற், பொருந்துபு விநாயகபு ராணசங் கிரகமாப் பொற்பயாத இனிதளித் தான், புலவரே றுஞ்சாமி நாதத் தனிப்பெயர்ப் புரவலன் பூபாலனே. [ங]

---

சிறப்புப்பாயிரங்கள்.

சாத்தூர்த்தாலூகா சிறுக்குளம் கூ. தாமோதரம்பிள்ளை

இயற்றியது.

பூங்கமலப் பொகுட்டினெழில பொருந்துபுவாழ் பொருவின் மறைப் பு
த்தேளுமபூந்,தேனகமழ்தண் டுளவநறுந் தெரியலுயல் வருகடநதொட் டே
வுந் தேடி, யாங்கிறைவன் முடியுமல ரடியுமறி தறகரிதா தலினவ் வண்ண,
லோங்குதிருக் கயிலாய *பரமபனீப் போ பெறறுலகக துறல்கண் டன்
னோர். [௧]

கனியினரு டருதிருவா வடுதுறைவந் தெனமுறையே கச்சி யபப
முனியினுயா வடமொழியாம பார்ககவபு ராணமதை மொழிபெ யாததிட்
டினியதிருத தென்மொழியில விநாயகபு ராணமென விசைபப மூன்று
தனையிரட்டா யிரகதிருநூற் றிருபத்து மூன்றகுந் தமிழ்பபா வாக. [௨]

சொறறதனை நனிசுருககச் சங்கிரக மாகவின்பச சுவையுந் தூய்மை,பெ
ற்றொளிருஞ் சொறசுவையும பொருட் சுவையுந கவிச்சுவையும் பெருகச்
சொறறுன, பொற்றருவார வைகுண்டம பூலோக கயிலையெனும புரத்துவா
ழ்க்கை, யுறறவளள னெலவேலிக கலியாபீ சினிற்கவுண்டாண் டுத்யோ க
த்தோன். [௩]

முத்திபடிந் தவாக்குதவுஞ சிநதுபூந் துறையிலருண் முதிர்ந்து வாழுஞ்
சித்திவிநா யகபபெருமான செயயமல ரடியிணையைத் தினமபூ சித்தே
பத்திரசமானவனபு பழுதறதொழுகு செழிததமனம படைதத தூயோ
னிதுதலமேற சுததசைவ வேளாள குலதிலகனென்ன வாய்ந்தோன. [௪]

எண்ணரிய தனமபடைத்தோ னெனககினிய நணபனென்கண் ணிணை
நிகர்ப்போன், புண்ணியகண் ணியனுமைய குஞசாமா லுதவுதிருப் புதல்வ
னிந்த, மண்ணுலகெ லாம்புகழ்சாத தூரவளாகப பிரமணிய மகிபன் றன்னை
க், கண்ணியமா மைத்துனனென் றெவருமகிழ்ந திடவிதயங் கனிந்துரை
ப்போன். [௫]

கருதரிய நூல்பலவும் †வெள்ளியுஞ்செம் பொன்னுமெனக் கற்றுணர்ந்தே
பருவரலி லாதமதி படைததுயர்ந்த சாதுசஙகப பழக்க முள்ளோன
மருமனறுங் குவளையந்தா மருமனக நிகாகவின்றா மருமனேனுங்கு
மிருநிலமெ லாமதிககுஞ் சாமிநா தக்குரிசி லெனுமிக் கோனே. [௬]

---

† வெள்ளியுஞ்செமபொனனுமென்பது ஈண்டுசுக்கிரவும்பிரகஸ்ப
தியுமாம்.

முற்றுப்பெற்றன.

உ

ஓம்

மஹாகணபதிதுணை.




# விநாயகபுராண சங்கிரகம்.

காப்பு,

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருவாநற் பொருளை நதிவயிற் சிறந்த சுருதிபூந் துறைதிளைக் கஞ்சேர், குருமணிக் குயர் *கொக் கரைக்குள நகர்சீர் கொழிப்பநேர் நோக்கி வீற் றிருக்கு, மொருமருப் பிறைதாட் டுணையவன் புராணத் துறுபொருட் பாட்பெளி துணர்பாப், பொருடொகத் தொடுதாட் டுணையதா வெனக்குப் புணர்த்துநன் மொழிபொருட் புணர்ப்பே.

* கொக்கரை-சங்கு.

## பாயிரம்.

### வாழ்த்து

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வேதமும் வேள்வி தானும் விளங்குக சாந்து மேகம்
பூதலம் வண்மை மல்கப் பொழிகவா னுடைபைங் கூழு
மாதலெய் துகநா னுரு மறம்பொரு ளின்பம் பல்க
மாதவஞ் சைவ யோங்க மன்னன்செங் கோன்மை வாழ்க. (க)

### நூற்பயன்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திங்கண்முடிப் பரம்பரனுர் வழிபா டாற்றுஞ் சித்திவிநா யகர்சரிதச் சிறப்பை யன்பு, பொங்கிமன மகிழ்ச்சியுடன் படிப்போர் கேட்போர் பூசிப் போர் நினைப்போரொண் போகஞ் செல்வந், தங்கிமனை மக்கள்சுற்ற மகலா தெய்தித் தனதனைநேர் பவராய்ப்பூ தலத்து மன்னி, யைங்கரனு ருலகினிற் சென் றவர்ம லர்த்தா ளகலாப்பே ரின்பமுநன் கடைந்து வாழ்வார். (உ)

கடவுள் வணக்கம்.

### பரமசிவம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருமறு மார்ப னுதி தேவரு மருத்தி மீக்கூ
ரொருசிவ போகந் தன்னை யுபாசிப்பார்க் கருள வேண்டி
யருளொரு மேனி கொள்ளெம் மண்ணலார் செம்பொற் பாதத்
திருவியன் மாலை சாத்தி யிணையில்பே ரின்புற் றுய்வாம். (ந)

### பராசத்தி.

சத்தியா நாமத் தாலே சராசர மனைத்தி னுக்கு
நித்திய போக நல்கி நிலவுதற் பாரத்தைச் சார்வான்
சித்தியார் ஞான நல்குந் திருவருட் சத்தி தன்னைப்
பத்தியா னினைந்து மேலைப் பவவினைத் தொடக்கை வெல்வாம். (ச)

### சித்திவிநாயகர்.

வேறு.

பையரா வரைக்கசைத்த பசுபதியா மெத்தொழிலும் பயப்பிப் பானுய், மெய்யரா மன்பருளங் கோயிலா வெஞ்ஞான்று மேவிப் பக்கந், தையலா *ரிருவருற வாழ்சித்தி விநாயகனுர் சதங்கை யார்ந்த, செய்யதாண் மலர்நினைந்து வருவினைக ளனைத்தனைத்துந் தெறுதல் செய்வாம். (ரு)

*இருவர்-சித்தி-புத்தி-என்னுஞ்சத்திகள்.

## குமாரக்கடவுள்.

அமரர்தமக் கனவரதந் துயரியற்றுஞ் சூர்முதலா மவுணரீட்டஞ், சமரிடைச்சென் றறமுடித்துச் சதமகனுக் காகநல்குஞ் சத்தி வேலோ, னிமயவரைக் கிறைபுதல்வி தனம்பருகிக் †குடிலையத்த மிறைவற் கோதுங், குமரகுரு பரப்பெருமான் பொன்னடியெஞ் சென்னிமிசைக் கொண்டு வாழ்வாம். (௬)

## நாமகள்.

தேமாமோ தகமுகக்குஞ் சித்திவிநா யகர்சரிதத் திறனோர் நாரசாற், பாமாலை தொடுப்பதற்கு வேண்டுமுப கரணமெனும் பழுதில் சொற்க, ளாமா $நால் வகைமலரோன் ஞவின்மலர் தாவரந்தந் தருளு மம்மை, நாமானன் னமர்பொன் னளினமலர்ப் பதந்துதித்தெந் நாளும் வாழ்வாம். (௭)

## திருநந்தி தேவர்.

திருக்கைலை தன்னின்மேல்ங்கோன் மறைப்பொருளை யுணர்த்திடுங்காற் றேர்கி லாள்போ, லிருக்கையிலை யையைவலை மகளாகச் சபித்தலறிந் திலேகங் கைக்கொண், முருக்கையிலை யெய்குகற்குந் தனக்குமவ்வா றுரைப்ப முந்நீர் மூழ்குற் ‡நீர்ப்பத், தருக்கையிலை யெனவிடுத்தா லையக்கடையுற் றோம்புநந்தி தாள்சிந் திப்பாம். (௮)

## முதலிமூவர்.

*கம்பந்தந் தளப்பரிய பிறவியெனுங் கடலினிடைக் கட்டுண் டோங்கு
கொம்பந்தம் பிடியிலர்போ லிறந்துழன்று கொடுநரகிற் குறுகு மாக்கள்
வெம்பந்த மறுக்கும்வகை செந்தமிழி னூல்வேதம் விரித்த ஞான
சம்பந்த நாவரைய சுந்தரரா மடிகளடி தலைமேற் கொள்வாம். (௯)

## திருவாதவூரர்.

கருவாதை தீர்வடையத் திருவால வாயுடையான் கழற்கண் வைத்த
வொருவாத வார்வவழிப் பரிபாகம் வந்தடுப்ப வுவமை யில்லான்
குருவாகி யோர்வருளப் பெருவாழ்வு குருந்தடியிற் கொண்ட தொண்டின்
றிருவாத வூரரிரு மருவார்செம் மலரடியெஞ் சென்னி சேர்ப்பாம். (௰)

## சண்டேசுரருமற்றை நாயன்மாரும்.

வண்டேறு மலரளக வரையரையன் றிருமகடன் வாம பாகங்
கொண்டேமம் பெருகவா மளித்தபிரான் றிருவருளுட் கொண்டு தாதை

† குடிலையத்தம்-பிரணவமந்திரத்தின் அருத்தம்.

$ நால்வகைச்சொல்-இயற்சொல்-திரிசொல்-திசைச்சொல்-வடசொல்.

‡ ஈர்ப்ப-இறைவன் வலைஞவடிவுடன் வீசியிழுத்தவலைக்குட்பட்டு.

* கம்பந்தம் கடைக்குட்-கயிற்றுக்கும்

விண்டேகத் தாளெறிந்து விண்டுவுமுன் காணாத வியன்றாள் கண்ட
சண்டேசர் பாதமொடு திருத்தொண்டர் பாதமுநந் தலைமேற் கொள்வாம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

## ஆசாரியர்.

திங்கள்வழிச் செழியனுக்குச் செங்கோன்முன்னீய்ந்த செயலாற்செங் கோன்மடமாத் திகழரிய நாமந், தங்கு *சிலா புரிவளர்சத்தியஞானி யாசான் சந்ததியாய்த் தனையடைந்தோர் தம்பவத்தை யெல்லாம், வெங்கனலி யவனி யிருள் வீட்டுதலே யேய்ப்ப வீட்டியருண் மெய்ஞ்ஞானவிளக்கமுளத் தேற் று, மெங்குரவன் கலியாண சுந்தரதே சிகன்றா ளிதையமல ரிருத்தியிடர் சிதையவடர்த் திடுவாம். (௰௨)

## முன்னூலாசிரியர்.

$இச்சியப்ப முடிக்கணிந்த விறையா சாறு மெய்தியிரு வினையினைப் பேய்ந் திடல்கண் டந்தா, ளுச்சியப்ப லான்மேலாச் சிரமத் துறறவ் வுமா பதிதன் புகழையென்று மோவா தேத்த, மெச்சியப்பன் மொழிப்படிபா வி னத்தால் யாத்திவ் விநாயகமான் மியம்பெருக விளக்கு முன்னூற், கச்சியப் ப முனிவாறு வடுது றைக்கோர் கதிரொனச்சொல் புகழினன்றாள் களிந்து ட்கொள்வாம். [௰௩]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அவையடக்கம்.

ஈசல்புள் ளரசை நேரா வெழுதனோர் தருமே ரம்பன்
மாசகல் புராண மல்க வகுத்ததை யான்றொ குத்துப்
பேசயாப் புறுத்த லேனும் பெரியவர் கொள்வர் யார்க்குந்
தேசரு ளொருகோட் டீசன் றிருப்புகழ் கொளநேர் வுற்றே. (௰௪)

நூல்வரலாறு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இந்துசேகரன்று னளினமென் றவிசற் கிசைப்பமுன் னவனிடம் வியாசன்,
புந்தியார் தரக்கேட் டியர்பிரு குவுக்குப் புகன்றபின் சோமகாந் தப்பே,
ருந்துவேந் தனுக்கன் னவனுரைத் திடலாற் பார்க்கவ மெனப்பெய ருற்றுந்
தந்திமா முகன்சீ ரமைதலா னுமங் கணபதி புராணமாச் சார்ந்தும். (௰௫)

* சிலாபுரி-கல்லூர் என்னும் பெயருடைய ஓர் நகரம்.
$ இச்சியப்பமுடிக்கணிந்த-இறைவனேமணஞ்செய்ய இச்சித்தகங்கையைச்சூடிய.

வடமொழிப் படியா திருசகத் திரமா வருகின்ற தத் *துப புராணத்
துடனுறை தருமிச் சரிதமெண் டகுசீ ரோங்குறு தொண்டைநன்னாட்டிற்
படிபுகழ் சென்னைப் பதிப்பிர சன்ன விநாயகர் திருவருட் பாங்கா
லடைவொடு திருவா வடுதுறை யெனுமா தீனம்வா ழடிகள்பற் பலருள்.

இலக்கணக் கச்சி யப்பநன் னூம மியைந்தமா முனிதமி ழியலாற்
றிலக்குபா சனையே யிவிலேயே யென்னத் தொகுமிரு காண்டமாப் படல
விலக்குதொண் ணூற்றொன் றுவிரு மூன்று யிரத்திரு நூற்றிரு பதின்மூ
நிலைத்திரு விருத்தத் தமைத்தன னும்ம் விநாயக புராணமா நிறுவி. (௰எ)

அனையதொல் புராண விரிவினைப் பரிவி னுய்பவ ரிருக்கவே யனையர்தம்,
மனநிலைக் கெளிதாச் சுருக்கயாப் பினதா வகுக்க வெண்மதியின் மூன்னுத
லும், புனைபுகழ்ப் பாண்டி நாட்டினெல் வேலிப் பொன்னகர்ப் பாங்கமர்
பொருனை, யெனுநதிச் சிந்து பூந்துறைச் சித்தி விநாயக னினிதருள் செய
லால். (௰அ)

சொற்றிடத் துணிந்தேன் விநாயக புராண சங்கிர கப்பெயர் தோற்
றிச், சிற்றறி வினனிந் நூலையீண் டதனுற் றென்னவ னுடுநெல் வேலி,
நற்றிரு நகரஞ் சிந்துபூந் துறைசேர் தாம்பிர நதிவளஞ் சிறிது, கற்றவர்
முனங்கற் றனசொலி மிக்க கொளன்முறை யெனக்கழ றுவனுல். (௰௯)

பாயிரமுற்றுப்பெற்றது.

---

# திருநாட்டுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமீன் றவளை யீன்றெம் மொருமுதற் கிருமணத்தி
னிலகவீயந் தணிமு டிச்சூட் டீய்ந்தா சீய்ந்தாள் வித்து
நிலவுமம் முடிபோற் சூடு நெடுமெதி மாபில் வந்த
வலகில்சீர் மன்ன ராட்சிக் கமைந்தது பாண்டி நாடு. (க)

வண்டமிழ் நாட்டு ளொண்டா மரையுறை யயனு மாலு
மண்டரு மறியொ ணுதா னழலுரு வுடையா னெல்லாங்
கண்டளித் தழிப்பான் றேவர்க் காத்திடக் கடலி னஞ்ச
முண்டவன் பண்டை நாடா வுறைவது பாண்டி நாடு. (உ)

* உபபுராணத்துடனுறைதல். பதினெண்வகைஉபபுராணங்களுள் பதினெட்டா
ம் எண்ணாத்ததாக இருத்தல்.

கத்துசத் திகளில் *வாணி நாற்பதோ டிருநான் காய
சுத்தவக் கரங்களான்றோர் தொகைகளாத் தொக்க சங்கத்
துத்தமப் புலவராயெம் முமாபதி தமிழோர் நீரால்
வித்தகக் கலாபீ டப்பேர் மேயது பாண்டி நாடு. (௩)

சதுமறைப் பொருளைத் தேர்வான் றுபதர் விரும்பச் சென்னி
விதுமலறத் தாசா னென்ன விமலன்மெய்க் கலைவி ரித்துப்
பதிபசு பாச மாமுப் பகுதியின் பொருள் விளக்கிக்
கதியரு ளாடல் செய்யக் கனல்வது பாண்டி நாடு. (௪)

## கலிப்பா.

நீலவாய் கடல்பரந்து நிலந்தெறுமோர் கற்பமதி
லேலவாய் குழலுமைகோ னிருங்கரங் கணவரவான்
ஞாலவாய் மதுரையின்மன் னகர்வரைப்போர் தரச்செய்திரு
வாலவா யெனுந்தலமு மமைந்திருப்ப திந்நாடு. (௫)

காப்பனூ ரரவணைகொள் கண்ணனெனக் கமலனெனப்
பூப்பனூ ழியினிலா னெனவனைத்தும் பொன்றுவிப்ப
னுப்பனூற்றமிழ்மறை நால் வருக்கருள்வா னயந்ததிரு
வாப்பனூ ரெனுந்தலமு மகத்துடைய திந்நாடு. (௬)

அரங்குன்ற வுளமலரோன் றமர்ந்தறியாப் புன்சமையத்
தூரங்குன்ற *வுலமலரா வுவந்துட்கொண் டெறிந்திடுபுத்
தரங்குன்ற கவினருள்வான் றருகுகன்றந் தியைக்கொடிருப்
பரங்குன்ற மெனுந்தலமும் பாங்கருள திந்நாடு. (௭)

பாடகத்தின் றொடர்புதலைப் படவினியன் மறைகோப்பச்
சூடகச்செங் காத்துமையா டுணைத்தனத்தி னமுதுண்டா
ராடகப்பங் கயமலர்க்கை யால்விடுமே டளித்ததிரு
வேடகப்பண் பியைதலமு மினிதுடைய திந்நாடு. (௮)

அடுங்கும்ப மத்தகமா வுரிபோர்த்த வராப்பணியா
னெடுங்குங்கற் பாந்தத்தி லோருருவாய் நிறைதிறன்காட்
டிடுங்குன்றி தொத்தெனல்போ விலங்குபிரான் மலையதிருக்
கொடுங்குன்ற நற்றலமுங் கொண்டிருப்ப திந்நாடு. [௯]

* வாணிநாற்பதோடிருநான்காய சுத்தவக்கரங்களான்றோர்தொகை- ஐம்பத்தோர் அக்கரவடிவினளாகிய சரசுவதியின் கூறான நாற்பத்தெட்டெழுத்து நாற்பத்தெட்டுப்புலவராகவடிவுற்றுச் சங்கப்பலகையினிருந்தவர்கள்.

* [உலம்] சாக்கிய நாயனர் அந்தரங்கபத்தியினெறிந்தகல்.

பொருப்புத்தூக் கியவரக்கன் புகழ்ந்தேத்த வரமளித்தா
னிருப்புத்தூண் புயவேட னெச்சிலுண்டு மருந்துறக்கண்
செருப்புத்தாள் பட *விலக்குச் செயன்மகிழ்ந்துங் கதிசேர்த்தான்
றிருப்புத்தூ ரெனுந்தலமுஞ் சிறந்திருப்ப திந்நாடு. (௰)

கனவாய்நீங் கில்வாழ்வைக் கழித்திறைவன் கழலடைவா
மெனவாயி னீரகற்றி யமுதுண்ணு மெகினம்போன்
முனவாமெய் தியவினைநீத் தருளடைந்தோர் முன்னுதிருப்
புனவாயி லெனுந்தலமும் பொருந்தியுள திந்நாடு. [௰௧]

தருவிரா மேனிமிர்கா விலங்கைமன்னைத் தாசரதி
செருவிரா மேசிதைத்த தீதகலச் சிவலிங்க
மிருவிரா மேசுரனென் றிசைத்திறைஞ்சி வரம்பெற்றார்
திருவிரா மேசுரமுஞ் சேர்ந்திருப்ப திந்நாடு. (௰௨)

ஆடானை யிவர்பரியா வமைத்தான்றன் முனிவருக்கு
§மாடானை மழுவெனக்கொள் ளைம்முகத்தான் வெள்ளிமன்றி
லாடானை வனைவெலிரண் டறவோருக் கலதுதிரு
வாடானை யெனுந்தலமு மமர்ந்திருப்ப திந்நாடு. (௰௩)

ஏனப்பேர்க் கோடணிந்தார் சுந்தரர்நம் மெழிற்பதிசேல்
வானப்பேர் முடிக்காளை யாய்த்தோன்றி வரச்சொலலாற்
றானப்பேர் காளையார் கோவிலெனச் சாற்றுதிருக்
கானப்பே ரெனுந்தலமுங் கவினவுடைத் திந்நாடு. [௰௪]

நாவணங்கு மொழியினள்பொன் னனையாள்பால் வாதமுற்ற
மாவணங்கண் டிடுகனகத் தால்வடிவை வகுத்திடச்செய்
தேவணங்கொ டுறைதலமாந் தென்மதுரைக் கடுத்ததிருப்
பூவணங்கொள் பெயர்த்தலமும் பொற்பவுள திந்நாடு. [௰௫]

விழியலகற் றுறுசுடர்சேர் விமலன்விதி யிகழ்ந்துஞற்றார்
பழியலகைப் பிறப்பினராய்ப் பார்வைக விறந்துபிறப்
புழி ‡யலகற் றிழிதிணையா யுறவிகழா ருஞற்றுதிருச்
சுழியலெனப் படுபதியுந் தொக்கிருப்ப திந்நாடு. [௰௬]

* [இலக்குச்செயல்] திண்ணனார் முன்னொருகண்ணைப்பறித்துத்திருக்காளத்தியீசனாது திருவிழியில் அப்பியபின் மற்றொருகண்ணையும் அவ்வாறுபறித்து அப்பக் குறித்தகாலைத்தன் செருப்புக்காலால் அவர்திருவிழியில் அடையாளமாகவைத்தது.

§ ஆடானைமழுவெனக்கொள்-மழுவைப்பயிலும் படையாகக்கையிற்கொண்ட.

‡ அலகற்றிழிதிணையாயுற-புல்முதலிய அளவில்லாத அஃறிணைவருக்கங்களாய்ப்பிறக்க.

பொற்றால வியமோவப் பொதுவில்விண்ணோர் தொழவினொலி
பெற்றாலந் தனக்கிரிந்தார் பெட்பினுண்டா ராமுனிகை
பொற்றாலங் கமைந்துயர்பூ சனைமகுடத் தோங்குதிருக்
குற்றால மெனுந்தலமுங் குலவவுள திந்நாடு. [௰எ]

சொல்வேறு காப்பொருள்போற் றொருகுமுயிர்க்குள் ளுயிரானோன்
செல்வேகத் தொடுபொழிந்தோ டவுஞ்செங்கெ னனைந்தோடா
†தெல்வேவல் பொருவவரம் பிழைத்தோம்புமெந்தைதிரு
நெல்வேலி யெனுந்தலமு நிலையுறுவ திந்நாடு. [௰அ]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இவைகொலோ வின்னு மிந்நாட் டெய்துவை பவங்க ளுண்டா
னவதிருக் கயிலை யோடு நவதிருப் பதியுந் தங்குஞ்
சிவமமர் தருபூ லோக கயிலையுந் திருமால் வைகும்
புவனிவை குண்ட மென்னும் புரியுமோர் வயிற்பொ ருந்தும். [௰௯]

ஆதலா லெந்நாட் டிற்கு மதிமகத் துவம்பொ ருந்து
மீதலான் மாதர் கேள்வர்க் கினியராய் மைந்த ரீன்றோர்க்
கோதுநீ ணெறிய ராய்ச்சூ ழொக்கலன் பினராய்ச் சைவ
நீதியா சாரம் பத்தி நிகழறந் தவத்தோ டோங்கும். [௨௰]

கலிநிலைத்துறை.

குறிஞ்சித்திணை.

இந்த நாட்டினுக் கெழின்மணி முடியதாய்ப் பொருனை
யுந்தி வைத்தகைக் குறுமுனிக் கோங்குமா லயமாய்ச்
சுந்த ரத் *திரு மகண்மகன் றேர்தொகு மிடமாய்ச்
சந்த முத்தமிழ் மணத்தொடோங் கியதுநன் பொதியம். [௨௧]

சித்தி யெட்டையும் புரிந்துமூ வுலகினுந் திரிவோர்
†முத்தி ருக்கையு முருக்கிமோ னத்தினின் முதிர்வோர்
சத்தி யத்தனை நினைந்துதத் துவச்சிரந் தனைத்தேர்
மெய்த்த வத்தவர் மேவிவீற் றிருப்பதவ் விலங்கல். [௨௨]

காவெ லாங்கனி மதுக்கலந் துந்தியாய்க் கதுவப்
பூவெ லாஞ்சுரும் பிசைசெயுஞ் சிங்கையாம் புரத்தி

† எஃவேவல்பொருவ-வெயிலிற்காய்ந்தசம்செல்லொப்ப.
* திருமகண்மகன்றேர்-இலக்குமியின்மகனாகியமன்மதனதுதென்றற்றேர்.
† முத்திருக்கு-காமம்-வெகுளி-மயக்கம்-என்னுங்குற்றம்.

## திருநாட்டுப்படலம்.

வாவி நாயகி யாமுலோ காம்பிகை யுடனே
பாவ நாசமூர்த் தியுஞ்சுரர் பரவவீற் றிருப்பார். [௨௩]

ஆதி யீசற்காந் தொடைமறைத் தோருச் சகன்றன்
றாதி யோதிக்கீய்ந் திறைக்குநல் கினஞ்சிகை தகக்கண்
டேக மாத்தண்டஞ் செயச் $சடைத் திலிங்கமென் னலுந்தோர்
போதவ் வாறுற்ற பிரான்சிவ சயிலமோர் புடைத்தாம். [௨௪]

மங்க ளச்சிவ மதுகங்கை சண்பகா டவியோர்
பொங்கு மாகட றிகழ்வட வருவிமா புனிதந்
தங்கு சித்திர நதியெனுந் தீர்த்தம்பொன் றூரம்
பொங்க யக்கொடு முடித்திரி கூடமும் பொருந்தும். [௨௫]

வருமலைக்கரி யுரித்தமுக் கணாம்கன் வானோர்
பொருமலைத்தவிர்த் தருள்செயப புகழ்மிகு குணாச்
செருமலைத்தவ னினத்தொடு செறுத்தவன் மகிழுந்
திருமலைத்தளி மகிமையுஞ் சிறந்ததங கொருசார். [௨௬]

மாறின் மந்திரோச் சுரநகர் வாழுமோ மீசர்
வீறு கங்கையை வெளிமண மியற்றியன் னவறமோர்
கூறு வேணியிற் சேர்த்தொரு கூறுறையாத திளைப்பே
மாற தாகென வதுவரு வயிரவ மலையும். [௨௭]

கருமை யேந்திய கண்ணியாளு சீதையைக் காண
வருமவல வானரத் தலைவன்வா னரககன்வா ழிலங்கை
யருகு கண்டுதா வுதறகொரா தாரமா யுறைந்த
பெருமை யேந்திரப பிறங்கலு மோரபடை பிறங்கும். [௨௮]

வடவ டுக்கல்கார் முகம்வெள்ளி யடுக்கலை யந்திரமகோண
டிடலி னென்பய னிறைகுடா மே ருமிம பொதிய
நடமி யற்றிளைப் பொழிசிறு காலைநற் றமிழின்
புடனி சைத்தலை நல்கலி னெபபொருப புயர்ந்த. [௨௯]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எண்டமிழ் முனிவனை வாழிய பொதிகையைக் கயிலை யென்ன
வண்டருப் வணங்குகின்றூ ரொளநகை யமுதா வாட்டி.

---

$ சடைத்திலிங்கமென்னலுந் தோபோது-மாலையை இலிங்கத்துக்கணியாநதன
தாசிக்குச்சூட்டியதால் அதிலுரோமங்கண்டாசங்கித்ததலைவன்சோதனைக்குச்
சடையையுடைய இலிங்கமாக இருந்து அருச்சகனை இரக்ஷித்தல்.

வண்டிசை செயல்வாழ்த் தாவிழ் மலாருச் சித்த லாவான்
கொண்டூர் சினைகை கூப்பா வணங்கலிற் கொழுங்கா வார்ந்த. (௧௰)

மங்குலோ வாதி வர்ந்து மலர்ப்பொழிற் றருமி டைந்துங்
கங்குல்போ னிழனல் கந்த காரத்தா னிலாத்தோய் வின்மை
யங்குள தென்பார் சில்லோ ரஃதன்றிங் தெயின மாதர்
தங்கண்மா முகநா ணிப்போ தால்காத் தலினென் மெய்யே. (௧௧)

தூங்குகை யுடைக்க ரோனுச் சுலவுத ரோகை செல்ல
†வோங்கலின் கடவுட் குற்ற தேவியோ ரிருவர் தம்மு
ளாங் §குல முடையாள் பாங்கர் நடைகற்க *விறைவி யாவாள்
பாங்கர்மென் சாயல் கற்கப் பழக்கந்தே டிடுதல் போலும். (௧௨)

முல்லைத்திணை.

மன்னுமந் தாரங் காயா மலரோம தைய னன்னை
தன்னையொத் தலர்த லானுந் தண்ணென்மா லதிப்பூ ‡தார
மென்னவோங் கிடுத லானு §மிமையவர் செறித லானும்
பன்னருங் கயிலை யிங்குப் படர்ந்தென விளங்கு முல்லை. (௧௩)

முத்தொளிர் செம்பொன் னீல மணிமுத லிடைக்கு யின்று
வைத்தபூ ணென்ன மௌவல் கொன்றைவண் டடர்பூ மல்கக்
கொத்தலர் குருந்தி னீழ லாயர்வேய்ங் குழல்க ளூத
வுத்தமத் தீருசு வைப்பா லுதவுமா னினங்க ரேங்கும். (௧௪)

அலைகடன் மதித்தாங் §கண்ட ரிவையர் தயிர்மத் தூன்றி
மலைபுவி முழக்கி னெங்கு மதித்திடு மோதைக் கஞ்சிக்
கலையின மிரிந்து செல்லக் காமர்மா னினங்க ளன்ன
சிலைபுரை தனத்தார் கட்கு மானியே தியங்கிச் செல்லும். (௧௫)

சேண்டோட வோங்கு தண் §கோத் திரவப்போ ரினிற்கொண் மூவேய்ந்
தீண்டல்கண் டுடைப்ப தாகை யேனக்கொள்செவ் வேட னக்கு
வேண்டுமோ துலக்கோ மேனி மிளிர்வடி வாமென் றெண்ணி
யாண்டலை யினங்கள் கூவ லுதித்தல்போ லாகு மன்றே. (௧௬)

---

† ஓங்கலின் கடவுள்- குமரவேள்.
§ குலமுடையாள்- தெய்வயானை.
* இறைவியாவாள்- வள்ளியம்மை.
‡ தாரம்- வெள்ளி.
§ இமையவர்-தேவரும் மனிதரும்.
§ அண்டர்- தேவரும் இடையரும்.
§ கோத்திரவப்போர்-வராகன்போர்.

(மருதத்திணை) கலிநிலைத்துறை.

நினாக டந்திடும் புறவடுத் துளநெடு மருதத்
தனாக டந்திடு நதிபல வன்னவை தம்மு
ளுனாக டந்திடு பெருமைசால் பொருனைமிக் குயர்ந்த
வனாக டந்திடு தேவர்க டமின்மகே சனைப்போல். (௧௭)

இருநி லத்தவ ருயவற மீய்ந்திடு பொருனை
பொருவி னற்றமிழ் முனிவா னோடுபோற் காக
மருவி மிக்கதென் மலைமிசை வீற்றிருந் தருளு
டிருவு ளத்திடை யினையன தேர்ந்தனள் போலும். (௧௮)

அம்மை யப்பர்பால் வாங்கிவே ளாளருக் களித்த
செம்மை நெல்லினால் வளாறச் சிறப்பினுஞ் சிறந்து
மும்மை வையமு முயவமு தினைமுதிர் மருதம்
வெம்மை தீர்தா நிறைக்குது மெனவிழை வெய்தி. (௧௯)

ஆறு மாமுக னருள்பெறு மகத்தியன் கைநின்
றாறு தாம்பிர பன்னியென் றொருபெய ருற்று
மாறி லாதகால் வழிச்சென்று மருதத்தி னுள்ள
வீறி லாமலர்த் தடங்குளம் யாவினு நிறைந்தாள். (௨௰)

மடைவ ழிக்கொடு வயல்புக மேழிவண் பதாகை
யுடையர் மிக்கறத் துடனடு வுடையனொன் றுழவுப்
படையி னிற்றன்ம விடையுட னடுவனார் பகடுங்
கடைஞர் காட்டலிற் பூட்டிவன் னிலக்குணங் கவர்ந்தார். (௨௧)

சேறு செய்பவர் சேறுறு செய்விதை வீசி
நாறு செய்பவர் நடுபவர் நடுநடு முளைத்தாங்
கூறு செய்களை களைபவ ரோதையாங் கொன்றி
வீறு செய்மழை முழக்கினு முழங்குமான் மிக்கு. (௨௨)

கன்ன னுமவொற் றுமையினாற் †கரும்பினீர் காண்பா
னுன்னி நோக்கல்போ லும்பர்மீ னுலகெல்லை யோங்குஞ்
சென்ன னுமவொற் றுமையினாற் *சாலிசீர் தெரிவான்
மன்னி நோக்கல்போல் வானமீ னுலகெல்லை வளரும். (௨௩)

பூத லங்கொணல் வருணம்வந் தொழுக்கினிற் பொருந்தித்
தீதர் தந்தொடர் பற்றுநல் லோர்சிநே கங்கொண்

† கரும்பினீர்- புனர்பூசநட்சத்திரத்தினியல்பு.
* சாலிசீர்- அருந்ததியின் சிறப்பு.

‡டோதி நன்குறத் திரிக்க ணத்தொழி லுஞற்றி
யாதி தன்பதம் புகுந்தருட் குரியரா வார்போல். (௪௪)

§பலசெய்க் கூழினெல் லாய்ப்பசே ரெனக்கலை பற்று
இலகு ரப்புனல் கொடுவளர்ந் திரும்பொதி யுட்கொண்
டலகி னற்கதிர் கான்றமு தேய்ந்தடித் தலைசாய்ந்
துலைவற் றோம்பினோர் தொழிலினிற் புகுந்துத வுற்ற. (௪௫)

மன்ன லைப்புனற் றடத்தசை யம்புய மலர்மே
லன்னம் வைகனீர்ப் பெண்கையிற் செண்டினைத் தாட
லென்ன லாமய லாம்பல்மென் மலரில்வண் டிவர்ந்து
தென்னி சைத்தல்வாய் திறந்தவள் பாடுதல் சிவணும். (௪௬)

மாடு சூழ்பணை தொறும்வலம் புரிக்குல முரல
வூடு நீடுவே ளுறுசிலை யெனவுளை வேழ
மீடி னித்திலஞ் சொரியும்பல் சுரம்பட விருங்கோர்ந்
தாடு நாமறை யவர்க்கரும் பொருளளிப் பவர்போல். (௪௭)

எருமை வள்ளையின் மேய்ந்துநா கிளங்கன்றை யுள்ளிப்
பருமடுத்தடத் தொழுகிய பானதி யொழுக்கு
முருகு மொய்த்தமுக் கனிநறு முதுநதி யொழுக்கும்
பெருகி யோடிப்பா றேன்கடற் கெதிர்சொல்பெற் றியவாம். (௪௮)

தென்னை பைங்கமு காம்பிரம் பலவுமீச் சென்று
கன்னல் காட்டச்செல் கதிரவன் வையமீர்த் தோடு
முன்னி கட்குமே னிழல்செய வுன்னிய தென்றாற்
பன்ன வேண்டிய வளமெவன் பரவைவைப் புரைப்பாம். (௪௯)

## நெய்தற்றிணை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கருணைசேர் முகமோ ராறுங் கமலநேர் கரமீ ராறு
மருவுகாங் கயன்றெய் வானை வள்ளியாந் தேவி மாரோ
டிருமையு மருள வாழ்மு விருபடை வீட்டின் மேலா
மொருதிருச் செந்தின் மூதூ ருடையதாம் வேலை வைப்பு. (௫௰)

ஐயமேற் றலைக்கைக் கொண்டோ ரங்கையி னனம்பெய் வார்போன்
மொய்கழி நளினப் பூவின் முதிர்ந்ததா துகுப்ப கைதை

‡ ஓதி- ஞானம்.
§ பலசெய்க்கூழ்- பற்பலவயற்பயிர்கள்.

யுய்நெறி யறிஞர் கையி னுரகம்வார்க் தாரந் தூய்ப்புச்
செய்யபொன் னளிப்பார் போற்றேன் செறிமல ருகுப்ப புன்னை. (௫௧)

துன்னுசெம் பவளக் காடு நுழைச்சியர் சேரி தோறுந்
தென்னுறப் படர்த லன்றோர் செவ்விதழ் நிறமு மின்முன்
மன்னுவெண் டாள மன்னோர் தளவமா மலர்மென்மூரற்
றன்னெழி னிறமுங் கொள்ளச் சார்ந்திடல் போலு மாதோ. (௫௨)

உளவருப் பளக்கு மார்வ மகன்பெரும் பலதீ வின்கண்
விளைபொருள் வரவேற் றுப்பின் விடுகலத் தொனிபு லான்மீன்
களவுசெய் பறவை யோட்டுங் கம்பலை வலைகள் வீசி
வளமைமீன் படுக்கு மோசை வாரியோ சையைய விக்கும். (௫௩)

திணைமயக்கம்.

கறிக்கொடி கடுக்கை மேவுங் காட்சிகண் ணுதலை முன்னாண்
மறைக்கிறை தனைநேர் மாயோன் மங்கையாய்த் தழுவன் மானுங்
குறக்குல மடவார் தந்த மென்றுகுன் றவர்ம யங்க
நிறக்கடி முல்லை சந்தி னிமிர்ந்தலர் சொரிவ மாதோ. (௫௪)

வண்டிமிர் பொழில்சூழ் தண்ணூர் மருதவைப் பணங்க னார்தம்
பண்டரு மமுத வின்சொற் பயிலுமஞ் சுகங்கள் செங்கால்
வெண்டிரு மலர்வா ழன்னம் விறல்கெழு கிராத மாதர்க்
கண்டவர் நடைய வாவிக் கசடறப் பயின்று லாவும். (௫௫)

கடல்படு துவர சோகின் மேலுறல் கடற்பி றந்த
விடநுக ரிறையே மேலோ னெனவவன் மேனித் தேசும்
§பிடகநூ றருதே வென்னும் பெயரினன் கீழோ னென்னத்
தொடர்பினன் னவனி ருக்குந் துருமமுங் காட்டல் போன்ற. (௫௬)

வியன்சினை வேங்கைத் தாரு மேனியீர்ந் தலர்ந்தொ சிந்து
கயம்படு கடலிற் பூத்தூய் நிற்றல்கற் பாந்த நீங்கி
நயம்பட வுலகுண் டாக்கு நாட்கடல் வண்ணன் பாற்சென்
றயன்படைப் பியருன் றோ வடிவணங் குதனி கர்க்கும். (௫௭)

பகடுகைப் பகட்டின் கன்றோ டாய்ச்சியர் மருளப் பாங்கர்
திகழ்முதி ரையின்பைங் கூழ்மேய் செயலறிந் தானி ராசி
யிகலுட னகல்வான் வேந்த னிறைவனு நிலத்தின் வாய்ந்து
ககனமட் டுயர்செஞ் சாலிக் கதிர்கறித் தகலு மன்றே. (௫௮)

---

§ பிடகநூ றருதேவு- பிடகமென்னும் பௌத்த சாஸ்திரத்தையுரைத்த அருகக்கடவுள்.

உப்பொறி வாளை முல்லைச் சிறுவர்கட் குதவி வேலை
வைப்புவாழ் சிறுவர் மாறுச் சிவலும்வா ரணமுங் கொள்வார்
செப்புநோர் பெறுந்த னத்தாய்ச சியர்கொள்ளு மெள்ளு மீய்ந்து
துப்புநித் திலமு நெய்தற் றோகையர் கையாற் கொள்வார். (௫௬)

கடலெறி வளையின் றண்டைக் கடைசியர் பணைமென் முத்துக்
கிடையிடை கோத்துக் கண்டந் திடுவரா லிழையநு வஞ்சிக்
கொடியிடை தளரு மாதர் கொழுநரைக் கலத்தல் போலு
மடாசினைப் புன்னை கத்தை யணைந்துமேற் படரு மாதோ. (௫௭)

அலைகடற் காகம் பண்ணை யடைந்தன்பர் வரவு நோக்குஞ்
சிலைநுத லவர்க்கு நலல நிமித்தஞ்செப் பலிற்க.ளைந்து
முலைவளர் குயிலி னத்தின் முட்டைகள் பலபொ ரித்துப
பலவின்முட் கனிகி ழித்துப பருஞ்சுளை கவர்ந்து மீளும. (௫௮)

சந்தனப் பொதிலைக தன்னிற் றனிந்தினை யயின்று பாடி
வந்தன கடையார் பண்ணார் வண்டமிழ்க் கிளவி கற்றுப
பந்தன கொங்கைப் பண்ணைப் பாவையா பூவைக் கோதிக
கந்தன்வாழ் செகதி ஞகங கலந்துமண் பங்கரும் கிளிகளை. (௫௯)

திருநாட்டுப்படலமுற்றுப்பெற்றது.
ஆகப்படலம் உ-க்குத திருவிருததம [௮௰௧]

# திருநகரப்படலம்.

கலிநிலைத்துறை

ஆன நானில வளங்கொளிந் நாட்டிடை யமல
ஞான நாயக னமலையை மணந்தன வாத
தான நாயக னுயிர் தழைத்திடப் புரந்த
தான நாகரும் புகழ்வது தனிகெலலை நகரம். (௧)

நிலம கட்கொரு நிலவுமிழ் மதிமுக மெனவு
மலர்ம கட்கொரு மணிகுயிற் றுதன மெனவுங்
கலைம கட்கொரு பலகலைக் களஞ்சிய மெனவு
மிலகு மின்னதை நெல்லையம பலமென விசைப்பர். (௨)

மன்னு நான்மறை வேணுவாய் நோற்றிறை வரத்தின்
றன்ன லாலிதை வேணுமா வனமெனச் சொல்வர்
பின்னுந் தன்மதே விடபமாய்ப் பிரளயத் திறவா
தென்ன வோர்ந்தமர் தலிற்றன்ம கேத்திர மென்பர். (௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்-

கதியருள் கம்பை நதிவயிற் காந்தி மதியுமை கனிந்துநோற றன்னிப்,
பதியைமே தழுர்ந்தென் காஞ்சியென் றிசைக்கும் பனைதிருக் காம்வரு பொ
ருனை, நதியுயர் வேணுப் பிரான்றிரு முன்ன ருத்தர நடந்தவி முத்தம், வதி
தரு கங்கை போறலி னிதன்பேர் தெக்கண காசியா வழங்கும. (௪)

இன்னமும் வேறு பெயர்களுள் ளனவா விப்படிச் சிந்துபூந் துறைப்பேர்
முன்னதா நாலெட் டாம்பெருந் தீர்த்த முள்ளன மூர்த்திமுற் காலந்
தன்னினெற் பரப்பின் வேலிகோ லியதாற் சாலிவா டீசா னெனப்பேர்
பன்னிய மூல லிலிங்கமு மோங்கு பழமறை யுருக்கொள்வேய் வனத்தில்.

நடந்தவோ ராயன் குடக்கொள்பா னிநம்வேய் முனைதட்டிக் கவிழ்ந்
தலா னவியத், திடந்தவோர் நாணெய்த் தோமெழப் பயமுள் ளெழுமுழு
துங்கண்ட ராமந், தடம்புயவழுதிக் குரைத்தலும் போந்தாச் சரியமுற்
றிறைஞ்சவேய் வனனுய்ப், படர்ந்தவன் வேண்ட வளர்தலால் வேண்ட
வளர்ந்திடு பானுமென் றிரண்டாம். (௬)

நவிலுமிவ் விரண்டு மூர்த்தியா நெல்லை நாயகன் சுவேதநன் னுமை,
நுவன்முனி வனுக்காக் கூற்றினைக் காய்ந்துந் தமக்குநோன் றவமும்பன்
னியர்க்குக், தவலருங் கற்பு மன்றியோர் தேவின் றெனப்பயி ருருகா வன
த்துக், கவர்மன முனிவ ரகந்தைக ளொழித்துங் கருணையின் வீற்றிருந்
தருள்வான். (௭)

பின்னுமாற் றூட ளவில வேதம் பெரும்பனை யாயறக் கடவு
ளுன்னரும் விடையா யுறைதலங் கங்கை யொப்பவார் சிந்துபூந் துறையை
முன்னதாந் தீர்த்தம் வகுத்திடு மூர்த்தி மொய்த்தவிந் நகரினுக் கிணையாப்
பன்னவிப் படிவின் னவர்பதி யுரகர் பதியினு முளதுகொல் பகரீர். (௮)

நன்னர்நான் மறைவே யுருவெடுத் ததனு ளும்பல் விருக்கமா குவ
மீங், கென்னவா கமமும் புராணமுங் கலையு மெண்ணியே சாலிவா டிப்பேர்,
பன்னுமா நகர்க்குப் புறநகர் தோறும் பாதவ மாயுறன் மானப், பொன்னுல
கோங்கைந் தருவினுஞ் சிறந்து பொழிலெலாம் வளர்த்தவாப்பொருந்தும்.

பண்ணையாட் டயரும் பானலங் கயற்கட் பாவையர் குழல்பயோ தா
மென், றெண்ணியாங் கடுத்த மயிலின மனையா ரிணையிலஞ் சாயல்கண்
டுடைவுற், றுண்ணையாத் தொழும்பு செய்தல்போ னடிப்ப வுழுமினைப் ப
கற்றிடத் தெளிக்குந், தண்ணறு நீரி னறுமது வுகுக்குந் தண்டலீர் நெருங்
குதண் டலையே. (௰)

கருவிவான் முகிலைப் புழைக்கையா லெட்டுங் களிற்றினந் துதிக்கை யின் முகந்து, பருகநீர் குறைவுற் றன்னதப் பகடு படுகடாம் பொழியுமா றிழிந்து, பெருகுநீர் மையினுன் முன்னிறும் பெருகிப் பெயர்பெருஞ் சுனை யையுங் கடப்ப, முருகுகொப் புளிக்கும் பங்கய மலர்கண் மொய்த்திட வெ ளைமவா ழிலஞ்சி. (௰௧)

மறப்பெருங் குணத்து விருத்திரா-சுரனுல்வானவ ரிறைபடு துயர, மறக்கெடு மாறு கடலையுன் றயின்ற வகத்திய னிங்குளா னிதுமந், திறத் துரு வரம்யாம் பெறன்முறை யென்று திருமலி நெல்லையிற் புறஞ்சூழ்ந், திரைபபொழு தேனு மிடம்வல மகலா தெழுகட லெழியா விசையும். (௰௨)

இந்நகர்ப் புறஞ்சூ ழெயிலுமை *யொருசா ரியைசுவை யாயவள் பதி யோ, தன்னையோர் சிலையாக் கொண்டுள ளைவாக் கருமறை சாற்றமுன் றனிந்தா, னன்னவா னீறூர்காலு றினவட் டாத்து மஞ்செறனி லெனருட் கி யைந்து, மன்னுது மெனப்பொன் மலைபுடை வளைந்து வைகுதல் போல் வளை தருமால். (௰௩)

இசைமறை நான்கும் வேறுவா யிறைபாக் கிருந்தலின் யாழுரிங் கி ருப்பின், வசையறச் சிருட்டி முறைநெறிந் தியற்றல வாயதரு பெலாறுநா ன் மறையோன், றிசைமுகத் துடன்வை குதலினுற் றிசைசெர சிகரிகள் வாயிலே புதவே, யசைதரு மணியெ யனையன்வா யிதழ்நா வனையதாக் கொ ண்டுறல் போலும். (௰௪)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

அடாகொடி தாங்கி விண்மே லெழக்கெழு வாளை யாங்கே
தடைசெய்தி யெனவிண் வேந்தன் றன்னதா நிலைய பணித்து
விடவது போங்தொள ளூர்கண் மேவல்பார்த் துவல் போது
முடிகெழு மாட கூட முகட்டிற்கோண் முவு லாவல. (௰௫)

கொன்னில விரவி செல்லத் தடைசெய்கோ புரதது மின்றூர்
பொன்னா மியத்துங் கூத்துப் பொலியரங் கத்துங் காந்தக்
கன்னில வுறக்கு யிற்று மாடகூ டத்துங் காட்டும்
பன்னிறக் கொடிக ளாடல் பயோதரங் களைச் சுமந்தே. (௰௬)

கடல்படு சங்காற் சாந்தாற் கவினுறத் தீட்டிவெண்மை
வடிவுடைத் தாய மாட மாலைகண் மழவ ருத

* ஒருசார்யை சுவையாதல்- தனையடுத்த இமமலைமகள் தனக்கு மகன் முறைய னாதல்.

விடையவர் தான நாதர் விழாவினைக் காண்பா னிற்கு
மடியவர் தொகுதி யேய்த்தாங் கண்ணிநா வினங்கு மன்றே. (௰௭)

ஆடவர் முடியுந் தோளு மகலமு மரடல் கற்கு
மாடமுங் கரும்ப ரம்பை மலர்தொடை காளி கோ
நீடிய கமுகு தீப நிறையும்வீ தியுமின் னார்கள்
பாடக மணியும் பாத பங்கய மலர்கள் சூடும். (௰அ)

மழவரு வியல்பி னீடு மணமரு வில்ல மெங்கு
முழவரு வியல்பி னீடு முதிர்வரு வாங்க மெங்கு
முழவரு வியல்பி னீடு முரமருப் பழனமெங்கும்
விழவரு வியல்பி னீடும் வெளியரு வீதி யெங்கும். (௰௯)

திருமறை பொதுநூ லாமெய்ச் சிவாகமஞ் சிறப்பு நூலாம்
பொருடெரி தரினென் றற்கிழ்ப் பொருந்துநால் வருக்கு ணர்த்திக்
குருவடி வான பெம்மான் கோதில்சீ *ரநாதி சைவ
வருமைநா மத்தார் கோயி லணிநகர் நடுவ ணோங்கும். (௨௰)

புரகரன் றளியுள் வேத புராணகோ டணையுஞ் சைவ
குரவரீ ரிருவ ரோதுங் குளிர்தமிழ் மறையி சைப்பும்
பாதமோர் பவரி ரட்டும் பஞ்சவாத் தியமு ழக்கு
மரவெனு மொலியு மோவா தமரர்கேட் டினமுந் துஞ்சார். (௨௧)

திதியிருண் மலந்து மிக்குஞ் சிவாகமத் துறையி னின்று
நிதிகதி யருளுங் கண்டி நீறும்வேய்ந் திறைக்குங் காந்தி
மதிவடி வணைக்கும் பூசை வழாதியற் றுதி சைவர்
முதலிய ரொடுபல் சைவ முனிவர்வா சமும நேகம். (௨௨)

அருமறை முறைவி டாதங் காற்றுசெவ் வேள்விச் செந்தீ
தருபுகை பனியின் வானிற் சார்ந்துபங் கயத்தை வாட்டும்
பெருமையு மவிப்பா கங்கள் பெறவும்பர் நிலத்துத் தேவர்
வருமொரு தகவு மோங்கு $மாநிலத் தேவர் வீதி. (௨௩)

போர்படை பயில்வோர் சாலை புழைக்கைமா லைசூழ் தானம்
வார்திரை கடல்க ளன்ன வாம்பரி பிணிக்கும் பந்தி

---

* அநாதிசைவ வருமை நாமத்தார்- எழுவிதசைவருள் சிவபிரான் அநாதிசைவ ரென்று சிவாகமத்தில் விதித்திருக்கிறபடி திருப்பெயருடையவர்.

$ மாநிலத்தேவர்வீதி- தேவர்கட்கு அவிப்பாக மூட்டும் வேள்விக்குரிய அந்தண தெரு.

கூர்தரு படைசெ றிந்த கூடமாத் தாளை மோங்கும்
பார்முறை யாக செய்யும் பண்புடை வேந்தர் வீதி. (உச)

நெடுமலை மருத முல்லை நெய்தல்சேர் பொருளை னைத்துந்
தடவரை யனைய மாடத் தலங்கண்மாட் டோங்கிச் சூலப்
படையுடைப் பெருமான் றேழன் பதியிவண் போந்த தென்ன
வடர்தா லோவா தென்று மணிதிகழ் வணிகர் வீதி. (உரு)

பொருந்துநான் மறையோர் மன்னர் பொற்புறு கவிப்பர் மற்றோர்க்
கருந்துவ வுழவி னல்க வமையுப காணஞ் சுற்றம்
விருந்துதெய் வதங்கோ தென்னம் புலத்தவர் § வேள்வி மெய்ம்மை
திருந்துசை வாபி மானந் திகழும்வே ளாளர் வீதி. (உசா)

வேதியர் தமின்மா சைவர் வேந்தரொட் டியபின் ஞேரி
லோதரு சைவர் பின்னோ நமிலவாங் தாசை வத்தோர்
போதரு லோமர் தம்மிற் பிரவா சைவர் பூவிற்
றீதிலே னையரி லாமங் துயசைவர் தீக்கை யுற்றோர். (உஎ)

சொன்னநற் குலநான் காலுந் தோற்றமுற் றுயர்வு தாழ்வு
மன்னுபல் குலத்தோர் தங்கண் மரபின்வெவ் வேறு வைகி
யன்னவர் மரபுக் கேற்ற வருந்தொழில் வழாது செய்யுந்
தன்மையின் வாழ்வ ரன்னோர் தமமறு கனந்தஞ் சாற்றின். (உஅ)

வைகறை யெழுந்து தூய்தின் மனத்திறை யடிநி னைந்து
செய்கட னனைத்து முற்றிச சிவபிரான் பூசை யாற்றி
யுய்வகை யருளு நெல்லை யுமாபதி யால யத்தை
யெய்திமுப் போது மேத்தி யினிதுநாள் கழிப்பார் பலலோர். (உகூ)

அரவநாண் வரைமத் தாக்கொண் டளக்கரை மதித்த வேலை
கரர்தொழக் கறுத்த கண்டன் றெழும்புளம் வாக்கு மெய்யாற்
புரியடி யவர்க்குப் பூசை புரிந்தமு தருத்தி யன்னார்
கருதிய வளித்துங் காலங் கழிப்பவ ரளவிலாதார். (௩௰)

அரவணை யுறங்கு மாய னயனிவர்க் கறியொணுநம்
பரமனற் சரிதங் கேட்டுப் பகற்பொழு தினித கற்றிக்
குரவலர் கோதை யாரங் கூடிப்பின் கூடி யின்பந்
தாநுகர்ந் திரவ கற்றுந் தன்மையர் வரைவி லாதார். (௩க)

பொன்னணி மியத்து கல்லார் புணர்முலை மருப்புத் தங்கள்
கன்னிகர் புயத்துப் பாயக் காமப்போ ராடி யேய்ந்த

§ வேள்வி- ஈகை.

மின்னிடை யிரதி கேள்வன் வெரிநிட வென்றி கொண்டு
சின்னலம் பொருந்த வாணு[illegible]ழித்திருப் பவருஞ் சில்லோர். (௯௨)

தேட்டலந் தருமந் தானந் தெறுதல்வெஞ் சினங்கு ரோதம்
பாடலந் தமிலான் காதை பழித்தல்புன் சமையத் தீமை
யோட †லம் பையின்கை நீரா றொடுங்கல்யோ குழப்போ ருள்ளம்
வாடலங் கனையா ருக்க மருட்டல்லே சியர்கூ ரக்கம். (௯௩)

வெறுப்பன யோகு ழப்போ ரைம்புல வேடர் வாதை
செறுப்பன வுழவின் மாந்தர் செழும்பயிர்க் களைக்கு ழாங்கண்
மறுப்பன மெய்ம்மை நூற்கு மாறுகொண் மயக்கப் புன்னூல்
கறுப்பன சூல்கொண் மேகங் காப்பன வழுவா வாய்மை. (௯௪)

பாலுளோர் பிறலோ கத்தோர் பகருமிந் நகர்ச்சீர் நோக்கிச்
சாலவுந் தமது வைப்பைத் தாந்தனி யிகழ்தல செய்வார்
மாலுறு சமைய நூலின் வழிபுகுந் துழன்றோர் சைவ
நூலின்மாண் புணர்ந்த பின்முன் னூலினை யிகழ்த லேய்ப்ப. (௯௫)

என்னினிப் புகலற் பால திச்சையா விமைய மீன்ற
மின்னொடும் புதல்வர் சூழ விமலனார் விழாப்பே ரிட்டுப்
பன்னிரு மதியும் வீதிப் பவனிவந் தருள்வா ரொன்னி
னிந்நகா வளமி னைத்தென் றனந்தனு மியம்பற் பாற்றோ. (௯௬)

திருநகரப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ௩-க்குத் திருவிருத்தம். [௱௰எ]

---

# சிந்துபூந்துறைப் படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருமலர்ப் பொழில்பாங் காரிம் மாநகர் திருநெல் வேலி
நிருமல னுறைகோ யிற்கு நேர்குண பானே ரில்லாப்
பொருநையந் துறையுட் காசிப் புரவலன் குட்டந் தீர்த்த
பெருமையி னப்பேர் தானே பெற்றதண் டுறைக்குத் தென்பால். (௧)

இச்சகம் புரக்கு மன்னர்க் கிராசதா னியுமெண் கண்ணன்
முச்சகம் புரக்குங் கண்ண னிவர்க்கொரு முதல்வ னாண்

† அம்மையின் கை நீராறு - உமாதேவியின் திருக்கரத்திலுதித்த பொருனை நதி.

விச்சுவ நாதர் தாமே விசாலக்க ணம்மை யோடு
நச்சிவாழ் பதியு மாகுங் கொக்கரை நகர்க்கு மேல்பால். (௨)

பன்னுதுர்க் கேச தீர்த்தப் பதிக்கொரு வடபா லாக
வின்னநால் வரைப்பி னோங்கு மெழிற்றிருப் பதியொன் றுண்டத்
தொன்னகர் நறுங்காப் பைம்பூஞ் சுனைதண்ணென் பழன மோங்கப்
பொன்னமர்ந் தொளிருஞ் சிந்து பூந்துறை யெஞ்ப மாதோ. (௩)

சுந்தர யாக சாலை தொக்கற மோம்பு சாலை
சிந்தலி னிதியச் சாலை சென்னலோ தனததின் சாலை
பந்தவல் வினைக ணீத்த படிவர்தம் பன்ன சாலை
மைந்தரு நலங்கொள் சோலை யலகிலா தாங்கி லங்கும். (௪)

கந்தவே டன்பால் வேடக் காந்தைவந் தணிவா னுள்ளத்
துந்தவா வினைமு டித்த வொருததன்மா முகத்தோ டிம்பர்
வந்திரு மதக டாம்போல் வரங்கடாம் பொழியு நீராற்
சிந்துபூந் துறையி ரண்டு தீரமும் பொழியுஞ் செல்வம். (௫)

§மறையவ னொருவன் றந்தை யென்புமென் பூவா வாய்ந்த
துறையஃ தினமு மங்கட் டொக்குடல் விட்டா ரங்க
நிறைமண ந்தருமென் பூவி னீள்சிலை யாதல் சான்று
வறையுமென் றிடின தற்கொப் பாயதெத் தலமா மற்றால். [௬]

ஆங்குரு வெடுத்தோர் வாழ்ந்தோ ராருயிர் விடுக்கப் பெற்றோர்
வாங்குநான் மருப்பி யானை மகபதி திருநா டாதி
யோங்கிரும் பதவி முற்று முற்றுவாழ்ந் ததன வாவு
நீங்கவிந் துலவும் வேணி நிருமல னுலகு சேர்வார். [௭]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இன்னமா தலத்தோ தருஞ்சிவ தீர்த்த மேலவே யிலையந்துள திதன்பான்
மன்னுமாண் பொருநை கம்பையா றிரண்டு மருவமுக் கூடலென் றொருபேர்
பன்னுவா ரமரர் படிவர்பன் னதிகள் பன்மலர் தூவமுன் னாளும்
பின்னாா றிலையு மிவண்படிந் திடலாற் சிந்துபூந் துறைப்பெயர் பெறுமால்

§ களந்தை நகரினின்றும் ஒருபிராமணன் காசிக்கங்கையிற்போடக்கொண்டுபோன அங்கம் அதுசுமந்தமற்றொருவனால் சிந்துபூந்துறையில் வைத்து அவிழ்த்தபோது தாமரை மலராகவும் கங்கையில் அங்கமாயுமிருந்ததைப்பார்த்து அதிசயித்து மறையவனூர்க்குரைத்துத்திரும்பவும் சிந்துபூந்துறைக்கு வந்தவிழ்த்துப்பார்க்கும்போது தாமரை மலரா யிருக்கக்கண்ட தலம்.

காசியே நெல்லை கங்கையே பொருநை கவின்மணி கன்னிகை தானே
பேசரு சிந்து பூந்துறை யெனப் பின்னுமுண் டாவியை மதியை
மூசாத் தீண்டு காலமா திகளி லிதனிலெந் நதியுமொய்த் தாடு
மாசிலாப் பொருநைத் தீர்த்தங்க ளனைத்து மாடிய பயனிலை தருளும். (௯)

பொருவிலிச் சிந்து பூந்துறை மூழ்கு மொருவன்றன *பூவையின் குருந்ை
மருவுற மூழ்கு வித்தனன் மூன்று வைகலஃ திறத்தலுங் கணங்க
ளருமையின் விமானத் தேற்றியே சிவலோ கத்தமர் வித்தன முன்னாட்
டருகுசஞ் சிதமுஞ் சிதைதரு மைந்தக் காஞ்செபித் தாடினித் தீர்த்தம். (௰)

சிந்துபூந் துறைப்பேர்த் தீர்த்தமீ திவண்வாழ் திவ்விய மூர்த்தியி னிய
ல்லை, முந்துவாய்ந் திடிலைம் முகப்பிரான் றனே முன்னம்யா மாடவி னி
ப்பேர், வந்ததித் தீர்த்தந் தனக்கிதிற் படிவோர் வணங்குவோர்க் கியாதும்
விக் கினங்க, டந்திடா வணங்கைம் முகப்பிரா னுருத்தாங் குதறகு மென
வுற்றான் போலும். [௰௧]

ஈதுடன் றீர்தத மாடுவோர் வினையைக் கவளமாக் கொண்டிருங் கரு
ணைப், போதிரு மதமா வெள்ளமாப் பொழிவான் புரிந்தெழுந் தருளினன்
போலுந், தீதகல பூசை யெவர்பரி சித்துச் செயினும்பன் னிவேதனஞ் செ
யினு, மாதர வுடனகொண் டெண்ணியாங் கெய்த வருளுதற் கமர்ந்தனன்
போலும். (௰௨)

பனைதரு பொருநைப் பாவைநீ ரமுதாய்ப் படர்தலிற் பருகுமாண் பி
னர்மெய், நனைதிரை தெறவா ரமுதுணுந் தேவர் நாணமேற் கதிபெற மு
யன்றாற், றுனைநிய மாதிக் கூறுறு தணங்கு மதிவிடுத் தொழுகலோம் புத
ற்கா, வனைமுனி கடல்வேள் வைகநாப் பணிற்கைம் மாமுகன் வைகினன்
போலும். [௰௩]

எந்தத்தே வரையா யினும்வழி படுதற் கியைபவர் தமிழ்வட மொழி
யிற், சந்தப்பா வினங்கொண் டரும்பொரு ளமையத் தந்துகன் பலசமைத்
திடுவோர், முந்தெத்தே வரும்போந் திணையடி வழுத்து முறச்செவி தழை
யொரு முதலைச், சிந்தித்தேத் திடுதன் முறையதன் பொருட்டாச் சிறந்து
வீற் றிருந்தனன் போலும். (௰௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருளொரு வடிவா யிங்ங னமர்ந்தன்ப ருளத்தும் வாழும்
பரமன்வல் லபைகோ னைங்கைப் பண்ணவன் பதம்ப ராவி
வருணன்செய் தவத்தா லன்னோன் மகிழச்சங் கமஞ்செய் மாதாம்
பொருநையம் பொதியின் மேய புராதன வகைமை சாற்றின். (௰௫)

* இறந்தபூனை கையின்மான்மழுவொடு விமானமேறியது.

வரைமகட னெனை யீசன் மணஞ்செய் விமையத் தேய்கா
றரைவட பாலிற் றாழத் தக்கண முயர்தல் கண்டு
கரையில்விண் ணவரோ யாதி கணமெலாம் வெருவ வெம்மான்
றிரைகடல் குடித்துத் தேவேந் திறப்புகழ் தானைக்கூவி. (௰௬)

இவ்வகைப் புறத்து நந்தம் மெழின்மணங் காண்பா னியாருந்
தவ்வலின் றெய்த றன்றாற் றாதல முயர்ந்துந் தாழ்ந்துங்
கவ்வையுற் றனவா கின்ற வாதலா னமைநேர் கற்றோய
செவ்விதிற் செயவொன் றுண்டு தெரிகுதுந் தென்றி வெற்பின். (௰௭)

இன்னினி நீசென் றெய்தி னேற்றந்தாழ் வின்றி மன்னுஞ்
சென்னெறி படர்க வென்று செப்புமுன் முனிவன் றாழ்ந்தே
பன்னகா பரண யானென் பகருமா றுனது மன்ற
றன்னையா தரிதகேற் கிதோ தகுதிநீ யருளல் வேண்டும். [௰௮]

எனக்குட முனிவ நின்றன் வேட்கைநன் கிசைந்தேம் வேறு
வனத்ததாந் திருநெல் வேலி மாநக ரத்துவந்தே
யுனக்குநா முமையி னோடு முவபயினிம மணக்கோ லந்தை
யனைத்துவா னவருங் காண வருளுதும் போதி யென்றான். (௰௯)

அருள்பெறு முனிவன் பின்னு மையனே மகிமை தங்குந்
திருநெல்லை நகரில் வாழுஞ் செல்வரும் பாண்டி நாடு
மிருண்மல வலியி னீங்கி யின்பவா ரிதியின் மூழ்க
வொருபெரு நதியின் றேற்கிங் கருள்கென வுமாமகேசன். [௨௰]

பொருனையை நினைய வந்து பொன்னடி போற்றி நாயேன
வாவுளங் குறித்த தென்னோ வெனவரன் மறுவி லாத
வொருகுறு முனிபின் னீதென் னோங்கலசென றநநாட் டுள்ளோர்
திருவினோங் கிடகொ டுத்தி சிறந்தநின் னமுதை யென்றான். [௨௧]

பொருனைகேட் டெந்தாய் வெள்ளிப் பொருப்பம ரனைப்பா டணைப்
பருவரை யடையு மாறு பணித்தனை பிழையொன் றிலலா
னரியமா தவத்தன் குமப னயினு மாண்பா லோடே
யிருநிலந் தன்னிற் பெண்பா லேகுத றரும மாயோ. (௨௨)

திருவுளம் பற்றற் கேற்பச் சிறியனே னியைந ரானே
பெருமையென் றடியில வீழ்ந்தாள் பிஞ்ஞக னியம்புங் கும்ப
னுருவரு வில்லா நம்மை யொப்பவ னுவன்றன் பன்னி
பொருவினம் முமையை யொப்பாள் போதலாற் போத லாறே. (௨௩)

நீசெறு மாற்றிற் பாவ நாசமா நியநா நித்தம்
வாசஞ்செய் தலம நேக மாயவன் பதியே ரம்பு
ஞாசில்செவ் வேற்கை மைந்த ஞாலயம் பலகண் டிப்பாற்
காசறு கயிலை நோக்க் கழறுகம் பதியுங் காண்பாய். [உச]

மாசினை நேனு நின்பால் வந்துழுழ் கினரே னம்மைப்
பூசனை புரியுங் கையும் புகழ்பல துதிக்கு நாவுங்
காசினங் துதிகள் கேட்குங் காதுநோக் கிடுநற் கண்ணு
நேசமார் நெஞ்சுஞ் சூழு நீள்சர ணமுமுள் ளோராய். (உரு)

படைகுடி பைங்கூழ் நல்ல பண்புடை யமைச்சர் நண்ப
ரடையா ளுடைய ராகி யவனியிற போக மெட்டு
முடையாய்க் கொடைய ராயபயா ரொருகுடை நிழலிற் காத்துக்
கடையினுஞ் சித்தி சேரவா களிபபினை கெனவம் மாது. [உகூ]

எங்கடம் மீசன் பொற்று ளிணைமலர் மிசைவீழ்ந் தேத்திப்
பெரங்குமா னந்தங் கொணடு நிறறலும பொருனை மாதை
யங்கண னினிது நோககி யமயினை யபனை வந்த
நங்கைநின் னுளத்தெந் நாளு நாமிருக கின்றோ மென்று. (உஎ)

ஆசிகள் பலவுங் கூறி யகத்திய முனியை நோக்கித்
தேசுறு மிந்த மாது தெண்புனல வடிவத தெய்துங்
காசறு நினது செங்கைக் கமண்டலத தேற்றி யென்ன
வீசன துரையின் வண்ண மேற்றவன் பொற்றுளேதகி. (உஅ)

தென்றிசை தன்னை நோக்கிச் செல்வுழிக் காசி காஞ்சி
மன்றுடைத் தில்லை மூதூர் மதுரைகுற் றால நெல்லை
யென்றிவை யாதி யாய தலந்தெரி சித்துத் தென்றிக்
குன்றரு குறையும் பாவ நாசத்தைக் குறுகி யங்கண். (உகூ)

அதிர்விடைக் கொடியான் றன்னை யருச்சித்துப் பணிந்து சிங்கைப்
பதியுறை சிவனே பாவ நாசனே பணிவோர்க் குய்யு
மதிதரு முதலே யிங்ஙன் லவகிடப் பணித்தி யென்னப்
பொதிகையுற் றிசைமேற் கொண்டான் புவிதனைச் சமமாக் கண்டான். (௩௰)

இத்திறத் தாங்க மர்ந்த விருந்தவ முனிவன் செங்கை
வைத்திடு கரகந் தன்னுள் வதிதரு பொருனை மாதை
யுத்தம மணமி யற்ற வுளங்கொண்டு வருணன் செந்தூர்
வித்தகக் குமர மூர்த்தி விரைமலர்ப் பதம்ப ரவி. [௩க]

துவத்தரிற் றோற்றி மெய்மைத் தவத்தருக் கிடமோ யாற்று
மவத்தவில் வலவா தாவி யாவிகொண் முனிவ ரோருஞ்
சிவத்தமிழ் முனியை நெஞ்சிற் சிந்திப்பப் போந்தன் றேனெஞ்
சுவப்பாநின் கருத்த றிந்தா மொலிபுனற் கிறைவ வீண்டு. (௩௨)

பொருளினை மணத்தற் கெவ்வோன் புயமிரா றுடையா னல்குந்
திருவருள் பெறுவா யைங்கைச் செம்மற்றன் சரித முற்று
முறைமுற வுணர்ந்தி றைஞ்ச லுறினெளி தினிற்கை கூடுஞ்
சாதமென் றுரைக்கத் தேருஞ் சால்பினிற் றலைமை யுற்றான். [௩௩]

சிந்துர முகப்பி ரான்சீர் தெரிந்துளோர்த் தெரிந்து ளோரு
முந்தலை கடவி யத்தோன் யாவர்க்கும் வீயா மோகந்
தந்திடன் மறந்தி டான்போற் றனையெலா முய்ய மாரி
யுந்துவான் §மீதே மாரி யுந்துவா னியற்றி னானால். [௩௪]

காதலான் மதவேட் கஞ்சிக் கருத்தழி கின்றே னென்கொ
லேதமி லகத்தி யன்கை யிருங்கமண் டலமா னேனே
லோதரும் பொருளை மாதை யுவந்தென திடம்வை கப்பெற்
றுநா வுடன்சு கித்தெஞ் ஞான்றும்வாழ்ந் திடுவ னன்றே. (௩௫)

நித்தமும் பொருளை மானை நினைந்தவட் கூட வுன்னி
மதநெறி தயிர்போற் சித்த மயங்குவேன் பொதிய மென்னு
மத்திரி யாயி னேனே லவளையென் றலைமேற் கொள்ளுஞ்
சத்தியை யுடைய னாவேன் றவமதற் கிழைத்தி லேனால், (௩௬)

பாருமெண் டிசையு மன்ன பைந்தொடி யன்றி மற்றைக்
காருநன் பொருளை யிக்காங் ககனமும் பொருளை யெந்த
வூருநன் பொருளை மாதா வுற்றுள மலையும் வண்ண
மாரன்மால் செய்தான் மேனாள் *மறுக்கமால் செய்த தோர்ந்தே. (௩௭)

பெருவட வான லத்தின் பெருமையுங் கெடுக்கு நீரி
னரசனென் றோரா னோயா னனங்கனென் னங்க மேவான்
மருவுறப் பொருதான் முன்னாள் வாதனைப் பொருதா னன்னா
னெரிவிழி யொன்றால் வென்றா னஃதிலே னதனால் வெல்வேன். (௩௮)

கயந்தலை மறைப்பூ வம்பு காமன்கை மறந்தெய் தாலும்
வயங்குநீ யம்பாக் காயு மென்பதை மனத்தி னாய்ந்து

---

§ மீதேமாரி- மீது, அம்பு மாரியை.

* மறுக்கமால் செய்ததோர்ந்தே- இராமாவதாரத்தில் சேது அணைகட்டும்போது நினைத்தகாலத்தில் வாராதவருணனன்பேரில் அத்திரந்தொடுத்தது.

பயந்தவன் பயமுற் றானேற் காமத்தீத் தெறமெய்ப் பட்டார்
செயந்தனைப் பெறுவ ரேயோ தேம்பிநெட் டுயிர்ப்ப தின்றி. (௩௯)

காய்தொழில் வெய்யோற் கன்றிக் கலைநிறை மதியே நிற்கு
மேயதென் னைய கோவோர் வெய்யவர் சேர்க்கை யாலே
தூயரும் தீய ராவ ரென்பபோற் சுடர்ப்பா லோர்நா
ளாயவா சனையோ வென்னை யழன்றுநீ வாட்டு கின்றாய். (௪௰)

இருமனப் பெண்டிர் பூப்பி னிறைவனு யொருவன் காத்து
மருவவும் பிறற்குற் றாளாய் வருத்தமுன னவற்குத் தாற்போற்
கருநிறக் கடலே வேட்குக் கடிமுர சாய்மன் னென்னும்
வெருவுற முழங்கிக் காய்வாய் வியப்பிஃ தலதை யென்னே. (௪௧)

இருளிராப் பெயரின் வேறு ரிருங்களிற் றரசே நுங்கட்
குரமிகு *பாகற் கோற லுறுதொழி லற்றால் வெய்யோன்
குறைகடற் படவீழ்த் திட்டாய் குளிர்திரை நதிமான் றந்த
விரகமூர் வேனைத் துன்ப வேலைவீழ்த் திடுவ தென்னே. (௪௨)

தென்றலை விரும்பி யீசன் றென்றலை நணுகி யாடு
மென்றன ரயர்வு தீர்தற கெனிமெனனக் கயர்வு செய்த
னன்றல வெனினுந் தோந்தே ருரிபாக குறநாக் கன்றிக்
குன்றன வணங்கு செயயுங் குணநின தெனமென் காலே. (௪௩)

வேறு.

காயம் படுத லுற்றவநிற் காய விழிந்தான் றனையோர்காற்
காயம் பதனு லடர்ந்தாயேற கடல்சூ ழுலகம் புகழ்ந்திடுமென்
பாயம் பாநீ முரசாக்கப் பார்த்தின் கிருப்பேன் பாலெதிர்ந்த
பரயம் பணலோர் விறலாமோ பாரார் நகையா ராராரே. (௪௪)

வேறு.

பொருளைமா துருவ மென்றும் புந்திவைத் தயர்வா னேர்காற்
றிருவனு ளருகுற் றாளாத் தெரிதலுங் களிப்பிற் சேர்வா
னிருகா மாவிச் சேர்ப்ப வியைதரு §மூற்றங் காணு
னுருவெளி யெனத்தேர்ந் தின்ன லுவரியுண் மூழ்கலுற்றான். (௪௫)

எனில்வேள் கணையா லிவ்வா றிடையுறு தினையு மன்னன்
சேனுயர் பொதிய மோனி திருமொழி நினைந்து தன்கண்

* பாகன்

§ ஊற்றம்—பற்றுக்கோடு

காணமுன் னிற்பான் போலக் கழறுவான் பொருளை யென்பாற்
பூணுத வினது சித்தம் பொருந்துமே லீதே செவ்வி. (சசு)

இல்லையே லாவி வாழே னெழிலினீ ராருந்த லொல்லா
கல்லின்வீழ் நதிக டங்கள் கணவனை யிழந்து வாடும்
பல்லுயிர்க் குணவு தங்கா பாரிலார் கலியின் ருமித்
தொல்லைமா தவனு லெய்திற் றெனும்பழி சுமையாக் கொள்வாய். (சஎ)

இப்பழி மொழிநின் மேல்வந் தெய்திடா தெளியே னெண்ணந்
தப்பிடா தரிதி னேற்ற தவப்பெரு மையினு லென்று
மெப்புவ னமுந்தொ ழப்பெற் றெழிறிகழ் பொதிகை வைகு
மொப்பிலோ யருள்க வென்ன வுள்ளத்துட் சிந்திப் புற்றான். (சஅ)

அன்னவன் சிந்தித் துள்ள மயர்தலோர்ந் தைங்கை வள்ள
றன்னுபா சனையி லீலை யனைத்துமோர்ந் தேத்துஞ் சால்பு
துன்னுவித் தினிதா நாளிற் றென்முனி பொருளை மாதை
மன்னுநீ ரிறைம ணந்து மகிழ்வுற வருளுஞ் செய்தான். (சகூ)

மைப்புயற் குணவ ருத்தி மாநிலக் குணவ ருத்து
மப்பிறை யினிதோர்ந் தேத்து மைந்துகைப் பிள்ளை சீர்த்தி
யொப்பினை யிசவ னத்தி னுறுவர்க்குச் சூத மேலோன்
செப்பிய வாறு நாயேன் றெரிவள வுரைக்கப் புக்கேன். (ருய)

சிந்துபூந்துறைப்படலம் முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ௪-க்குத்திருவிருத்தம் (எகூயஎ)

---

## வியாசருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்திகழ் யுகங்க ளொன்றிற் செறிதுவா பரங்க டோறும்
பார்திகழ் மறைக ளாதி பகுத்துநன் முறைப்ப டுத்தக்
கார்திகழ் மேனித் தேவே வடிவமை வியாசர் காட்சிப்
பேர்திகழ் தாக்க ணேசற் பணிதிறம் பேச லுற்றாம். (க)

மெய்த்தவப் பராச ரன்சேய் வேதத்தை நான்கு பாகம்
வைத்தபின் புராணந் தன்னை வகைமைசெய் திடப்பு குந்தான்
பைத்தலை யாவக் கச்சார் பனைக்கைமா முகவன் றன்னைக்
கைத்தலங் குவியான் வாழ்த்தான் கருத்திலுங் கணியா னாகி. (உ)

ஆகையாற் றுடங்குஞ் செய்கைக் கறிவுகை கூடாது தேங்கி
மூகையா யினனோ வன்றேன் மூடமெய் தியதோ மித்த
மோகையான் மதியைக் கைக்கொண் டோடிற்றோ வென்ன மிக்குச்
சோகவா ரிதியி லாழ்ந்தான் றுணையுங்கா ரணமுங் காணான். (௩)

ஆக்கலைத் தொழிலாக் கொண்ட வண்ணறன் னுலகை நண்ணிக்
காக்கவின் றனையென் றன்னோன் கனைகழ லிறைஞ்சி வாழ்த்த
மாக்கடி முளரிப் புத்தேண் மாதவன் வரவேற் றங்கண்
மேக்குய ரிருக்கை நல்கி †வேசறு முகத்தை நோக்கி. (௪)

கலிவிருத்தம்.

இத்தனை துயருறற் கேதி யாதென
வத்தனார் திருப்புக ழனைத்து மாதியிற்
சித்தியி னருளிய சீர்ப்புரா ணத்தை
யுத்தம வணிபலா வுரைக்கப் புக்கனன். (௫)

என்னுள மயங்கிநா வெழாத தாகியே
யுன்னலு மோதலு மொழிந்த காரணந்
$தன்னமு மறிகிலாத தமிய னின்றனை
முன்னிவந் தனனென முறுவல் பூத்தயன். (௬)

அலருறை யயன்முதன் மூவர்க் காயினு
மிலகொரு மருப்பனை யிறைஞ்சி டாதுநீ
ருலசிடைச் சிறுதொழி லுஞற்றப் புக்கினு
நிலைபரந் தன்னமு நில்வி டாதரோ. (௭)

பொக்கமின் மனத்தராய்ப் போற்று வோர்க்கெலாம்
விக்கினங் கெடுத்தருண் மேவச் செய்பவன்
பொக்கமுண் மனத்தராய்ப் போற்றி டார்க்கெலாம்
விக்கினங் கொடுத்திருண் மேவச் செய்பவன். (௮)

மூத்தவன் யாவரு முன்னர் முன்னரோ
யேத்திடத் தக்கவ னிவனை மெய்மமனங்
கோத்தவாக் காதியாக் குளிரு மன்பினோர்
மாத்திரை யாயினும் வழிபட் டாயிலை. (௯)

---

† வேசறு முகம்=துக்கநிறைந்த முகம்

$ தன்னம்-அற்பம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

†முன்னமோர் தரிக்கும் வேத முழுப்பொருள் பகுத்த காலை
யன்னவே ரம்பன் றன்னை யன்பினேத் திலையின் றேனு
நன்னரோ முதலி ருத்த னவிறுதி யாக வெண்ணி
யின்னனின் வயிற்பொ ருத்தா திருந்தன னுணர்வின் மேலோய். (௰)

எண்ணிய யாவும் யார்க்கு மினிதினின் முடிக வென்றே
பண்ணியன் மறைகட் கெல்லாம் புகர்கண பதியாய் நாளு
நண்ணிய பிரண வத்தை நாதன்முன் னமைத்தா னற்றூற்
புண்ணிய மனுமுன் னீதைப் பொருத்தினர் தால்வல் லோரே. (௰க)

அகம்புற நிறைவா யென்று மாதியா யநாதி யாய்மா
முகங்கொளெங் காத்தெம மானை முதல்வழி படாதுன் னூக்கத்
தகம்பல வூக்கி னுனு முரைத்திட முடியா தென்றுஞ்
சுகந்தரா தகங்கொண் மைந்தா தூயவன் [illegible]னை யேத்தி. (௰உ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

ஏதமிக் குனதுள் ளுறைமயக் கொழிந்தாங் கினிதருள் பெறுகென வுணர்ந்தந், நாதனுக் கியற்று பூசையின் முறையை நவிலகென விசந்தன ன் வியாதன், போதனுட் களித்துத் தீக்கையன் னவற்குப் புரிந்திருண் மலமறுத் துளத்தார், சோதியை விளக்கே காக்கர மனுவைத் துணைச்செவி யயிராய் பகர்ந்தான். (௰௩)

பகர்ந்தவம மனுவை வியாதனுட் கொண்டு பருவமீ ராறள விருந்தோர், சுகந்தமா வனத்துக் கணித்தனு மைங்கைத் தோன்றலோர் கோடியா தவரின், மிகுந்ததே சுருக்கொண் மெபன்மா முகத்து மேவிமுன் னின்றன னோக்கித், தருந்தவ னடுங்க வஞ்சனீ வேட்ட தருவலென் றெந்தைசாற் றுதலும். (௰௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

விரைவினி லெழுந்தான் சூழ்ந்தான் வியன்கரங் குவித்தான் சென்னி
குரைகழ றெழுதான் வாக்குக் குழறநெஞ் சுருகக் கண்ணீர்
திரைபுர ளாற்றின் வாரத் திகழுந்தக் காண மொன்றுய்க்
கரையிலா னந்தத் தேத்திக் கனிந்தன னினைய சொல்வான். (௰௫)

---

† முன்னமோர்தரிக்கும் வேதம்=முதலிற் பிரணவமந்திரமாகிய ஓங்காரத்தைப் பொருந்திய வேதம்

ஆலமே யமுதா வுண்ட வண்ணலும் பூசை யாற்று
மூலகா ரணனே வேத முதல்வனே முக்கட் டேவ
சாலநா ளடியேன் செய்த தவத்தினுக் கிரங்கி யிக்காட்
கோலநின் பாத சேவை கொடுத்தனை தூய ஞானேன். (௰௬)

எந்தைநின் பாதப போதென் னிதயபீ டத்தி ருத்தி
முந்தநான் மொழிய மூன்று மூவறு தொகைப்பு ராணம
புந்தியில் விளங்கு மாறு போதநன் குதவி யன்பு
தந்துபே ரின்ப மெய்துந் தகைமையு மருளல் வேண்டும. (௰௭)

கருணைவா ரிதியே யீதென் கருதநதென விரபப வவ்வா
றொருமருப புடைய வள்ள லுதவிப்பின் னருமீ தோதும
பெருமைசேர் முனிவ வெனுசீர் பேசிடா திருந்த தான்முன்
னருமையாம் புராணஞ சொலலு மறிவைநீ யுறுறு யல்லே. (௰௮)

பின்புநம் மான்மி யததைப பிரமனு லுரைக்கக் கேட்டுத்
துன்பகன் றிடநீ நோறறுய தூயநம மருள்பெற றேங்கு
மன்பனு தவினீ ரொன்பான் புராணததோ டேபபு ராண
மென்பதும புகல வல்லோ னுதியென் றிசைத்துச சென்றான். (௰௯)

எண்சீரகசழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமெலா நனிவியபப வரமே வுற்று னுயர்தவன்யா வையும்புகலு மொண்மை பெற்று, னலமலியவ் வனததிடையா லயமி யற்றி நால்வா யைங் கரந்தவனை ஞானக குன்றை, மலமிலியைப் பிரதிட்டை செய்து வேத வாயமுறையிற் பூசனையும வழாது யற்றிப, புலவருமற் றெவருமி கப போற்று கிவ்வா புராணமக லொனை ததனைததும புகன்று னன்றே. (௨௰)

வியாசருபாசனைபபடலமுற்றுப்பெற்றது.

ஆகபபடலம ரு-க்கு திருவிருத்தம. (௱௮௭)

# சோமகாந்தனுபாசனைப்படலம்

அறுசீரகசழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அத்திமா முகனைப் பூசை யாற்றிநற் றவவி யாத
னுத்தம வரமபெற் றுய்ந்த வுரைத்தன முளத்தெந் நாளுஞ்
சித்தியைங் கானை யுனனித் தீதறு சோம காந்தன்
முத்தியை யடைந்த காதை முறைமையி னுறைதல் செய்வாம. [௧]

மூவுல கத்தின் மேலா முத்திக்கு வித்த தான
பூவுல கத்து மேன்மை பொருந்துபல் பொருள்சேர் தென்றாழ்

காவுலாந் தடமுஞ் செந்நெல் கன்னனி ளரம்பை தூன்று
மாவயல் களுஞ்சூழ் சௌராட் டிரமெனு நாட்டின் மாதோ. (௨)

விண்டொடு மெயில்சூழ் தேவ நகரொன் றுண் டதற்கு வேந்தன்
றிண்டிறன் மேருத் தோளான் றிருந்தலர்க் கரியே றன்னான்
கொண்டலைப் பழித்த கையான் குல்வுமன் பதையின் பப்பே
றுண்டகங் களிக்க நேமி யுருட்டிமண் பூரக்கு நாளில். (௩)

முந்திய பிறப்பிற் செய்த தீவினை முழுது மொன்றாய்
வந்தது போல வன்னோன் வனப்பொளி ருடம்பிற் குட்ட
வெந்துயர் வினைநோ யெய்த வேண்டுபல் சிகிற்சை செய்து
மந்தவன் னோய்தீர் வில்லா னமைச்சர்க்கூஉ யினைய சொல்வான். [௪]

உலகெலா நெறியிற் காத்தே னென்னலர்ப் பொருது வென்றே
னல்கிலா மகங்கள் செய்தே யமரர்கட் கவிக ளீந்தேன்
பலபதச் சாலை கோலிப் பல்லுயிர் வருத்தந் தீர்த்தே
னிலைபெறு தவனந் தீர்ப்பா னீர்நிலை முதல தொட்டேன். [௫]

அறம்பல வினைய வாற்றா லாற்றியா னுலர்க்குத் தாயாய்
மறங்கெடுத் தெவர்க்கு மெய்தும் வன்றுயர் புறங்கண் டேனைப்
புறந்தரச் செய்தென் மெய்யைப் புண்பட வருத்தி வாட்டி
நிறங்கெடுத் திடுநோய் வெல்ல நெறியொன் றுங் காணே னந்தோ. [௬]

இவ்வுடல் கொண்டு வையத் திருத்தலின் மாய்த னன்றா
மவ்விதி யில்லை யானி னங்கைவா ளாலீர்ந் தேனுந்
தெவ்வெனத் தெறுநோய்க் கூடாஞ் செடியுட னீப்பே னென்னி
னெவ்வுறுப் பாவ மெய்து மாதலி னொழித்தொன் றோர்ந்தேன். [௭]

பன்னமார் வனத்திற் சேற றகவெனப் பண்பின் மிக்கி
ரென்னின்மே தகுசால் புள்ள விளவர சேம கண்டன்
றன்னையிவ் வுலக பாரந் தாங்குமன் னாகச் செய்வே
னன்னவன் பாலென் போலன் பாற்றிவேந் தியல்செய் கென்றா. (௮)

சொற்றலும் வீரணத் துன்பாற் சோர்ந்தன னணையின் மேல்வீழ்
வுற்றன னேனை யோரு முற்றன ருறுகண் சிவ
னற்றவ ராறர் நால்வ லமைச்சர்க டேறிச் சோக
மூற்றவு மொழித்தார் வேண்டு முயற்சிசெய் தெழுந்தான் மன்னன். [௯]

அன்னவ னடியி னால்வ லமைச்சர்தாழ்ந் தறைவா ரைய
வுன்னையா ரணியத் துய்ப்பித் துன்மனைக் கடையாம் வாழே

நின்னரு மகனை மன்னு நிகழச்செய் நிழல்போல் யாமு
மன்னுவ நீயே கற்கு மதிக்குங்கான் சாத மென்றார். (௯)

பொருவினன் மனையி தாய்ந்து போந்திரு தலைப்புட் போல
வருகலன் நீதொன் றாக மதித்துவாழ் நம்பி லென்னுள்
ளுருகவென் றனைநீ யிங்கிட் டரியவ வனத்தி னேகத்
திருவுளங் கொளினுன் றஞ்ச றிண்ணநிற் பிரியே னென்றான். (மக)

இனையவை நிகழத் தந்தை யிடர்பொரு திருங்கா னேக
நினைதலு மமைச்சர் தாமு நீங்குற துழைஇசெல் சீரு
மனைசுதன் மையுமபின் செல்லு மமைதியுந் தன்னைப் பூவின்
மனமகிழ்ந் தரசா வைக்க மதித்தமைத் திடபு ணர்ப்பும். (மஉ)

தவவுணர்ந் கேம கண்டன் சாற்றுவா னிரவி சோம
னவிரதா வானம வேந்த னமைசசனில லாத நாடு
றுவல்பதி மகனில் பூவை கோன்றமு லவியில வேள்விக்
குவமையாத் தந்தை தாயா முங்களோ வனததுயப் பித்தே. (மங)

இச்சகம் புரக்க வெண்ண மிசைந்திலே னின்றோர் தம்மை
யச்சமுள் ளன்பி னேடு பூசனை யாற்றிப் போற்றி
நச்சுட லிறந்த பின்ன ரீமநன் கடனி யற்றி
யுச்சமாம பிதிரு லோகத் துவப்புற வாழச செய்வல். (மச)

புத்திரன் கடமை யீதே யலலது புவியி லாசை
வைத்துமா்ன் மூழ்க னன்றோ வாழ்வொரு நிலையோ நீர்சென்
னித்தமாம வழியை யானு நினைந்துடன் செல்வே னென்று
ளுைத்ததன் மகனைப் பார்த்தவ் வாசனி துரைக்கு மன்னே. (மரு)

வேறு.

பிள்ளைப் பருவத் துளையலை பேதைக் குணத்திற் பேசினையென்
றள்ளப் படாத பனுவலுரை தானே யுணர்ந்து தகுதியுட
னுள்ளக் கனிவா லின்றோரை யோம்பித் தன்மம் பலவியற்றி
விள்ளற் கரிய பலிபிண்ட மிடுகன் மகனுய்வியனுலகம். (மசு)

மெச்ச பவனே யாயிடினும் விரும்பு தந்தை தாயருளை
யச்ச மொடுமுள் ளன்பினொடுந் தவறு தணிபோ லாதரித்தே
யுச்சி மேற்கொண் டொழுகுதற ஞயர்வாந் தன்ம மாதலினு
ளுைச்சி வனையிந் நகரிருந்து றனித்த கேள்வி யமைச்சரொடும். (மஎ)

புனித §விப் பிரனங் கொருவனு றுறநீ போக்குபழ் றனுமவன் வெருவி,
*யினிமொழி நனிசொற் றிரந்தனன் கேளா தியமனி னவனுயிர் குடித்தாய்.

அக்கணம் பிரம கத்திநிற் பிடித்தாங் கழலெனச் சுடவிட ரனைத்தும், புக்
கன கிழமும் பொருந்திய தாற்றுய் பொருப்பன நிதிகளோ டியானுன், பக்
கமேய் குவலென் றேரிராத் தூதுன் பாரிபால் விடுத்தனை யவனு, மொக்
கனு மோர்ந்து வேந்திஃ தழியி னொறுக்குமென் றெணியிசைந் திலரால்.()

அன்றிரா வேயத் தூதுமீண் டவள்கோ ளறைதல்கேட் டினியறம் புரித
னன்றென வுணர்ந்தா யுனதியல் பறியா நான்மறை வேதிய னொருவ, னுன்
றனை யிரப்ப வேண்டுவ வளித்தே யினுமுறு வனைக்கொணர் கென்றுய்,
சென்றவன் சிலமா தவர்க்கொணர் தனுநின் செயன்முழு தறிந்தவன் னவ
ர்தாம். (உ௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சிரித்திது மொழிவார் நீயோ தெரிந்திலோந் தீயோ யையோ
கருத்தினுண் ணினைநி னைந்தோர் கண்டவர் கேட்டோர் சொன்னோர்
வருக்கமு மூழி தோறும் வன்னர குழப்ப ரோநீ
விருப்புடன் கோடி. செம்பொன் கொடுக்கினும் வேண்ட லில்லேம். (உ௭)

தருமநீ விழைபி னின்ன தனிவனத் துள்ள தோர்சார்
நிருமல கணேசன் கோயி னிகிலமுந் தருப்பூண் டாதி
பெருகிமொய்த் துளக ளைந்து பிறங்கிடச் செய்கென் றுன்பால்
வருபவ மறநீ ராடி மறையோதித் தூய்து சென்றுர். (உ௮)

மனைவியுஞ் சுற்றத் தாரு மலைந்துகை விட்ட வாறும்
புனிதாங் கிகழ்ந்த வாறும் புன்கணே யலைக்கு மாறுந்
தனியுணர்ந் துயர்க ணேசன் றளியினற் பணியே யன்றி
யெனையுறு துயர்நீங் காவென் றெண்ணியெய் தினையக் கோயில். (உ௯)

எண்ணலர்ப் பொருப டைக்கை யிறைவவங் கெனையாட் கொள்ளு
மண்ணலம் முருவங் கண்டா யாடினுய் தாழ்ந்தாய் சூழ்ந்தாய்

---

§விப்பிரன்-கனவர்த்தனென்னு மோரந்தணன்.

*இனிமொழிநனி சொற்றிரந்தனன். என்பது அவ்வந்தணன் முன்னொரு கன்னிகையைக் கலியாணஞ்செய்து அவள் புத்திரப்பேறில்லாமல் இறந்துபோனதையும், பிதிர் கருமங்கட்குப் பிள்ளைவேண்டுமென்பதற்காக இரண்டாவது ஒரு கன்னிகையைக் கலியாணஞ்செய்திருப்பதில் அவளும் பிள்ளைப்பெறாத பருவத்தினளென்றும் அதற்காகத் தன்கையிலுள்ள பொருள்களை வாங்கிக்கொண்டு உயிர்ப்பிச்சை தரவேண்டுமென்றுந் தாழ்மையாகக்கேட்டுக்கொண்டான்.

பண்ணிறை மறைக ளென்னப் பாடினுந் தட்ட மிட்டாய்
கண்ணறல் பொழிந்தாய் நின்றாய் கன்மனங் கரைத்தா யிப்பால். (௩௰)

பழுந்துறு தளிக்கு வேண்டும் பணிமுடித் துற்ச வாதி
வழுவில்பூ சனைசெய் வித்து வைகிடு நாளில் வாழ்நா
ளொழியவக் கியமன் றூத ருனைப்பிடித் தீர்த்துத் தாக்கி
யிழிவுபல் வேறி யற்றி யிரும்பகட் டிறைமுன் னுய்த்தார். (௩௧)

அன்னவ னினது நன்மை தீமையா வையுமா ராய்ந்து
முன்னவன் பணியி னுனின் முறபவத் தநேகந் தேய்ந்த
வென்னினுஞ் சேட மண்மே லிறன்மா பவற்றிற் றீதோ
நன்மையோ முதனீ துய்கக நயந்திட லுரைத்தி யென்றான். (௩௨)

முதனல னென்று யற்றான் முடிகெழு வேந்தாய்ப் பின்னர்த்
துதைதொழு நோய னுய்வை யினியிது தொலைய வேண்டின
மதகய முகற்போற் றென்றான் மற்றவன் மொழியிற் றேறறம
பதிதரா தையங் கொண்டான் பார்த்திப னனைய நீங்கால். (௩௩)

வஞ்சி விருத்தம்.

ஈட்கு காவலன், வெட்க மூர்மெயின்,
முட்கள் போலும்வாய்ப், புட்க டோன்றியே. (௩௪)

ஆயி ரத்நன, வாயிற் கொத்தின,
சாயி ரத்தமவாள், பாய்புண் ணொத்தனும. (௩௫)

வீக்க ளாற்றிடர், நீக்கொ ணான்முனி,
வாக்கின் மாலின, லூக்கு மீதென. (௩௬)

தஞ்ச நின்பதம, வஞ்ச னுஞ்சிடக்,
கெஞ்சு கின்றன, னஞ்ச லென்றருள். (௩௭)

அன்னை தாதையா, யென்னை நேர்குவார்,
மன்னு வான்புவி, தன்னி லும்மிலேன். (௩௮)

மல்லன் மோனியே, நல்ல பார்வைநல்,
கில்லை யாயினன், செல்லு மாறுனேன். (௩௯)

பழுதி றாயனே, யிழுதை யேனினி,
யழியொ ணாவகை, மொழிய வேண்டுமால். (௪௰)

என்ற ரற்றியே, துன்று கொற்றவ,
னன்று றத்துதி, நின்று சொற்றனன். (௪௧)

முதல்வன் வெந்துய, ரிதயங் கொண்டனெம்,
துதகங் கண்டாச், சுதன்மை கெஞ்சுமால். (௬௨)

ஞாலத் துத்தம, சீலத் துற்றவ,
தாலிப் பிச்சைசீ, பாலிப் பாயெனு. (௬௩)

உந்தி மென்றுகின், முந்தி யேந்தினுள்,
சிந்தை வெந்துயர், நைந்த முங்கினுள். [௬௪]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

துன்னிடர் தொலைத்தா ளென்னத் தொழுதிரங் தனர மைச்ச
ருன்றுனை வாய்மை தேறு துறுகணே யுறுவாற் காத்தா
ளென்னவே யனைவரும் கூற விருந்தவ னிரங்கிப பின்னு
மன்னவற் பாரதுன் *னும்மை வழங்கினங் தெளிய கில்லாய். (௬௫)

அனையதா னனிதுன் புற்று யஃதற விரும்பின் வேந்தே
யுனதயிரப் பொழித்தி யென்றங் கெழுப்பின னேருங் கார
மினையதிற் புடக ளெல்லா மிரியத்தன் காக நீரை
முனிவா னிறைமெய் வீச முற்பவ முருக்கொண் டென்ன. (௬௬)

குழிவிழிப பூத மொன்று குறுகிமன் னவனை நோக்கி
யழிவுமுன் னெனகவி ழைததா யன்னதிண் டிறல்காட் டின்றென்
றிழிவுறாத் தடா மேலோ னிறைமுன்விப் பிரனைக் கொன்ற
பழியிஃ தெனதமேர்ந் தன்ன பசாசைமுன் னதட்டிப் பின்னர். (௬௭)

வெருவலை கதிநிற் கீவல் பூதமே விளங்கிச் சூதத்
தருவினீ டுனையிற் சார்தி யெனலுமவ் வாறு சாரப்
பெருமரத் தோடு பேயு மெரிபடப் பினரப் பூத
மொருபெருந் தேவ னுயவ் வுயர்தவற் பணிந்து கூறும். (௬௮)

இன்னவேந் தெனைமுன் கொல்ல விவற்பிடித் துழந்தே னிந்நா
ளின்னது சேவை யாலிங் கீணலம் பெற்றே னென்று
னன்னபோ திறைவ னேக்கா லாங்குறு மானத் தேறித்
துன்னினன் கதியி னிப்பாற் பிருகுமா முனிவன் சொல்வான (௬௯)

வெந்திறற் சாயை வேந்தே வெந்தது கண்டா யைங்கைச்
சுந்தரன் சரிதங் கேட்கிற் றுன்புசெய் தொழுநோய் தீருஞ்
சந்தவீ டெய்து மின்ன தகைமைசேர் மருந்த லாதென்
புந்தியில் வேறு காணேன் புனல்படிந் திவண்வா வென்றான். (௭௰)

[௩௰], *உம்மை-முற்றும்மை [illegible]

திருபனீ ராடி மேனி நீறணிந் தக்க மாலை
திருவுறப் புனைந்த ணைந்தான் சீர்தரு தவத்தி னூன்ற
பிருகுமா முனிசங் கற்பம் பேசினன் பேச லோடு
முருவிடைத் தொழுநோய் கொண்டா னுடலஃ தொழியக் கண்டான் (௫௧)

காணரும் வியப்புக் கண்ட காவலன் முனிவன் பாத
தாண்மலர் தொழுது வாழ்த்த நன்மனை யமைச்ச ரேனோர்
பூணணி விம்ம வின்பப் புணரியுண் மூழ்கி மேலோய்
மாணிப முகவன் சீர்த்தி வருக்கவென் றடிதாழ்ந் தாரால். (௫௨)

மாதவ னேக தந்தன் மலர்ப்பதங் கருத்தி னுன்னி
யோதினன் புராண மன்ன னுவப்பொடு கேட்டு மன்ன
னாதரம் பெருகப் பாரா யணஞ்செய்தா னோராண் டைங்கை
நாதனல் லருள்பா லித்து நவிலிருங் கணங்கண் மொய்ப்ப. (௫௩)

ஒளிவளர் விமான மொன்றங் குய்ப்பமா தவனை யேத்தி
யளிவள ருளத்து மன்னன் மனைமதி யமைச்ச ரோடுங்
களிகொள விமானஞ் சேர்ந்தா னன்னது ககனஞ் செல்கால்
வளமலி தன்னூர் கண்ட சுதன்மைமன் னவனை நோக்கி. (௫௪)

வாவெதிர் நோக்கி வாழெம் மைந்தற்கா ணாத கன்றூற்
பொருவரு துன்பத் தாழும் பொய்யல மெய்யே காட்சி
பெருமையி னவற்கு நக்கிப் பின்னர்நாங் கதியிற் சேற
லருமைநா யகனே தக்க தாமென வறைந்தான் மாதோ. (௫௫)

அன்னது கணங்கள் கேளா வரசநின் மைந்தற் கின்னா
வன்மைசெய் கருத்துண் டேலிங் கலமலி விமானந் தன்னை
யுன்னகர்க் கணித்தா வுய்த்து மென்றவ்வா றுய்ப்பத் தன்பான்
மன்னுமர் திரளை மன்னன் மகிழ்ந்துதன் மகன்பா லுய்த்தான். (௫௬)

அன்னவர் கடிதி னேகி நிகழ்ந்தமை யனைத்து மன்னர்
மன்னவன் மகற்கி சைப்ப மகிழ்ந்தெழுந் திறும்பூ தெய்தித்
தொன்னக ருள்ளா ரெல்லாஞ் சூழ்தர விரைந்து சென்று
தன்னிரு குரவர்க் கண்டான் றாழ்ந்ததா தையைப்பார்த் தெந்தாய். (௫௭)

தனித்துனைப் பிரிந்து வாழே னினியென்றான் றலத்தார் தாமு
மினித்தனை வாழ்வி லாசை யிலையெமக் குய்தல் வேட்டே
மனத்துயு மொழிப்பா னல்வாய் மாமுக னுலகிற் சேர்ப்பாய்
கனதநினைப் பழிக்கும் வண்மைக் காவல வென்று தாழ்ந்தார். [௫௮]

தன்னரு மகனு நாக ரீகருஞ் சாற்றல் கேட்டு
மன்னவர் மன்னன் மாழ்கி மாமுக னுலகிற் சேர்த்த
லென்னது தாமோ நீவி ரியற்றிய தவப்பே றுண்டே
லன்னவ னுலகந் தத்தி லடைந்தருள் பெறுவீ ரென்றான். [௯]

இன்னவை கணங்கள் கேளா விரங்கிமன் னவநின் றோன்றன்
முன்னர்முன் னவனை யேத்தி முற்றிய பயனு லன்னோன்
றன்னுல கத்தி னுய்க்குந் தகவின னாகி நீவிர்
துன்னுமிவ் விமானத் தேறச் சுதந்தா னுனன் றேற்றம். (௰)

தனிநகர் மாக்க ளெந்தை சரிதங்கேட் புறினுங் குய்க்கும்
புனிதரா குவா வர்க்குப் புகலவு மமைய மீதன்
றெனினுமன் னதுப யக்கு மியல்பிற்றோர் வாய்மை யுண்டே
துனைவினை துதுமென் றியார்க்குந் துயரற வியம்பு மன்றே. [கக]

புவியுற்றுத் தீர்த்த மேன்மை பொருந்திய கங்கா தீரத்
†தவிமுத்தத் தைங்கை வள்ள லமருமா வரண மேழிற்
சவிமுற்று மெண்ணேழ் மூர்த்தங் கொண்டநா மங்க டம்மைச்
செவிமுற்ற நயந்து கேட்கிற் சேர்வனாங் கான்வைப் பென்னு. [கஉ]

---

நாகரீகர்-நகரவாசிகள்.

†அவிமுத்தத்தைங்கைவள்ளல மருமாவரணமேழிற்- சவிமுற்று மெண்ணேழ்மூர்த்தங் கொண்ட நாமங்கள், காசிக்ஷேத்திரத்தின் கண்ணுள்ள எழுவகை ஆவரணங்களில்.

முதலாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
துண்டிவிநாயகர்.
துர்க்கைவிநாயகர்.
அர்க்கவிநாயகர்.
பிரசன்னவிநாயகர்.
வீமவிநாயகர்.
சந்திரவிநாயகர்.
ஆறு.

இரண்டாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
சித்தரூபவிநாயகர்.
இலம்போதரவிநாயகர்.
கூபதந்தவிநாயகர்.
சலாடகவிநாயகர்.
குலப்பிரிடவிநாயகர்.
சதுர்த்திவிநாயகர்.
பஞ்சமிவிநாயகர்.
முண்டவிநாயகர்.
சமுகிகவிநாயகர்.
விடங்கவிநாயகர்.
நிசவிநாயகர்.
இராஜபுத்திரவிநாயகர்.
பிரணவவிநாயகர்.
உபதாபவிநாயகர்.
பதினொன்று.

மூன்றுமாவரணத்தின் மூர்த்தங்கள்.
வக்கிரதுண்டவிநாயகர்.
ஏகதந்தவிநாயகர்.
திரிமுகவிநாயகர்.
பஞ்சமுகவிநாகர்.
ஹேரம்பவிநாயகர்.
விக்கினராஜவிநாயகர்.
வரதவிநாயகர்.
மோதகப்பிரியவிநாயகர்.
எட்டு.

நான்காமாவரணத்தின் மூர்த்தங்கள்.
ஏகோபயப்பிரதவிநாயகர்.
சிங்கமுகவிநாயகர்.
கூடாநிதாக்ஷவிநாயகர்.
க்ஷிப்பிரப்பிரசாதவிநாயகர்.
சிந்தாமணிவிநாயகர்.
தந்தவக்கிரவிநாயகர்.
அபிசண்டிவிநாயகர்.
ஊர்த்துவாண்டமுண்டவிநாயகர்.
எட்டு.

ஐந்தாமாவரணத்தின் மூர்த்தங்கள்.
மணிகர்ணவிநாயகர்.

அருட்டரு மெண்ணேழ் மூர்த்த நாமமு மறைந்த கேட்டப்
பெருநகர் மாக்க டாமு மமரிற் பிறங்கி மான
மருவிகல் லமைச்சர் வேந்தின் மனைசுத னோடுமாங் கெய்திப்
பெருருவில்சா மீப மென்னும் பதவியிற் பொலிந்து வாழ்ந்தார். (சுங)

காவலன் றனியே சம்பன் கருணையா லெழிற் சாரூப
மேவியா தவன்றே சுற்று விளங்கினன் னினைய் வாற்றா
லாவலி னிப்பு ராண மருசித்தோர் படித்தோர் கேட்டோர்
யாவரும் பொருள்க ணன்கு மடைகுவ ரெளிதின் மாதோ. (சுச)

காசியின் மூர்த்தங் கொண்ட கணேசனார் நாமங் கேட்டோர்
பாசவல் வினையி னீங்கிப் பரகதி யடைந்தா ரொன்னி
லாசையோ டாங்குச் சென்றே ரவனொளி ருருவங் கண்டோர்
பூசனை புரிந்தோ ரெய்தும் பொருவில்பே றுரைக்கற் பாற்றே, (சுரு)

சோமகாந்தனுபாசனைப்படலம் முற்றுப்பெற்றது,

ஆகப்படலம் சு-கரு திருவிருத்தம். [உ௱௫௰உ]

## மூவருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பிருகுமா முனியைச் சார்ந்த பெற்றியாற் சோம காந்த
னொருமருப் பினன்சா ரூப முற்றிடு திறனீ தன்னுன்
திருவடி வழிபா டாற்றித் திசைமுக னாதி மூவர்
பொருவின்முத் தொழில்கைக் கொண்ட புதுமையைப் புகல லுற்றாம். (க)

---

ஆசாசிருட்டிவிநாயகர்.
கஜகர்ன்னவிநாயகர்.
கண்டாவிநாயகர்.
சுமங்கள்விநாயகர்.
மந்திரவிநாயகர்.
ஆறு
ஆறாமாவரணத்தின்
[illegible] மூர்த்தங்கள்.
மோ[illegible]விநாயகர்.
சு[illegible]விநாயகர்.

துன்முகவிநாயகர்.
கணபவிநாயகர்.
அபரவிநாயகர்.
ஆக்கினைவிநாயகர்.
துவாரவிநாயகர்.
அவிமுத்தவிநாயகர்.
எட்டு.
ஏழாமாவரணத்தின்
மூர்த்தங்கள்.
ஆமோ[illegible]விநாயகர். [illegible]

பாகீரதவிநாயகர்.
அரிச்சந்திரவிநாயகர்.
கபர்த்திவிநாயகர்.
பெந்துவிநாயகர்.
சனகவிநாயகர்.
ஆறு.
ஆகமூர்த்த நாமங்கள்.
ஐம்பத்தாறும்.

முன்னொரு பிரளயத்து மூவர்க்கு முதலா மேலோன்
மன்னுயி ரனைத்துந் தன்பால் வந்திளைப் பாறும் வண்ணந்
பன்னுசங் கரித்த லாக வொடுக்கிப்பின் படைப்பா னெண்ணித்
துன்னறி வுருவாய் நாமம் வக்கிர துண்ட னாகி. (௪)

முக்குணத் தயன்மா லீசன் மூவரை முதற்ப டைத்தான்
றொக்கவர் தமையிவ் வாறு தோற்றல்செய் முதலைக் காண
வொக்கநற் றேவ வாண்டா யிரமுறு நோன்பி யற்ற
மிக்கவர்க் கெதிர்தோன் றுற்றான் வக்கிர துண்ட மேலோன். (௫)

கலிநிலைத்துறை.

புகலு மத்தனி முதல்வனைக் காண்டலும் புகழ்ந்தே
யகில மியாவையும் படைத்தளித் தழித்திடு மமல
சகல தத்துவ மாயினுந் தத்துவா தீத
பகவ புங்கவ கணேசநின் பதமபணி குதுமே. (௬)

ஆதி மத்தியீ றல்லவ வகளங்க வரிய
மாத வத்தருட் கோயிலா வதியும்வா னவமெய்ப்
போத வானந்த வடிவுகொள் பூரண வலவை
பாதி யானவ கணேசநின் பதம்பணி குதுமே. (௭)

*நவமெ னப்படும் வடிவிற நவவிடா நனுகா
தெவர்நி னைப்பினு நினைத்தவாங் கருள்பவ விறைவ
புவன மெத்தனை யத்தனை யும்புரப் பவவெம்
பவம றுப்பவ கணேசநின் பதம்பணி குதுமே. (௮)

வாத வக்கிர துண்டமுக் குணங்களில் வரனை
யுாமு றுத்திரா சதத்தினு லோங்குசாத் திகத்தா
லரனை மிக்கதா மதத்தினு லரிதனை யளித்த
பரம செக்கர்மா மேனிய வெனப்பழிச் சினரால். (௯)

இன்ன வாறுதோத் திரிப்பவக் கிரதுண்ட விறைவன்
பன்னு மூவிர்கா ணீவிரிங் ஙனமெமைப் பரவிச்
சொன்ன மேன்றுதிக் குவந்தன மித்திறந் துதிப்போ
ருன்னும் யாவையு முதவுது முறைமினும் வேட்கை. (௰)

---

*நவமெனப்படும் வடிவாவன- பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம்.

தருது மென்னவம் மூவரு்ந் தாழ்ந்துமி னவுமின்
அருகு ளத்தாய் நின்பதந் தழுவலன் புந்தப்
பெருகு பத்திமை தந்தெமைக் காத்தலே பெரியோ
யருமை யாகநீ யெங்களுக் கருளுநல் வரமாம. [௯]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னலுங் கணேசன் வேத னிராசதத் தாக்க மாய
துன்னுசத் துவத்த ளிக்க விறைதமத் தொடுக்க வென்று
பின்னுமத் தொழிற்கு வேண்டும் *பேருணர் வாற்ற லெல்லா
நன்னரி னருளிச் செய்தா னைமுக னிறைஞ்சி யெந்தாய். (௰)

படைப்பிய றெளிய வெற்குப் பகரென விசுவ ரூப
மிடற்பட வெடுத்துத் தூங்கும் வியன்றுதிக் கையின்வ ழித்தா
யுடற்குளுய்த் திருவர் தாமு முடன்புகத் தனத கட்டிற்
றொடக்குறு மண்ட பிண்ட சராசர மனைத்துந் தோற்றி. [௰௧]

காணுமா றருளிச் செய்து கமலனை யத்து வாரத்
தேனுற விடுத்து மற்றை யிருவரை யிரண்டு காதின்
மாணுறு துவாரந் தன்னால் வாவிடுத் தனன்பின் வேதாப்
பூணுமோர் தருக்கா லன்னோற் போற்றிடான் சிருட்டி செய்தான். (௰௨)

அன்னதோ டத்தோர் சென்னி யானன மிரண்டு கண்மூன்
றின்னன விரூபம் பல்வே றுரியை வுருது தோன்றிப்
பின்னவன் றனைக்க றுத்துப் பெருங்கையாற் றூக்கித் தள்ளி
யுன்னருந் துன்பத் தாழ வுனுற்றிய ததுபொ ருனுய். (௰௩)

மிக்கவை குருபத் தெய்தல் விக்கினே சுரன்றாள் போற்றித்
தக்கசிட் டியைத்தொ டங்காத் தன்மையா லெனவா ராய்ந்தே
யக்கணம் புனறோய்ந் தாற்றுங் கடன்முடித் தண்ணல் பொற்றாள்
பொக்கறு மனத்துட் கொண்டு பொருந்தினுன் யோகத் தாங்கே. [௰௪]

விதிபுரி செயற்கெம் மானும் வியந்தவன் முன்பு தோன்றிப்
பதுமவா தனத்தோய் நம்மை மறந்துநீ படைப்பிற் புக்கா

*பேருணர்வாற்றலெல்லா நன்னரினருளிச்செய்தா னென்பது- வேதாகமபுராண கலைகளைக்கொண்டு யாவையுஞ்சிருட்டிசெய்யத் தக்கசத்தியைப்பிரமனுக்கும், யோகத்திறல் வேண்டியவடிவங்களைக்கொண்டியாவையும் இரக்ஷிக்கத்தக்கசத்தியை விண்டுவுக்கும், ஏகாக்ஷரசடாக்ஷர மந்திரங்களைக்கொண்டு எங்குந்தானாகவிருந்து யாவையுஞ் சங்காரஞ்செய்யத்தக்க சத்தியை உருத்திரனுக்குங் கொடுத்தருளினர்.

யதனினிவ் விடர்க ணின்னே யடைந்தன வினிச்சி ருட்டி
முதன்மையெய் துதற்கு பாய மொழிகுதும் கூர்ந்து கேட்டி. (மரு)

நம்மருட் சத்தி மாருண் ஞானமே கிரியை யென்னுஞ்
செம்மைசேர் சத்தி மாராச் சிந்தையிற் கொண்டு நாளு
மம்மெய் தாது சிட்டி வகைதொடங் கிடுதி யென்று
விம்மென மறைந்தா னெல்லா வுயிர்தொறு நிறைந்தா னென்றும். (மசா)

சித்திரையங் கரத்தோன் வாய்மை சிரங்கொடு சத்தி மாரைப்
பத்தியிற் றியானஞ் செய்து பரவலு மிரங்கிச் சித்தி
புத்தியென் றுரைக்கு நாமம் பொருந்தியே யெனைத்து மாக்குஞ்
சத்திக ளிருவர் தாமுந் தோன்றினர் தாதா முன்னர். (மஎ)

மலரவன் வணங்கிச் சித்தி புத்தியென் னுமம் வாய்ந்தே
பலர்துதி தாய்மீர் நான்செய் படைப்புநன் குறவு நீவொன்
னிலகுறு புதல்வி மாரா வெய்தவு மருண்மி னென்ன
நலனுற விசைந்தார் வேத னன்குசிட் டித்தல் செய்தான். (மஅ)

மூவருபாசனைப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் எ-க்குத் திருவிருத்தம். [உாஎம]

## திருமணப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மூவரைப் படைத்தன் னோர்க்கு முத்தொழில் வழங்கல் செய்த
தோவற நவின்றுஞ் சித்தி புத்தியென் பவரு வந்து
பூவினன் சுதைக ளாகப் பொற்பின்வாழ் தாவன் றனை
மாவத னத்தோன் வேட்ட வண்மைகன் கறைதல் செய்வாம். (க)

மன்னுல கனைத்து நன்கு வகுக்குமா றருளிச் செய்து
தன்னரு மகளி ராகிச் சார்சித்தி புத்தி யென்னு
மன்னைய ரிருவர் தம்மை யைங்கர நால்வாய் முக்கண்
முன்னவன் றனக்கு மன்றன் முடிப்பவுண் மதித்தான் வேதன். [உ]

*மாடக மகதி கல்யாழ் வல்லகா ரதனமோ தோர்ந்தே
பீடுயர் பொழில்சூழ் வெள்ளிப் பிறங்கலை யடுத்தே ரம்பன்

* மாடகம்-வீணை முறுக்காணி.

ரூடலைக் கொண்டி சைத்தேன் றுணையிற் பொழிந்தன் றன்ற
றுடலைப் புகழ்ந்து பாடி யருள்பெற் றிறு நுவல லுற்றான். (ங)

வாசமென் கமலப் புத்தேண் மானதத் திருநல் லார்மா
தேசொடு தோன்ற லுற்றார் தேவரிற் கவர்க டம்மைக்
காசகல் வதுவை யாற்றுங் காதன்மிக் குள்ளா னன்று
ரைசயி னதிபொற் பாரா டவர்தமை யமைப்பி னென்றும். (ச)

நின்னது வடிவை யென்று நிகரின்பா தனைய மைப்பின்
மன்னெழி லனைய மாதர் வடிவையென் றுமென் றலீங்
கன்னவ ரழகை யென்று லைறகு நமோ வென்றப்
பொன்னனார்ப் பாவு மாதர் புரந்திலக் கணமுஞ் சொற்றான். [ரு]

கலிவிரு, தட.

எந்தை கேட்டங் கிசைந்தாள் செய்திட ச, சிந்தை யோகை சிறந்து சதுர்முகன், புந்தி தோன்றிய பூவையா தம்முனர், வந்து நாரதன் சாற்று வன் மங்கைமீர். [சா]

கொன்றை வேணிக் குழகன் விநாயகன், மன்றல் செய்ய மதித்தன னுங்களை, யென்ற போதவ் விலக்கிழை யார்களு, மன்ற வார்வ மனத்தமைத் தாரரோ. [எ]

பங்க யன்னுமை பங்கற் கிஃ திசைத், தங்க ணவரு ளென்ன வருளனு ஞ், செங்கை யைந்துடை யான்றிருத் தாள்பணிந், தெங்கணுத வியம்புவ தொன்றுண்டால். [அ]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நின்னது செயன்மற் றியாதாய் நிகழ்கின்ற ததுவே யன்றி
யிந்நில மதனில் வேறு செயலுண்டோ வென்பா னாந்நல்
கன்னியர் தமைநீ வேட்டல் வேண்டுமென் றெண்ணி யின்பந்
துன்னுறு தியாண்டு மென்று னிசைந்தனன் சதுமுக வள்ளல். [கூ]

திசைமுகன் மகிழ்ந்து முன்னோன் றிருமணத் திறந்திட் டோலை
மிசையுல கத்தோ ரிம்பர் வேந்தரா தியருக் குய்த்து
விசுவகன் மனைப்பார்த் தேயிவ் வேட்பினுக் கிசைய யாரு
நகைகொண்மண் டபங்க ளாதி சமைமென நயந்தி றைஞ்சி. [ய]

நகரமொன் றினித மைத்தந் நகரத்தின் புறஞ்சூழ் நொச்சி
தகுதியி னெழுப்பி நான்கு கோபுரஞ் சமைத்துள் ளாக

வகலிய மதிலுண் மேடை யகழிசெய் தாடத் தெண்ணீர்
மிருகுளம் பொழிலும் யானம் விதம்விந் தாகக் கண்டே. [௰௧]

அணிநகர் நடுவெண் மன்ற லாற்றலுக் கியைந்த பற்பன்
மணியினு மேரு நானு மாற்றுயர் பொன்னி னாலுந்
திணிபெறு பளிங்கி னாலுந் திகழ்மதி காந்தத் தாலும்
பணிமிக மாட்சி தங்கு மண்டபம் பதித்தல் செய்து. [௰௨]

மண்டப நடுவே யொன்பான் மணியினு லிழைத்த சோதி
மிண்டரி யணையொன் றிட்டான் மங்கல வேள்விச் சாலை
குண்டமு மமைத்தா னட்ட மங்கலஞ் சுண்ணக் கோலங்
கண்டன னெங்குஞ் சென்று கண்டவர் நனிவி யப்ப. [௰௩]

வசொலா மயன்வ குப்ப தெனிதுமிம் மயன்வ குத்த
சீசொலா நோக்கி நோக்கித் தேவர்கோ மான்போ னுன்மெய்
யாரவா யிரங்கண் ணேயா தெண்கண னுனே னென்றுற்
பூரணமாக யாவர் புகல்வரந் நகர்மாண் பிப்பால். [௰௪]

மன்றல்சான் முடங்க லக்கை வாங்கியோர் * கால்வே கத்தை
வென்றவோர் மனவே கத்தான் மேதினி வான்றிக் கெங்குஞ்
சென்றுசென் றுய்ப்ப வன்ன திருமுகம் பெற்றோ ரெல்லா
மின்றுநன் றெய்திற் றென்று வினிதுள மகிழ்ந்தெ ழுந்தார். [௰௫]

சலநிதி கடைநா ளிற்போந் தெனத்தவ ராவார் பூவார்
புலவர்மற் றேனோர் தத்தம் புதல்வரா தியரோ டெம்மா
னிலகெழின் மணவி ழாக்கண் டேத்தவந் தார்வந் தாரெண்
ணலகில வனையர்க் கெல்லா §மமலையு முடையும் பூணும். [௰௬]

இணையறு பதுமஞ் சங்க மெனுமிரு நிதியுஞ் சிந்தா
மணியுமைந் தருவுங் காம தேனுவும் விளங்க ளுள்ள
பணியுட னளிக்கத் துய்த்தும் பாங்குற வுடுத்து மெய்யி
லணிவன வணிந்து மின்ப வாழியிற் றிளைப்பா ராக. [௰௭]

பொன்னகர்க் கிறைவன் வேறு பொன்னக ரடைந்தே மென்று
மன்னுபே ருவகை பூத்தான் வானந ரத்தா ரெல்லாம்
பன்னுமிவ் வியப்பி னேங்கு பதிமுனங் கண்ட தின்று
லென்னமிக் கோகை யுற்று ரெண்ணுறுந் தேரா மாதோ. [௰௮]

* கால்வேகம்-வாயுவேகம்.

§ அமலை சோறு

திணிவரை நிகர்தோண் மைந்தர் செப்பிள முலையார் சில்லோ
ரணிமணி விதான நோக்கி யலர்விழி யிமையா ரானார்
மணிவட முலையார் சில்லோர் வாகைசேர் கணவ ரோடும்
பணிசெய்கந் துகங்கொண் டாடிப் பலருளங் களிப்பச் செய்தார். (௧௯)

மொய்யளி முரலுஞ் செந்தா மரைமுக முறுவற் சில்லோர்
பையர வல்கு லார்தம் பாங்கிய ரோடுங் கூடி
மைவிழி கீழ்மே னோக்க மணியணி தனங்கு லுங்கக்
கைவளை கலக லென்ன வாடினார் களங்கம் மானே. [௨௰]

பெருமதக் களிற்றின் வெற்றி போரணி முகந்து வாவும்
பரிகளின் செயம்வன் சேவல் பகர்கவு தாரி காடை
பொருதக ரிவற்றின் போராற் புகழ்தரு வீரங் காணு
வரசர்க டருக்கி னோடு மகமிகு களிப்பி னுற்றார். [௨௧]

முனிவரர் சுருதி யாற்றான் மொழியறம் பொருள்க ளின்பந்
துனிதவிர் முத்தி வாதந் தொடுத்தினி தியம்பா நின்று
ரனகனார் சிறப்பிற் சொன்ன வாகமப் பொருள்க ளாய்ந்த
சனகரா தியர்மா யோக தத்துவத் திறம்பே சுற்றார். [௨௨]

கலிவிருத்தம்.

மங்க லத்திறன் காணவந் தோர்செய
லிங்கி தாகவெம் மீசன் றிருக்குறிப்
பைங்கை வள்ள லறிந்துசங் கற்பத்தாற்
பொங்கு தெய்வப் புனல்படிந் திட்டனன். [௨௩]

§பிங்க லக்கலை பெட்பிற் றரித்தனன்
கொங்கு மிக்குக் குளிர்தரு செச்சையை
யங்க ணிக்கை யணிதிரு மார்பினும்
பொங்க ரொத்த புயத்தினும் பூசினன். (௨௪)

திங்கள் போற்சடை சேர்த்துமென் றேரிய
பொங்கு கோள்கள் புரிதவத் தன்னவு
மெங்க ளுதன் மிலைந்த தெனச்சிரந்
தங்கொன் பான்மணித் தண்முடிச் சூட்டினன். [௨௫]

ஒன்று மண்டத் திரவொடி யொன்றினிற்
பொன்றல் செய்துதற் கண்புறம் போதர

§பிங்கலக்கலை- பீதாம்பரம்.

னின்றி டத்தடை செய்தலி னெற்றியின்
மின்ற யங்குபொற் பட்ட மிலேந்தனன். [உகூ]

மாத ரோங்கு மணிமுடி மேவிய
சீதன் றேசின் வடிவந் தெரித்தல்போற்
பூதி பூசிப் பொலிந்தொளிர் வாணுதன்
மீது பொட்டு விளங்கப் பொறித்தனன். [உஎ]

தோகை மாரிய ரேய்$வட மீனும்ப
தாகை மீனுந் தனதருட் கட்கடைக்
காகை வேண்டி யமைந்திடல் போலிரு
வாகு சேர்செவி வாய்த்தனன் குண்டலம். [உஅ]

துங்க நல்வரைத் தோளி னவமணி
யங்க தத்தோ டலங்கு கடகமென்
செங்கை நாணொ சீறடி நூபுரந்
தங்க வாழி விரலினுஞ் சாத்தினன். [உகூ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வடிவுறப் புனைந்த மணவணி நோக்கி மறைமுத லுமையொடும் விடையூர்ந், தடல்கொளோர் மருப்பின் யானைமா முகனை யணிகொ*ளீ ராயி ரமருப்பின், மிடல்செறி யானை மிசையிவர் வித்து வேளைமா மஞ்ஞையூர் வித்துப், புடையெலா மனந்த ராதியோர் மறைமந் திரங்கலை யாதிகள் பொ துள. (௩௰)

பூதர்க டொகுதி செயப்பிர தாபம் புகழ்ந்துமுன் கட்டியம் புகல, மாதவர் வேத மனுக்களாற் றுதிப்ப வட்டவெண் மதிக்குடை நிழற்ற, மேதகு கவரி யிருபுற மிரட்ட வெண்டுகிற் பதாகைவான் றூர்ப்ப, வேத மில் பஞ்ச வாத்தியங் கறங்க வெழுந்தினி னெறிப்படர்ந் தனரால். (௩௧)

---

$ வடமீனும் பதாகை மீனுந்தனதருட்கட்கடைக்காகைவேண்டி, என்றது அருந்ததி- மீனக்கொடி- யென்னும் இருமீன்களையும் இருமகரகுண்டலங்களாக்குதல் இறைவன் பசுவான் மாக்களுக்குக்கடாக்ஷித்தல் மீன்போல் நோக்குதலும் ஒன்றுதலால் அதைவிரும்புதல்போன்று என்றும் அவைகடைக்கண்ணோக்கம் பெற இச்சித்தல் போன்று- என்றும்- கொண்டதாம்.

* ஈராயிரமருப்பின் மிடல் செறியானை-அயிராவணமென்னும் பெயருள்ள பெரிய ானை.

இன்னண மென்றோ ளிறையவ னுமையோ டிபமுகத் தைங்கரத் தெந்தை, பன்னுமற் றெவரும் புறப்பெருங் கடல்போற் பாங்குறப் போதர லறிந்து, பொன்னுரத் தவனும் பிரமனு மற்றப் புலவரும் போந்தெதிர் வணங்கித், தன்னிகர் நகரி னணிகிளர் வீதி தகவுடன் வலமுறச் செய்து. ()

மணவணி புனைசெய் மண்டபத் துய்த்தார் வாணிசென் றிரும்புனல் வார்ப்பப், பணிவொடு கமலன் கணபதி பாத பங்கயம் விளக்கனு மிதழிப், பிணையல்வே யிறைவெற் பிறைவியோ டெழில்கொள் பீடமார் தாக்கண பதியு, மணிமணிப் பீடந் தமர்ந்திடப் பிறரு மயலமைத் திசைதவி சிருந்தார்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மணவினைக் கடுத்த வோரை வரற்குறிக் கருதி யான
கணபதி யுடன்பல் கிதன களின்மகிழ்ந் தமர்ந்தார் யாருந்
திணிமணி வடமார் கொங்கைச் சித்திபுத் தியர்க ளன்கு
புணர்திரு மணக்கோ லங்கொள் பதுமைசற் றினிச்சொல் கிற்பாம். (௧௪)

மங்கைமார் சிலரன் னாரை மணிதிகழ் பீடத் தேற்றி
யங்காஞ் சிவப்பத தான மளித்தபின் றயில நீவிய
கங்கைநீ ராடிப் பொன்னங் கலையரைக் கரைத்தெ ழிற்பூங்
கொங்கைநன் னிறங்காட் டாமை கோட்டல்போற் களபம் வேய்ந்தார். ()

இருளையிர்ந் திந்து நீற்று லெனவகுப் பெடுத்தவ் விந்துக்
கரிகளா மீர ராயு மொன்றியாங் கடுத்த தேய்ப்பப்
புரிசடை யொடுபொன் னுகப் பூணிட்டார் நுதற்பூண் வானிந்
திரதனு வினைக்கார் மாட்டுச் செறித்தெனக் குழற்பாற் சேர்ந்தார். (௧௬)

முன்னவ னங்கை யேந்து முரட்கொடி மயிலுரு சென்னி
துன்னவேய் மதியுங் காந்தன் றோல்வியச் சினைய வற்றைப்
பன்னியர் தலைமீக் கொள்ளல் பாங்கென வமைப்பார் போன்று
மின்னிளம் பிறைமயூர மெனுமணி முடிவேய்ந் தாரால். [௧௭]

தலைவன்மெய்ந் நிறந்தெ ரிக்குஞ் சால்பிற்செந் திலக மிட்டா
ரலர்விழி கருப்பூர் வெண்மைத் தாதன்மா லமர்பா லாழி
நிலையெனு வதனங் கொங்கை நிழன்மதி வளையென் றோர்காற்
புலனில்லின் னவர்ம திப்பான் புகாதெழி னியின்மை யிட்டார். (௧௮)

தப்பினித் திலமூக் குத்தி தையலார் கொழுநன் கீர்த்திக்
கொப்பெனத் தேற்று வார்போ லுயர்திரு நாசி வேய்ந்தார்
துப்புமூக் கனங்க ளன்ன தோகையர்க் காடற் றென்மை
செப்பலின் மணிசெ யன்னக் கொப்புமேற் காதிற் சேர்த்தார். (௧௯)

ஒருகோடி §யொகரந் தன்னை யுக்கியிற் பொருத்தில் போன்மற்
றொருகோடி மகரந் தன்னை யொசிந்தொளிர் காதி னூடு
செருகிட றகவென் பார்போற் றிகழும்பொன் மணியி னூற்றிப்
பெருகொளிக் குழையெ னும்பூண் பரிதிவாள் பிறழப் பெய்தார். (ச௰)

வலம்புரி யென்னத் தூய்தின் வளர்கண்டத் திமையோர் நாத
னலந்தரப் புனைபல் பூணி னுதனுக் திருநாண் வைக
வலங்கர தனநீள் பீட மமைத்தென மணியொன் பானுந்
துலங்குமுட் கட்டுக் கோவை சூழ்தரப் பூட்டி னால். (சக)

பீடுயர் தனங்கட் கிட்ட †பெரும்பரம் வெளிக்காட் டார்போன்
மாடைசேர் கச்சின் மீது மாணிக்கம் வயிர நீலஞ்
சேடுறு பவள மாதி நவமணி சிறந்த கோவை
யாடகத் தாந்தார் பூந்தா ரணிந்துமே லலங்க ரித்தார். (சஉ)

பெய்தனர் விரல்கட் கேற்ப மணிசெய்து பிறங்கு மாழி
கைவளை கடக மிட்டார் கவினெறி கலாப மாதி
$ஐயவகை யணியு யார்ப்ப வசைத்தன ரொன்று மைய
மெய்துநுண் ணிடையில் வண்டு கொடியினுற் றிமிர்தல் போல. (சங)

ஏதமில் வேதம் பன்னு னடியு மெய்தாப் பாத
மேதக வின்று கண்டா மெனப்பற்றி வியத்த லேபோற்
*றுதநூ புரஞ்ச தங்கை பாடகந் தண்டை யார்ப்பப்
பாதசா லம்பூட் டிச்செம் பஞ்சுமூட் டினர்நன் கெய்த. (சச)

எத்திக்கும் பணிசெய் தேத்து மேரம்பன் பணிகட் கேற்பச்
சித்திக்கே யதிதி யோடு திருமக ளிந்தி ராணி
புத்திக்கே யிரதி சாவி புகழன சூயை யாகுஞ்
சத்திக்கூர் விழியார் தாமிவ் வணஞ்செய்தை யலாம் பின்னர். (சரு)

திருவளர் சிவிகை யேற்றி நகர்வலஞ் செய்வித் தார்பின்
வளைசெய்நல் லோளை யோர்ந்து மாங்குழை கூர்ச்ச மாதி
பொருள்கொடு சனக யோகர் வதுவைமண் டபத்துப் புக்காங்
கொருதவி சிருப்ப மாத ரொண்ணகர் வலம்போந் தாங்கே. [சசு]

---

§ ஒகரம்- மயில்.

† பெரும்பரம், பெரியகவசக்கட்டு.

$ விரிசிகை, கலாபம், பருமம், மேகலை, காஞ்சி, என்னும் ஐவகையணிகளாம்.

* தாதநூபுரம்- பொன்னுகிய உலோகத்தாற்செய்த சிலம்பு.

வதுவைமண் டபத்தி னுப்பண் மணியரி யணையில் வைகும்
விதுவணி நெடுங்கோ டார விநாயகப் பெருமான் பாங்கர்க்
குதுகுலித் திருந்தார் மன்றற் குரவனு கமத்தி னூற்றாற்
புதுமணத் தினர்க்குச் செந்தேன் பொருவிறீங் கனிபா லீய்ந்து. (சஎ)

பிரமனை நோக்க வன்னோன் பிரணவ வடிவான் றகையிற்
பொருவில்சீர்த் தனது சித்தி புத்தியா நங்கை மார்தங்
காதல மலர வைத்து வாய்மனுப் பகரக் கையாற்
சிரகநீர் மாரி பெய்யத் திருமண மகனங் கேற்றான். (சஅ)

சிவநெறிச் சனகன் வேள்விக் குண்டத்திற் செந்தீப் பெய்து
குவடென வெவ்வே றுச்செய் சமித்தினைக் கொளவ ருச்சித்
தவியினை வார்ப்ப மாந்தி வலஞ்சுழித் தகடு வீங்கித்
தவனதே வொலியி னார்த்துத் தருக்கொடு நிமிர்ந்து நிற்ப. (சகூ)

அரம்பையர் நடன மாட விஞ்சைய ரமுத கீத
நரம்பிசை மீட்டிப் பாட நற்றவ $ரரவென் றார்ப்பப்
புரந்தர னாதி வானோர் புளகமெய் போர்ப்ப மற்றோர்
காஞ்சிரங் குவித்தா னந்தக் கடலிடைப் படிந்து மன்ன. (ருo)

அந்தண ராசி செய்ய வமரர்பூ மாரி பெய்யச்
சந்தநான் மறைமு ழங்கச் சாற்றியத் திரட முங்க
‡வந்தியர் நீட மானார் மங்கலம் பாடவானார்
துந்துபி யதுங்க றங்கத் தொனிசெய்சங் கம்பி றங்க. (ருக)

சங்கையில் கேள்வி சான்ற சனகமா முனிவ னென்போன்
மங்கலச் சடங்கு வேத வரன்முறை தவறா தாற்ற
நங்கையர் திருக்க ளத்தி னலங்கொண்மங் கலநாண் சாத்திச்
செங்கைகைப் பற்றி னானெந் தேவனுங் கணேச வள்ளல். (ருஉ)

அணுவதா யண்ட மாவா னண்டமா யணுவ தாவா
னிணையிலி யாவுந் தானா யிருப்பவ னுலகம் யாவும்
புணர்வுறு போக மூழ்கிப் பொற்பின்வாழ்ந் துய்யு மாறு
மணவினை முடித்தா னென்ன வழங்குவர் மதிநூல் வல்லோர். [ருங]

---

$ அரவென்றார்ப்ப- ஹரஹர என்று தோத்திரிப்ப,
‡ வந்தியர்- மங்கலப்பாடகர்,

பின்னரங் கிளைச்சூழ் வந்து பீடமீ தினிது வைகிப்
புண்ணிய ரோடும் வேள்வி புரிந்ததின் முற்றுக் கையாற்
பொன்னனார் பாத சாலம் புலம்பிடப் பாத மம்மி
தன்னிலே தூக்கி வைத்துச் சாலியை யெதிரே காட்டி. (௫௪)

தந்தைதாய் செம்பொற் பாதந் தேவிய ரோடுந் தாழ்ந்து
சிந்தையி னார்வத் தன்னார் திருமுக மலர்ந்து வாழ்த்தப்
பந்தவே ரறுக்கு மைங்கைப் பகவனும் பங்கில் வாழுஞ்
சுந்தர மாதர் தாமு மணவறை துன்னி னாரால். (௫௫)

கண்ணுத றிருக்கண் ணோக்காற் கண்ணன்மா வனந்த னாதி
விண்ணவர்க் கணிபொன் னாசு மெல்லிலை முதல நல்க
வெண்ணிலுக கரிய கற்ப காதிகண் மற்றோர்க் கெல்லாந்
தண்ணடை காயமுன் னான தருப்பரி சளித்த மாதோ. [௫௬)

சிறுமதி சடையிற் சூடுஞ் சிவபிரான் மதலை மன்றல்
பெறுவிழாக் காண வந்தோர் பெருங்கல னாதி பெற்ற
முறையொரு வியப்பபோ யாரு முன்னிய வனைத்து மெய்த
வுறுவரோ ற சுமுகர் வீதி யுலாவுறு விபரஞ் சொல்வாம். (௫௭)

அன்னையர் சித்தி புத்தி யணிமணிச் சிவிகை மீது
மன்னெழிற சுமுக மூர்த்தி யிராயிர மருப்பிற் றுகப்
பன்னயி ராவ ணத்தும பவனிவந் தனாவியா ணுளளார்
மன்னறை பொழிமந் தார மலர்கள்சிந் தினரொண் ணில்லார். [௫௮)

மேலொலி யுருமே றென்ன விதங்கொளபல வியங்க ளார்த்த
சாலவிண் ணகடு முற்றுந் தண்மதிக் கவிகை போர்த்த
வாலவட் டங்க டிக்காரந் தசைந்தன கொடிவான் றாத்த
பாலலை நாலை யென்னப் பாங்கெலாங் கவரி சேர்ந்த. [௫௯]

வஞ்சிதேய் மருங்கு னல்லார் மங்கல மொழியெ டுத்தார்
விஞ்சைய ரமுத கீதம் வீணையிற் செவிம டுத்தார்
பஞ்சடி யரம்பை மாதர் பாடலா டலகெ டுத்தார்
ரஞ்சநீர் நந்தி யாதி வேத்திரத் தணிய டுத்தார். [௬௰]

பாஞ்சசன் னியத்தோ னாதி யாவரும் பரிவின் மொய்ப்பக்
காஞ்சன மணிப்பூ ணிள்ளைக் கடவுண்மா முகத்தெம் பெம்மா
னாஞ்சில்சூழ் நகரின் வீதி நடுவர மடந்தை மார்நீ
ராஞ்சனங் கொண்டு முந்துற் றுவலிற் சுழற்றி னாரால். (௬௧)

வாசமென் மலர்க ணெல்ஃகின் மலர்பொரி யொளிவ யங்கும்
காசுவண் கன்னற் றுண்டங் கதலிமா வாதி யாய
மாசில்செங் கனிகண் முன்னோன் முந்துற மடகல் லார்கள்
வீசினர் தாழ்ந்தார் மோக வெள்ளவா ரிதியி னாழ்ந்தார். (௬௨)

எவிழி சிலைபு ரூா மெனவெலற் கெணிக்க ணேச
தேவயிற் செல்வீ ரன்னான் றேசெழிற் படையே திர்ப்பி
†றேவுநன் றனு மென்ன வுரைத்துக்கால் பிடிப்பா ரொப்பச்
சேவடிச் சிலம்பொ லிப்பச் சென்றனர் மறுகிற் சில்லோர். [௬௩].

தாதவிழ் குழலோர் மாது தந்திமா முகன்பா லுள்ளந்
தூதுபோ யிருப்ப தென்று சொல்லமற் றொருத்தி சீறி
யீதொழி யுய்தி வேண்டி னென்னுள முனந்து தாச்சென்
றோதிய தென்றா ளற்றா லுற்றன விவர்க்குட் பூசல். [௬௪]

செம்மைசேர் சித்தி புத்தி திருமுக நோக்குங் கொங்கை
யும்மையி னவர்செய் நோன்பா லுவாமுகன் காஞ்சேர் வுற்ற
விம்மியென் முகத்தைப் பார்க்கி னென்பயன் விளையு மென்ற
*னம்மமே நோற்றி லேற்கென் றழுங்கின ளொருத்தி யம்ம. [௬௫]

சீதமென் குழலோர் மாது தேவர்மா னவர்மற் றுள்ளோர்
போதரல் வேறு வேறாப் புந்தியிற் காணா ளான்ற
மாதவர் போலக் கண்ட வடிவெலா மதிசேர் வேணி
நாதனாங் கணேச வள்ள லல்லுரு வாகக் கண்டாள். (௬௬)

ஆவன்முற் றுறவே ரம்ப னாகந்தீண் டார்க ரத்து
மேவிடே மெனல்போற் சில்லோர் கைவளை கழுவி வீழ்ந்த
பாவனை யின்பங் கொள்வா ரிடைப்படிற் பயன்யா தென்று
பூவயிற் செல்லல் போலச் சோர்ந்தன பொலந்தூ சம்ம. (௬௭)

சந்திர காந்த மேடை தன்னினின் றறங்கை நாதன்
சுந்தரப் பவனி நோக்குந் தோகைய ரவன்கட் கண்ணுஞ்
சிந்தையுஞ் செலுத்தி வேறு செயலொடு மொழிதல் செய்யா
தந்துமட் பாவை யோடு முருவம்வே றற்று நின்றார். (௬௮)

பருவமங் கையரு ளாயன் பவனியை நோக்கிச் சென்னி
யிருகாங் கூப்பி னொரு மிலகுமெய் தாணி மீது

† ஓவும்—ஒழியும்.
* அம்மம்-கொங்கை

மருவ வீழ்ந் திறைஞ்சி னேரும் வளைகலை காம ரங்கு
மொருவுத லற்று ரேனே ரொருவுத லுற்று ரம்ம. (௬௯)

இன்னண மைய னுற்ற $வெழுபரு வத்தி னோர்க்கு
மன்னிய மற்றை யோர்க்கும் வள்ளல்வண் கருணை பூத்து
நன்னர்மிக் கமைந்த வீதி வலம்வந்து நால்வா யூர்தி
தன்னினின் றிழிந்து செம்பொற் றனித்தவி சிருந்தா னுக. [௭௰]

மாதவ ராதி தேவர் மாதவ மோன யோகர்
பூதல ரேனோர் தாமும் பொருந்துநல் விருந்த யின்று
பாதவந் தனைசெய் தேதம் பதிபுகுந் தனரார் வங்கூர்
வேதனு மிறைஞ்சி வேண்டும வரம்பெற்றான் விமலன் றன்பால். [௭௧]

மூவிரு முகத்து வள்ள லாதியர் மூன்றுங் கெய்தும
யாவருங் கணேச னுரு மவரிரு பாங்கர் வைகுந்
தேவிக டாமுஞ் சூழச் சிவபிரா னுமையி னோடு
மாவரை கைலா யத்து வந்தனன் மறைக ளாரப்ப. [௭௨]

அம்மலை மிசைதம் பெம்மா னருளின்வீற் றிருப்ப வைங்கைச்
செம்மலுந் திரும ணஞ்செய் சித்திபுத் தியரா மாதர்
தம்மொடும் பெருவ ளஞ்சேர் தன்னுல கதனைச் சார்ந்து
கொம்மைவெம் முலையார் போகங் குளித்தினி திருந்தான் மன்னோ. [௭௩]

திருமணப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் அ-க்குத திருவிருத்தம். (௩௱௪௰௩)

# விண்டுவுபாசனைப்படலம்.

அறுசீரக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னவ னெமையா ளும்பன் முகன்சித்தி புத்தி யாமெம்
மன்னைய ரிருவர் தம்மை யருங்கடி மணஞ்செய் தாண்ட
நன்னல மிதுவாம் விண்டு நவில்சடக் காத்தை யோதிப்
பன்னலங் கணேசன் பாங்கர்ப் பெற்றமை பகா லுற்றும். (௧)

---

$ எழுபருவத்தினோர்- எழாட்டைப்பேதையர், பதினோராட்டைப் பெதும்பைய ர், பதின்மூவாட்டை மங்கையர், பத்தொன்பதாட்டை மடந்தையர், இருபத்தைந்தாட் டை அரிவையர், முப்பத்திரண்டாட்டைத்தெரிவையர், நாற்பதாட்டைப்பேரிளம் பெண்கள் இவர்களாம்.

புயலவ னொருகா லத்துப் பாற்கடற் பொருந்தி யங்கண்
டுயில்பொழு தவனொண் காதிற் றோன்றினா ரிருவர் தாங்கு
வயமுடை யவுண வீரர் மதுகயி டவர்க ளென்னும்
பெயரினர் கொடிய ரார்க்கும் பீடைசெய் தனரா லற்றால். (௨)

அரியவர்த் தெறம லைந்தாங் கடலிழந் தோடி நன்கு
புரியா னடிதாழ்ந் தெல்லாம் புகன்றன னதுகேட் டெம்மான்
விரிகமழ் கொன்றை வேணி விநாயகற் போற்று வாற்றாற்
பரிபவ மடைந்தா யன்னாற் பாவிநல் லருளெய் தென்னா. (௩)

நவிலுமா றெழுத்தா னாய நன்மனு வுபதே சித்தோ
துவிதமு மருள வையன் றுணையடி மீண்டு மாறாழ்ந்
தவனியிற் சித்தி யாவு மளித்திடுஞ் சித்தி யென்னுந்
தவவில் *கேத் திரத்தை நண்ணித் தண்மலர்த் தடநீ ராடா. (௪)

பூசினோர்க் கினிய நல்கும் புனித வெண் ணீறு பூசி
வாசநீர் புரோக்க ணிந்து சுத்தமா சுத்தி செய்தே
யாசிலம் புலித்தோன் மேவி யான்றமை நேரி ருந்து
பேசு†தா னாதி யைந்து சுத்தியும் பிறங்க வாற்றி. (௫)

வாங்கெழி லொருகோ டானை வார்தரு மிருகா தானைத்
தேங்கருள் விழிமூன் றானைச் செவ்விய நால்வா யானை
யோங்குகை யைந்தா னானை யுயர்முடி யாறு டானைப்
பூங்கடுக் கையைவேய் வானைப் புரிவொடு வழிபா டாற்றி. (௬)

உரனெனுந் தோட்டி கொண்டங் கோரைந்து பொறிக ளென்னுந்
திரனுறு கயங்க ளெங்குஞ் செலவிடா தடக்கிக் காத்து
வரனருள் சடக்க ரத்தை வருடநான் றோதி வைகப்
பரனெனைத் தடுந்தா ளைங்கைப் பண்ணவன் கருணை பூத்து. [௭]

செங்கண்மான் முன்பு தோன்றித் தெரிசனந் தந்தா னாகப்
பங்கய மலர்த்தான் மாயன் பணிந்துபல் வரமுங் கைக்கொண்
டைங்கரன் றனக்கோர் கோயி லமைத்தவ னுருவங் கண்டு
துங்கநா லாக மத்திற் சொல்விதி முறைபூ சித்தா. (௮)

---

* கேத்திரம்- க்ஷேத்திரம்.

† தானாதியைந்து சுத்தி- தானசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, பூதசுத்தி என்பன.

அடர்துய ரகலச் சித்தி தந்தநா லனைய செம்மற்
கிடமொழித் தருளுஞ் சித்தி விநாயக னெனப்பே ரிட்டுக்
கடவுணற் கருணை யாலே மதுகயி டவனைக் காய்ந்து
புடவிவா னுள்ளோர்க் கெல்லாம் பொருவிலின் பளித்தா னன்றே. (௯)

வேறு

இன்னநெடு மால்பரசு ராமனு மவதார மெடுத்த வேலை
யன்னையினும் பெருங்கருணை யளித்தருளே ரம்பன்மல ரடிக ளேத்தி
மன்னவர்தங் குலமனைத்து மாய்த்தவனி யந்தணர்க்கு வழங்கிப் பின்னுந்
‡தென்னுலகி னித்தியனு யிருந்துபனற் கரியதவஞ் செய்கின் றானால். [௰]

விண்டுவுபாசனைப்படலமுற்றுப்பெற்றது
ஆகப்படலம் ௬-க்குத்திருவிருத்தம் (௩௱௫௰௩)

# வீமனுபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருமக ளுறையு மார்பன் றேவதே வாமே ரம்பன்
மருமலர்ப் பாத மேத்தி மதுகயி டவனைக் காய்ந்த
பெருமையின் னதுவாம் வீம னெனப்பெயா பிறங்கு மன்ன
னொருவனே மருபபி னானை யுபாசித்த தோது வாமால். (௧)

வாங்குதெண் டிரைக்கை வேலை வாய்ப்படு பவள மன்ன
பாங்கமை செவ்வா யந்சத் தொகுதிகண் படுக்குங் கஞ்ச
நீங்கலின் மடுவு நேரா றேர் நுதிமுக ளிமிர வான்றோய்ந்
தோங்குதண் பொழிலுஞ் சூழும் விதற்பமென் றொருநா டுண்டே. [௨]

அன்னதே யத்து வேள்வி யாற்றுமந் தணர்க ளாதி
மன்னுநாற் குலங்க ளேனை மரபுளார் வளமுஞ் சென்னல்
கன்னல்பூங் கதலி தேமாக் கனுவிய வளமும் பொங்கித்
தன்னைநேர் நகர்க வுண்டின் னியமென்ச் சாற்ற வுண்டால். [௩]

§கற்பக மலைப்பா னல்கு காத்தினன் வீம னென்பான்
கற்பக மலைப்பார் தோளான் கடிகொளங் நகர்வேந் தாய்நூல்
கற்பக மலைப்பான் வேட்பான் சாருகா சினியெ னும்பேர்க்
கற்பக மலைப்பாங் காவார் காங்கைதயோ டாசு செய்நாள். [௪]

‡ தென்னுலகு-சேரனுடு என்னப்படுகின்ற மலையமா நாடாம்.

§ கற்றபகதருவுமலைகளும்படிகொடுக்குங்கையினன், மலையும் பிளக்கும்படி யுத்தஞ்செய்தலால் நிறைந்ததோளான், அகங்காரத்தைக்கெடுக்கும் பொருட்டு நூல் கற்றலை விரும்புவான், கற்புடைமையென்னும் மனச்செல்வத்தைப்பக்கஞ்சுற்ற நிறைந்தமனைவி யோடரசு செய்நாள்.

வினைதவிர் மகப்பே றெய்தா மிடிமையான் மனைவி யோடும்
வனமடைந் திலைகாய் கந்த மாந்தியும் வளிநு கர்ந்துஞ்
சினமொழிந் தறவோ ரென்னச் செய்தவத் தயர்தல் யாழ்வன்
முனிபிதி ருடன்சே ரன்னான் றுதைக்கு மொழிய வன்றேன். [௰௬]

வம்பவி ழும்பு யப்பூ மலர்மிசை யமரொண் கண்ண
னம்பதி குறுகி யன்னா னடிமலர் வணங்கி யெந்தா
யெம்பரு மிசையென் னெச்ச மீண்டிட வாமெழன் னெச்ச
நமபுநல் லெச்ச மில்லா நவையுறற் கேது வென்னே. (௰௭)

என்னவொண் கமலத் தண்ணா லியம்புமுற் பவத்து நின்சேய்
மன்னர்தங் குலத்தோ னமஞ் சாமனா் வறுமை யாலோ
ரன்னிறை யிரவிற் கான்சென் றுறிரு புனவர்க் காதிப்
பொன்னகை முதற்க வர்ந்தவ் விரவிலே போந்தா னில்லம். [௰௮]

வேறு

கதவந் திறப்பான் றன்மகனைக் கணேச கணேச கணேசவெனப்
பதறி யழைத்தான் பகன்முழுதும் *பதநீர் நுகராப் பரிவாலம்
மதலை மாண்டு கிடத்தலிற்சொல் வழங்கா வகைகண் டொருவகையாற்
‡புதவந் திறந்தா னகம்புகுந்தான் புதல்வற் பார்த்து நனிபினைந்தான் [௰௯]

மைந்த னிறந்த பரிவானும் மடங்காப் பசித்தீக் கரிவானும
பந்த மறுக்கு மறைகூறும் பனவற் படுத்த பவவீறும
வந்து விளைந்த சுழிப்பானு மலர்க்கண் டுயிலா விழிப்பானுந்
சிந்தை யுழந்தான் வைகறையிற் சீவனிழந்தா னுடலகிடப்ப. (௨௰)

வேறு

பொருதுசங் கடங்க ளெல்லாம் போக்குசங் கடச துர்த்தி
தருபெரு தினமன் றுகச் சமைதலிற் கணேச னென்று
மொருமகன் பசிநோய் தீர்க்கற் குணவுநீர் விடாய்தீர்த் தற்கு
வருணமுங் கிடையா துள்ளம் வருந்தியங் கிறந்த தாலே. (௨௧)

பொன்னெறி விமான மொன்று பொருந்தவன் னதன்மீ தேறி
மன்னுசீ ராங்கை வள்ளன் மானுல குற்று வாழ்ந்தான்
றன்மகன் றனைக்க ணேச வெனமுக்காற் சாற்று சாம
னுன்னரும் புதல்வ னாக வுதித்தா சாள்கின் றான்ல். (௨௨)

* பத்நீர்—அன்னமுந்தண்ணீரும்.

‡ புதவம—கதவுவிட்டுப்புகும்வழி.

துங்கவிப் பிரானைக் கொன்ற தொல்பவ வெச்சத் தாலே
யங்கவி லெச்ச மில்லா வறுமையுக் கனுற் கீர்த்தி
தங்கொரு புதல்வன் வேண்டிற் சங்கட சதுர்த்தி நோன்பே
யங்களிற் றூன னற்கின் பாயதஃ தாற்றல் வேண்டும். [௨௩]

எதிரிவ் விரத நோற்கத் தொடங்குநா ளிசைத்து மாசி
மதிமதிக் கலைதேய் பக்க மங்கல வார நான்காந்
திதிமதி யுதிக்கு மெல்லை சிறந்ததென் றறைகிற் பாரால்
விதிமுறை யதனிற் பூசை விளைத்திட றகுதி மேலும். (௨௪)

செழுந்திற மதிக்கும் பூசை செய்துமாண் மறைய வர்க்கு
விழையறு சுவையோ டுண்டி மேதக வூட்டிக் கங்குன்
முழுவது முறக்க மின்றி முன்னவன் சரித முற்றும்
பழுதறக் கேட்டு ளத்துட் பதித்திடல் பண்ப தாகும். [௨௫]

என்னலும் பிதிர்நாழ்ந் தெந்தாய் மங்கல வாரத் தெய்து
முன்னருஞ் சதுர்த்தி யெற்று லுகந்ததோர் கோட்ட சற்குப்
பன்னுதி நெளிவி லேற்கென் றிடமறை பயின்றி யாவு
மன்னுறப் படைக்கும் வாச மலரின்வா சத்தோன் கூறும். [௨௬]

மெய்த்தவப் பரந்து வாசன் வீரியத் துதித்த செவ்வாய்
சுத்தநற் கலைக ளோடு சுமுகர்தம் மனுவும் பெற்ற
வத்தனு ரிடத்துப் பெற்றே றணிவனத் திருந்து பன்னாட்
பத்தியி னூற்று நால்வாய்ப் பகவனூர் கருணை நோக்கால். [௨௭]

அந்தரத் தமரர் தம்மோ டமிழ்தினி துண்ணு நண்புந்
தந்தரக் கோள்க ளோடு தயங்கொரு கோளா வைகும்
பந்தமுந் தன்வா ரத்துப் படர்தரு சதுர்த்தி நோற்றோர்
நந்தலில் போக மெல்லா நண்ணுதற் கருளும் பெற்றான். (௨௮)

ஆதலாற் பூம வாரத் தடுத்திடு சதுர்த்தி மேலென்
றோதுநான் முகனைத் தென்பா லுறைபிதுர் மதிதோன் றேல்வை
யேதுநா யகனார் பூசைக் கியைந்ததின் றடியேன் றேறப்
போதவோ துதியென் றேத்தப் பொருந்துதண் ணளியா லோதும். [௨௯]

நாரத முனிவ னோர்நாட் கயிலையம் பொருப்பு நண்ணிக்
காரணி மிடற்றி னூற்குத் தீஞ்சுவைக் கனியொன் றீய்ந்து
வாரமுள் ளூறத் தாழ்ந்து மதுமழை பொழிந்தா லென்ன
வாரிசை மழைபொ ழிந்தா னமலனூ ரகம கிழ்ந்தே. [௩௰]

முனிவரற் கருள்வ ழங்கி முதிர்சுவைக் கனியை நந்தந்
தனையரு ளெவற்க ளிப்பாஞ் சாற்றெனப் பார்த்தா னென்னை
யினியன வினையோற் கீத லியல்பென விசைத்தேன் முன்னோ
னனியெனை முனிந்தா னஞ்சி நயந்திரந் தனனவ் வேல்லை. [௩௧]

திங்களங் கவய தித்துச் சிரித்தனன் சிவனார் மைந்த
னங்கலை மதியே நக்கா யான்றவ ரவையி னற்றான்
மங்குக நின்றே சுன்னைப் பார்த்தவர் மனத்து மம்மர்
பொங்குக வெனவன் சாபம் புகறலு மதிதே சின்றாய். (௩௨)

அரந்தையுற் றிலஞ்சென் றானல் லமுதுண விழந்த தேவர்
புரந்தர னொடுமே ரம்பன் பொன்னடி யிறைஞ்சி யெந்தாய்
பரந்தவம் புவிக்கு ளாவாம் பயிர்வளர்த் திடவு மெங்கட்
குரந்தரு மமுத நாளு முதவவு நிலவை வைத்தாய். [௩௩]

அங்கில வின்மை யாலே யனைத்தும்வெந் துயரி லாழ்ந்த
புன்னெறிக் கடையர் செய்யும் பொறைபொறுந் தாள லென்று
நன்னெறித் தலைவர்க் கன்றோ கடன்மதி நகைசெய் குற்ற
முன்னவ சகித்தாள் கென்னப் பன்முறை முறையிட் டாரால். [௩௪]

சின்மய னதற்கி ரங்கிச் செப்பும்வா னவர்கா ணீவிர்
நன்மையி னீங்கு வந்து நயந்தெமை யிரந்து வேண்டுந்
தன்மையின் மதியி லாத தண்மதி யடைந்த சாபப்
புன்மையங் கவனை நீங்கிப் போகுமா றுரைத்து மின்றே. (௩௫)

இரவிதான் சிங்க வீட்டி னெய்துதிங் களின்முற் பக்கம
வருசதுர்த் தியினில் யாரும் வான்மதி தனைநோக் கறக
பாவுமத் தினம றந்து பார்க்கினும் பவங்கட் கெல்லா
மருகரா குவர்மற் றேத வாழிவீழ்ந் தெழுந்தி ராரால். [௩௬]

அத்தின மொழிய முன்போ லனைவருங் காண்க வானிற்
புத்தமு துதவல் லோனை யென்றனன் புலவ ருய்ந்தா
மித்தின மென்று வந்தா நிந்திரன் மதிபா லெய்தி
வித்தக னருள்செய் யாவும் விளம்பித்தன் பதிசென் றானல். [௩௭]

இந்திரன் போந்து சொற்ற வெதிரில்கூற் றனைத்துங் கேளாச்
சந்திரன் மகிழ்வுட டங்கித் தன்பதி தனைவிட் டேகிச்
செந்திரு வளரொண் கங்கைத் தென்றடஞ் சித்தி யாவும்
வந்துறுஞ் சகல சித்தித் தலத்துவற் சாமூ வேழா. [௩௮]

ஓரெழுத் தன்பி னெண்ணி யும்பன்மா முகத்தெம் மீச
ஞாரு ளாற்சேய் வாரச் சதுர்த்தியி லுணர்தீர்த் தற்கு
நேருவோர் தான்றேன் றேல்வை நியதியிற் றனைப் பூசிக்கச்
சீருறு கலையோன் றெம்மான் செஞ்சடைக் கணியப் பெற்றான். [௩௯]

ஆகலான் மதிதோன் றேல்வை யதிகமிவ் விரத நோற்போர்
கோதறு பசிய தூர்வை கொண்டருச் சிக்க வெம்மான்
பாதபங் கயத்தி லென்று பங்கயன் பகரத் தூர்வை
யேதினுன் மிக்கா யிற்றென் றிரும்பிதுர் கேட்பச் சாற்றும். (௪௰)

கலிநிலைத்துறை

துன்னு தண்பொழில் சூழ்ந்திடு மவந்தியென் னகரந்
தன்னின் மன்னர்தம் வழிவரு தாரபதி சுலப
னன்ன வன்மனை கற்பினி லருந்ததி யனையாள்
பொன்ன னாள்வனப் பினிற்பெயர் புகல்சுபந் திரையே. [௪௧]

அனைய ளோடுகன் மனையறம் புரிந்துல கனைத்துங்
கனநி கர்த்தகை யாண்டகை காக்குநாண் மதுசூ
தனனெ னும்பெயர் மறையவன் மரவுரி தரித்தவ்
வினன்ம னைக்கொரு நாட்பலி வேண்டியெய் தினனால். [௪௨]

ஐய மீய்தலி லகமகி ழரசன்முற் பவத்து
வெய்ய தீவினை விளைவுவந் தடுத்தலி னகைப்பச்
செய்ய வேதியன் சினந்துசே வாகெனச் சாப
மெய்த வோதின னிலைதறிந் திறைமனை யடுத்து. (௪௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வேதியன் மனைவெ குண்டோர் வேசரி யாகென் றாளக்
கோதையைப் புலைசசி யாகென் றுனுயர் குலத்தோன் யார்க்குந்
தீதளித் திடுந்தற் சேர்ந்தார்த் தெறுசின மெனற்குச் சான்று
மாதுமுன் னுன வம்மூ வரும்பிற வுருவேற் றங்கண். [௪௪]

சீர்தரு செங்கோ றுங்குஞ் செம்மலோ ருழவற் கேறு
யோர்தரங் கங்கப பெறாறு னிவன்மனை புலைச்சி யாயவ்
வூர்மறு கலைந்து பிச்சை யேற்றுயிர் வளர்க்க லுற்று
ளோர்கர மாயூர்த் §தூசற் குடைப்பொதி பரித்தான் பார்ப்பான். (௪௫)

---

§ தூசன்- வண்ணான்.

எண்ணுமூ வருமிவ் வண்ண மிருக்குநா ளொருநாண் மாரி
மண்ணிடைப் பொழியச் சேத்தன் வன்றனை தெறித்த றன்னாற்
றுண்ணென வுழவற் றப்பி மாட்டமர் சுமுகர் கோயி
னண்ணியாங் கொதுங்கி நின்ற நவிலுமக் கோயின் ஞாங்கர். [சகூ]

வெரிநுறு மூடை தள்ளி மேய்தலி னின்ற புன்வே
சரியும்வந் தொதுங்க வொல்லை சார்ந்தது புலைச்சி தன்கை
யரிகொரோர் வைப்புல் லோடங் கணைந்தனின் மாலைப் போதும்
வாலினக் காமுஞ் சேவும் வாய்ப்பெயப் புல்லை யன்னாள். (சஎ)

காத்தின்வாய் தண்டத் தாலே காத்தின்வாய்த் தண்டுஞ் செய்ய
வுரத்ததன் குரலைக் †கோகங் கொல்லையிற் காட்டிக் காலால்
வருத்திய தானை யஃது வலிமைசே ரிருகொட் டாலுங்
$குரத்தினுங் கரத்தைக் குற்றக் கொடுங் *கலாம் விளைந்த வன்றே. (சஅ)

அற்றைமாண் சதுர்த்தி யாக வமைநவின் மாலைப் பூசை
முற்றுவித் தாங்கி ருந்த முனிவரர் புடைக்க மூன்று
முற்றவல் லிருளோ டாங்கே யுறுகணுற் புறத்தே காமே
சுற்றின தனிமைக் காற்றிற் றார்வையைங் கான்மெய் சோர்ந்த. (சகூ)

இழுக்குவந் தடுத்த தென்னு விருடிக டெண்ணீ ராடி
முழுக்கவா லயத்தைச் சுத்தி முடித்துநீர்க் கலயந் தாபித்
தழுக்கில்பல் பொருள்கள் கைக்கொண் டாகமம் விதித்த வாறே
பழுத்தமெய் யன்பிற் பூசை பண்ணியங் கிருந்தா ரிபபால். [ருய]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முனிவர ரடித்த லாதியா குலத்தான் முதல்வனந் தனிவரை யகலா, ‡தனவிரு மானு மினைந்திறந் தனகிழ் மகளுமவ் வாறவண் மாய்ந்தா, ளினை யவை வலம்போந் தருச்சனை யறுகா லியற்றின பிறவுமிங் கிழைத்த, வென விறை யுனமூன் றையுமொரு மானத் தேற்றின போந்திருங் கணங்கள். ()

அந்தண ரதுபார்த் ததிசயித் திஃதெவ் வாறெனக் கணங்களோர் முரு தந்திமா முகனுக் கிட்டதா லெனலுந் தளரா றுகலகில வாய்ந்து

---

† கோகு– கழுதை.
$ குரம- குளம்பு.
* கலாம்– சண்டை.
‡ அனவிருமானும்– அந்த இடபமும் கழுதையுமாகிய இரண்மெிருகங்களும்.

புந்தியோ டருச்சித் தார்பெறு பலனைப் புகலுழி னெனக்கண நாதர், முன் னொரு கவுண்டின் னியமுனி மனைக்கு மொழிந்ததுண் டாலென மொழி வார். [ருஉ]

அன்னநன் முனிவ னேவல்செய மனைவி யாசிரை யொருபகல் கணவ ன், றன்னடி தொழுது பரிமள மிருந்த சாதிமந் தாரமுன் னுன, பன்மல ரிருக்கப் பசியபுல் லறுகாற் பகவனுக் கருச்சனை புரித, லென்னது தெரிய வியம்புக தலைவ வென்னலு மகிழ்ந்தவ னியம்பும். (ருங)

முன்னொரு பொழுது நடுவன்வீ ரியத்து முளைத்தன லாசுர னெனப் பேர், மன்னொரு கொடியோன் வன்னிபொங் குருவோன் மண்ணுல கத்து யி ரொழித்துத், துன்னின னமர ருலகறிந் தவரச் சுதனடி புகநமன் மக னை, யென்னையுந் தடுத்தா ளிபமுக னலதியா ரிருப்பவ ரென்றுமா றுதித் தான். [ருச]

துதிக்குமான் முதல வமரர்முன் னைமையாள் சுமுகரோர் பிரமசா ரி யிற்போந், ததிர்கருமா கடனஞ் சயின்றதே நிகர்த்தவ் வசுரனை வாய்மடுத் தனரால், வெதுப்புதீப் பெயரோ னுயிர்க்குயி ராயெவ் விடையினும் விளங் கியெவ் வுயிர்க்கு, மிதத்தையே யருளே ரம்பனு ரகட்டி விமையந்திட வனை த்துயி ரகட்டும. [ருரு]

பொங்கெரி யழற்றப புக்கதாற் பொறுதெம் பூரண னகட்டழ லவிப் பான், றிங்கடன் னமுத நீரிறை குளிருந் தெளிபுனல் பாங்கினுட் டிடவு, மங்கையிற் சித்தி புந்திக ளமல னுருருக் தழுவவு மரிதண், பங்கயங்கொ டுவந் தொற்றவும் பாம்பாம பணியவும பணிந்தில வுருமம். [ருசு]

அவரவா நகவின் படிபல விவ்வா றுற்றியு மழலுத ஞெக்கித், தவ முனி வோரொண் பததெனு யிரவா தணித்தணி யிருபத்தோ ரறுகைக், கவல்வொழித் தருள்வான் றிருவுரு முழுதுங் கவினுறச் சாத்தவக் கணமே பவனுடல் குளிர்ந்த தனைத்துயி ரனைலும் பனிமல ரெனக்குளிர்ந் ததுவே.

சாலநம் முருவி னழற்றுமெவ் வழலைத் தணித்திடப் பலவுப சாந்த, மேலவர் தத்தந் தகுதியி னிழைந்தும விளிர்ந்திடா திருப்பமா தவத்தீர், கோலநல் லறுகு நீயிர்சாத் திடவக் கொடியவெப் பொழிந்ததா தலினன், மாலதி முதற்பன் மலரொடு பின்னும் வளங்கெழு பலபொரு ளானும். [ ]

பலவுப சாரத் தெவரொமைப் பூசை பண்ணினு மறுகிடா திருப்பி, ன லனுறு பூசை யெனக்கொளேம் வேட்ட வேட்டவா நல்கவு முன்னேஞ், சிலவுப சார மிழைத்தலு மின்றிச் செறிபித ழறுகுதா வெமையெவ், வுல கவ ரெனினும் பூசனை புரியி னுவந்தவர்க் கிருமையு மளிப்பேம், [ருகூ]

அப்பசும் புல்லை மறுகளை விலைகொண் டருச்சனை புரிதனன் றிலதேல், வெப்பொழி மூவே ழென்னினுந் தூவல் வேண்டுமெற் றிஃதுமொல் லாதே, வொப்பிலோ ரறுகா யினும்பரி வாற்கொண் டுவப்புறச் சாத்துக வென்று, திப்பிய வரங்க ளருளினன் மறைந்தான் றிருவருட் குரியருண் ணிறைந்தான். (௬௰)

சுந்தர விளமைப் பிரமசா ரியின்முற் றோன்றிய தன்மையி னானும், வெந்தழற் பெயரோற் கொன்றதின் விளைந்த வெப்பினைத் துயிர்கட்கு மொழித்தே, யிந்துவை நிகர்த்துச் சீதள மளிவை யீய்ந்தவத் திறத்தினும் பால, சந்திர னெனப்பேர் தந்திமா முகத்துத் தம்பிரான் றனக்குவந் ததுவே. [௬௧]

ஆதலி னன்று தொட்டறு கெனும்புல் லைங்கரற்கு வந்ததா யிற்றென் றோதினன் கேட்டக தவன்மனை யிறும்பூ துற்றிருந் தனளிது நிற்கக், கோத்று தவத்தீ ரின்னுமோர் காதை கூறுது நுங்களுக் கெனவம், மாதவா மகிழச் சிவகண நாதர் வகுத்தினி துரைக்கலுற் றனரால். (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

மதுவழிந் தொழுகப் பூத்த மலர்த்தடஞ் சோலை சூழ்ந்த
மிதுலைமா நகராள் வேந்தர் வேந்தனுஞ் சனக னென்போன்
றிகழுறு சிவனே யெல்லாத் தேவுக்கு மேலாந் தேவென்
பதுசிறி தேனுந் தேறான் பயின்றுதான் பிரம மென்னு (௬௩)

மனத்தகங் காரங் கொண்டு வதிதல்யாழ் முனியே ரம்பன்
றனிப்பதம் பணிந்து ரைப்பத் தாதிப னுட்கொண் டாய்ப்பா
னினைத்தெந்தை யவன்பாற் குட்ட நிகழொரு மறையோன போற்சென்
றெனைத்தெறு பசிதீ ரைய வெனவவன் றன்சேய்க் கோதி. [௬௪]

அருத்துக மறையோர்க் கன்ன மெனவவன் பதம்வி ளக்கிக்
கருத்திலுள் ளழைத்துப் போன கத்திர ளரம்பைப் பன்னந்
திருத்திமேற் படைப்பித் தைய திருக்கைதொட் டருள்க வென்றே
பொருத்துரை மொழிந்து கைக்கொள் புதுவிசி றியின்வீ சுற்றான். [௬௫]

அண்ணனீர் வளைத்துத் தொட்டா னறுசுவை யுண்டி முற்றுங்
கண்ணினு ளின்மை கண்டார் கருத்தனைச் சூழ்ந்தார் பின்னர்ப்
பண்ணிய பண்ட மெல்லாம் படைத்தனர் மடைய ரொல்லை
நண்ணிய வெவையு முண்டான் படைப்பவர் நாண வன்றே. [௬௬]

மிடையுவட் டனவ னைத்தும் விளம்பின மிவர்க்கே யின்று
மடையவும் வேண்டி னட்டிங் கிடுதுமென் றளையின் சேய்க்கு
மடையரங் கியம்பல் கேட்டு மறையவ னடாத வுண்டேற்
படையுமி னெனமன் மைந்தன் பண்டசா லைகளை யெல்லாம். (சுஎ)

ஒருங்குடன் றிறந்து காட்ட வொண்பொருண் முழுது மொல்லை
யருந்தியும் பசியா றானீ தாசறிந் ததனுட் டுள்ள
விரும்பொருண் முழுது மீண்ட விடுகென விட்டார் வெற்பின்
வரும்பொரு ளனைத்தும் வல்லை வாரியந் தனன்வாய் பெய்தான். (சுஅ)

கண்டவர் தொழுநோ யாளன் கடும்பசி தணியா தாயின்
மிண்டெமை விழுங்கு மென்று வெருண்டெ னிரியல் போனார்
வண்டமிழ் மாறன் செல்வ மகடிருக் கலியா னைத்தி
லுண்டவன் பூத மோவென் றேங்கலா சங்கை கொள்ளா. (சுகூ)

இனியவன் பசிக்கென் செய்வா மெனவினைந் தந்த ளை
குனிகடன் ஞாலத் துள்ள பொருண்முற் றுங் கொணரு வித்து
நிவதுத ரத்துக் காற்று மையினது நிரப்பு வானை
நனிவினாந் தடுத்து ளைத்த னன்றென நவிலு மையன். (எய)

இருநிலப் பொருள்க ளெல்லா மீய்ந்துளே னென்றும் வேண்டிற்
றருபவ னிடைச்சா கென்றுஞ் சாற்றனின் வாய்மை சீர்த்தி
யருள்கொடை பிறவுங் காட்டற் †கான்றசான் றுமே மன்ன
பிரமமு மென்னை யல்லால வேறிலை யெனப்பே சுற்றுய. (எக)

நொடிக்குமுன் னண்ட மெல்லா நாறிப்பின் பண்டு போலப்
படைத்திட வல்ல நான பராபர மாவா யேலென்
னடுத்தபுன் பசியும் போக்கா தளிப்பவ ருழிப்போ கென்ன
விடுப்பையோ துயர்தோய் நீயோ விளம்பரும் பிரம மாவாய. (எஉ)

எனவர சனுந்துன் புற்று னிருமறை யாள னென்ன
மனனிலம் விடுத்தே ரமபன் மலரடிக் கன்பின் மிக்கான்
றினமு§நல் குரவி னோர்க்குந் திரிசிர செனும்பே ரோனோர்
பனவனிற் புகலு மன்று னெதிர்கொடு பணிந்தி றைஞ்சி. (எங)

---

† ஆன்றசான்று—தக்கசாட்சி.

§ நல்குரவு—தரித்திரம்.

உரவரீ போர்த தென்றெனன் றுரைப்பவெம் பசியொ ழிப்பா
னரசனுஞ் சனகன் பால்வந் தடையமுற் றளித்தா னல்லன்
பரவும்ப் பசிதீர்ப் பான்வந் தனனெனப் பனவன் பன்னி
‡குரவ்வி ழோதி யாளாம் விரோசனை கூறு கின்றாள். [எச]

நிறைதடப் புனற்கு டித்து நீங்கிடாத் தாக மில்லி
செறிசிறு காக நீருண் டிடுதலிற் றீர்த லுண்டோ
மறையவ னெருநல் காறும் வாழ்ந்தனம் யாச கத்தின்
றிறையவற் கியற்று பூசை யறுகலா திலேவே றென்றும். [எரு]

எனத்தம தியல்பு சாற்ற விறைவனுண் மகிழ்ந்து கோட்ட
மனத்தொடு பனைபோற் செல்வர் வழங்கினும் பயனின் றில்லார்
தினைத்துணை யேனு மன்பிற் றந்திடிற் றீர்மிக் கோங்கு
நனைத்திகழ் குழலோ யேற்றோர் தமக்குநற் கீர்த்தி நண்ணும். [எசு]

பேறிதன் மேலு முண்டே யென்றவட் கியம்பிப் பெம்மான்
வீறறு கேற்றுத் துய்ப்ப வெறியவம் மனையிற் செல்வங்
கூறரி தெனச்செ றிந்த குலவுமந் நகரு நாடு
மேறிய பொருள்க ளூறு மடங்குமுன் னினுமே லாக. [எஎ]

அதிகயாந் தூர்வை கொண்டா ராஞ்சிறு தூர்வை யுண்டார்
விதுவணி முடிய ராகி விளங்கிய வடிவங் கண்டார்
கதியெமக் களித்தி யென்னக் களித்தறு கிப்ந்த மாதும்
பதியுமெப் பசுவும் பேணும் பதிபதம் பணிந்தி ரந்தார். [எஅ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னவேண் டுதலை யருடுமென் றெந்தை யவ்வுரு வுடனவ ணிருப்ப, விங்கிலே யனைத்துஞ் சனகனோர்ந் தனைய திரிசிர னில்லிடை யேகிச், செங்கிறந் திகழைங் கரமறை யவனார் திருவடி யிறைஞ்சிநின் றெளியே, னின்னிலை தெரியா திழைபிழை யனைத்தும் பொறுத்தரு ளிமலவென் றிரந்தான்.

பற்றுமுற் றொழித்தார் பற்றவோர் கொழுகொம் பாகவுற் றமொரு கொம்பன், கொற்றமெய்ச் சனகன் பக்குவ நோக்கிக் கோதிலா வாகம விதியின், மற்றவன் றனக்குத் தீக்கைமுன் புரிந்து மறையருள் வாக்கினுற் றயிரி, னுற்றநெய் யதுபோற் பதிபசு பாச வியல்பினைக் கருணையி னுரைக்கும்

‡ குரவு—நறுமணம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பதியொன்றே பசுவ நேகம் பாசமா ணவமே கன்மந்
திதிபெறு மாயை யென்னச் செப்புமோர் மூன்ற தாகு
முதுபதி மலச்சார் பொன்று *மூவகை யான்மா வுக்கு
மதிபதி யென்ப வன்ன வருமபொருள் யாமே யாகும். (அக)

குறிகுணங் கடந்தா னந்தக் கோலமார் நிலைநின் றெல்லா
மறிகுண நமக்கே யுள்ள தறிவித்தா லறிய நிற்குஞ்
சிறுமதி யுடைய தான்மாச் செம்பினுட் களிம்பு போல
வறிவிசசை தொழிலு யிர்க்கு மறைத்தலா ணவத்தின் செய்தி. [அ௨]

பசுமன மொழிகா யத்தாற் பற்பல பிறவி தோறு
நசையுட னியற்றல் கன்ம மனைய து நன்று தீதென்
றிசையிரு வினையிற் றுமின் னதன்பய னின்பு துன்பாந்
தசை*யுட லாதி நான்கு மாயையி னியல்பே சாற்றின். (அங)

சுத்தமே யசுத்த மென்ன விருவகை மாயைத் தோற்றஞ்
சுத்தமே சடம ரூபஞ் சொல்வடி வாகி மேலுஞ்
சுத்தமாந் தனுவா திக்குந் துகளில்கா ரணம தாகிச்
சுத்தமாய்ச் சித்த மேன்மா றேய்ந்திடா திருப்ப தாமே. (அச)

உருவதாய்ச் சடம தாகி யாவியின் கருமங் கட்குப்
பிரளய முறுங்கா லத்துப் பெறுமுறை விடம தாகி
மருவுறு சுத்தா சுத்த மசுத்தமவந் திடற்கு முன்னர்க்
கருவியாய் மயக்கஞ் செய்யுங் கருதரு மசுத்த மாயை. (அரு)

பந்தவா ணவமா யாயை பகர்வினை யெனுமிம் மூன்று
மந்த மிலான்மா வுக்கே யல்லதெட் டுணைய தேனு
நந்தமக் கிலையி வற்று ணந்திரு வருளை யன்றி
வந்துறு கன்ம மாயை மலத்தின்மூழ் கான்மா வுக்கே. (அசு]

பதியெனு மெமக்கும் பொல்லாப் பாசமென் பதற்கு மூடே
வதிபசு சார்போ தப்பேர் மன்னலா னம்மை யன்றேற்

---

* மூவகையான்மாக்கள்-என்பது—ஆணவம், என்னும் ஒருமலத்தையுடைய விஞ் ஞானகலரும், ஆணவம், கன்மம், என்னும் இருமலங்களையுடைய பிரளயகலரும், ஆண வம், கன்மம், மாயையென்னும் மும்மலங்களையுமுடைய சகலருமாம்.

* உடலாதி என்பது—தனு, கரணம், புவனம், போகம், என இந்நான்குமாம்.

ற்றைதமலைந் தன்னைப் பற்றுந் தனித்திரா தொக்க கண்கள்
கதிருமிழ் சுடனா யன்றேறற் கங்குலைப் பற்று மாபோல். [அஎ]

பாசமும் பசுவு நாமும் பகர்தரி னநாதி நித்தம்
பேசின்யா விறுதி றைந்து வியாபக மாய்ப்பி றங்கு
மாசுறு வினையி ரண்டும் வரும்பல பவங்கட் கெல்லா
மூசுறு வித்தாய் மன்னு மதனியன் மொழியுங் காலை. [அஅ]

இதைவிலா காமி யஞ்சஞ் சிதம்பிரா ரத்த மாமூ
விதமதா யுநவு லுந்தோ ற்றிய றற்றல்கட் டுண்டு மேவ
றதைவினைப் பயன்க டுய்க்க லாவதாஞ் சஞ்சி தந்தீர்ந்
திதமுறுங் காறு யான்மாப் பிறப்பிறப் பிடைய றாதால [அகூ]

§ அண்டசஞ் சராயு சஞ்சு வேதச முற்பிசப்பேர்
கொண்டநால வகைத்தாம யோனி குறுகிடுவவ வேறு யண்ட
ரொண்ட ருநரர்வி லங்கு பறவையூர் வனவி றைக்குந்
தெண்டிரை நீரின் வாழ்வ செறிந்ததா வரமே யென்னும். [கூ0]

ஏழ்வகைப் பிறப்பி னுள்ளு †மெண்பத்து நான்கி லக்கத்
தாழ்படு தனுவிற சீவன் பரிணமித் துறுதன் பின்ப

§ அண்டசம—முட்டையிற றோன்றுவனவாகிய பறவைகளும், ஊர்வனவும், நீர் வாழ்வனவுமாம்

சராயுசம—கருப்பையிற் றோன்றுவனவாகிய தேவர்களும், மனிதர்களும், நாற் கால்விலங்களுமாம்.

சுவேதசம்—வேர்வையிற் றோன்றுவனவாகிய கிருமி, கீடம், பேன்முதலியசில ஊர்வனவும், விட்டில், முதலிய சிலபறவைகளுமாம்.

உற்பிசம்—வித்து, வேர், கொம்பு, கொடி, கிழங்கு, முதலியவைகளை மேற்பி ளந்து தோன்றுவனவாகிய தாவரங்கள். எனஉயிர்த் தோற்றங்கள் நால்வகைத்தாம்.

† எண்பத்துநான்கிலக்கத்தாழ்படுதனுவாவன—,

[க] தேவயோனிபேசம் (கக00000) பதினொரு இலக்ஷம்.
[உ] மனிதர் ஷை (கூ00000) ஒன்பதுஇலக்ஷம்
[ங] நாற்கால்விலங்குஷை (க000000) பத்து இலக்ஷம.
[ச] பறவை ஷை (க000000) பத்து இலக்ஷம்.
[ரு] ஊர்வன ஷை (கரு00000) பதினைந்து இலக்ஷம்.
[சு] நீர்வாழ்வனஷை (க000000) பத்து இலக்ஷம்.
[எ] தாவரம் ஷை (கக00000) பத்தொன்பது இலக்ஷம்.

வாழ்வினை நுகரு மீதின் மானிடத் துதித்தல் கைபர்
லாழ்கட னீந்தல் போலா மன்னதி லறமே செய்யின். [௬௧]

தூலமெய் யொழிந்த போது சூக்கும தேகத் தும்பர்
போனுந்தே சுருவ டைந்து பொன்னுல கெய்தி முன்னச்
சாலுநல் வினைக்கி டாகத் தனிநல மனுப வித்து
மேலேஞ்சு கன்மத் தாலே மீண்டுமா னிடம தாமே [௬௨)

செய்வினை யெல்லாந் தீங்காச் செய்துநாட் கழித்த சீவன்
பொய்யுடல் விடுத்த போதே *புரியட்ட ரூபத் தோடும்
வெய்யமெய் யதனை யுற்று நிரயத்து வீழ்ந்து வீழ்ந்தாங்
கையகோ துன்பத் தாழு மன்னவை யில்லை யாயின். (௬௩]

வேறொரு தூல மேவும் வெய்யவன் னரகில் வீழ்ந்த
வீறிலான் மாக்கள் கன்ம சேடத்தா லிருநி லத்துக்
கூறுபுற் புதலா யோங்கு கேகடுறு மரமாய் நீரி
லூறுரு துலவு செந்தா யூர்வன வாய்ப்புள் ளாகி. [௬௪]

மிருகமாய்ப் பின்முன் செய்த நல்வினை விசேடத் தாலே
யருமையா முத்தி யெய்தற் கருகமா மனுட யாக்கை
மருவுமின் னதிலி ரண்டு வினையினும் வருப யன்கள்
பொருவறு சமமென் றேரும் பக்குவம் பொருந்த வாய்ப்பின். (௬௫)

‡சத்திநி பாத மெய்தத் தத்துவ ஞானந் தோன்று
மத்தகு ஞான நல்கு மருட்குரு நோக்காற் சீவன்
முத்தனு நிராசை மன்னி முதல்வனை யிடைவி டாதே
யெத்திறத் தானு மொன்றி யின்புரு வாகி நிற்பன். [௬௬]

---

* புரியட்டரூபம் என்பது—சத்த ஸ்பரிச ரூப ரச கந்தம் என்னுங்காரணதன்மாத்திரையைந்தும், மனம் புத்தி அகங்காரம், என்னும அந்தக்கரண மூன்றுமாகிய எட்டினுலும் ஆக்கப்பட்டு, ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாய், அவ்வான்மாக்கள்போகம் அனுபவிப்பதற்குக கருவியாய், ஆயுள் முடிவின் முன்னுடம்புவிட்டு மற்றேருடம்பு எடுத்தற்கு எதுவாய் இருக்கும் அருவுடம்பு, இஃது தான் சூக்கும சரீரமென்றும் பேபர் பெறும்.

‡ சத்திநிபாதமாவது—ஆன்மாவினது ஞானத்தைத்தடுக்கும் ஆணவமல சத்திநழுவும் அவசரத்திலேமுற்பிற் பாடறச்செலுத்தினது சிற்சத்திபதிந்து அவ்வான்மாவினது நித்திய ஞானக்கிரியையை விளக்குவதாம.

ஆதலாற் பசுவைப் பாச வலியினின் றகற்ற வல்ல
வேதமில் பிரம மியாமே யினையுநீ யென்று மாகாய்
நீதகு பிரம மாகு நினைப்பெர்டு மறப்பு மைந்து
வாதையு முன்பாள் மாறி மாறிவந் திடுதலென்னே. [கஎ]

பெத்தத்தே யுழனீ யன்ன பெத்தர்க்கு முதல்வ னுவை
முத்திக்கு முதல்வ னேயா முத்தர்க டொழுவன் னூர்தஞ்
சித்தத்தே தயிரு ணெய்போற் சேர்ந்தொளிர்ந் திருப்பே மேனைப்
பெத்தர்க்கோ பாலு ணெய்போற் பிறங்கிடா திருபபே மன்னு. [கஅ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

இனியெம தருளா னினக்கியா மிசைத்த வெவற்றையு முணர்ந்துவே றற்றுத், தனிமையா யபாவ மாகியே துவித பாவனை தன்னைநீ விடுத்து, மூனர்மலத் திருத்தும விழைவென வந்த முதலிடை யிலாதகம் மிடத்தே, யுனுமன னிறுவிச் சுகமுற வாழ்கென் றருமுனைறந் தருளின னசலன். [கக

பொருடரு மிறைவ னருண்மழை யெனவே பொழிந்தவை யனைத்தை யுஞ் சனகன், றெருளுறக் கேட்டுச் சிந்திதது தெளிந்து சிவானந்த போக மா நிட்டை, மருவிமெய்ஞ் ஞானி யெனவக விடத்தோர் மதித்திடத் தெண்டிரைக் கடல்சூ, ழிருநிலம் புரந்து வாழ்ந்தனன் சீவ முத்தனு யினிதிருந் தன்றே [ஙா]

ஓரறு களித்த நன்மையின் வறுமை யொழிந்தரும் பேறெலாம் பெறவு, மேர்கொளவ் வகத்தே யதிசய மளவற் றெய்தவு மேயந்திடிற் பசிய, தூர்வையெண் ணிலவா வருச்சனை புரிவோர் தோய்நலத் தளவையிவ் வளவென், றுருரை செய்ய வல்லரோன் றறைந்த வருங்கண நாதர்கள் பின்னும்.

‡ ஓரறு களகைக் கோன்றலை புகுந்த கதையுமங் குரைத்துவிண் ணடைந்தா, ரோருறு மறுகாற் புலைச்சியுங் காமு மிடபமுங் கதியினைய் வுற்ற நாருறு முனிவ ரறுகுகொண் டைங்கை நாதனைப் பூசனை புரிந்து, சீருறு பதவி யடைந்தன ரறுகின் சீர்மையீ தெனவய னவின்றான். (ஙஉ)

---

‡ ஓரறு களகைக்கோன்றலைபுகுந்தகதையாவது, மேற்கூறிய கவுண்டின்னியமுனிவர் அறுகின்மகிமையாவரும் அறியும்பொருட்டு தம்மனைவி ஆசிரையிடத்துத் தாமருச்சித்த அறுகுகளில் ஒன்றைகொடுத்து அவ்வறுகிடைக்குப் பொன்வாங்கிவரும்படி தேவேந்திரத்தினிடத்துக்கனுப்ப இவன் ஷை முனிவர் மனைவியை அளகைக்கோனிடத்துக் கனுப்பியபோது அவ்வோரறுகிடைக்கு, குபேரனுடைய பொக்கிஷ முழுதுங் காணமற்போனநிமித்தம், அவனும் அப்பால் தேவேந்திரனுந் திரிமூர்த்திகளும்அவரவர்கள் பரிசனங்களோடு துலையேறியும், அறுகிட்டதட்டு உயரமைகண்டு சகலரும் வியந்து கவுண்டின்னியமுனிவரிடத்துக்குவந்து, அவரைப்புகழ்ந்துவெவ்வேறு வரங்கொடுத்துத்தத்தம் பதவியை யடைந்ததும், சிவபிரானது கட்டளைப்படி காமதேனு கற்பக விருக்ஷ முதலியவைகள் வந்து அம்முனி புங்கவர்க்கு ஏவல செய்திருந்தனவுமாம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விரவு பசுந்தூர் வையின் மேன்மை விளம்பக் கேட்ட பிதிர்தேவன்
குரவ னிருதாண் மலர்பணிந்து கூறுமங்கிதான் றேனு நண்ணை
வரிய தாயிற் பயன்பூசை யாற்று மாறிங் கடியேற்குத்
தெரிய நவில்க வெனலுமயன் சிந்தை களிகூர்ந் தியம்புவான். [௩௩]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பலவகை யான §வோடதி களுஞ் †சொற் பதங்கள் தராமைபோல் வன்னி, நிலவுமந் தார மைங்கரன் பூசைக் குறைபொருள் களினிக ரற்ற, விலை கொள்வன் னியைமுன் னியம்புதும் விதற்ப தேத்திரு தேயமென் றுரைக்கு, மூலவில்சீர்ப் பதியில் வேடர்தம் மரபி லுதித்துளான் வீமனென் றொருவன். (௩௪)

தீமையே யலது நன்மைசற் றெனினுஞ் செய்தறி யாதவன் வழியிற், போமவர்க்குறுகண் பலபுரிந் தவர்தம் பொருள்கவர்ந் துண்பவ னொருநா, டேமலி யிதழித் தார்முடி யிறைவன் றிருவிழாப் போற்றவங் கெதிர்ந்த, மாமறை யவர்க்கோன் றவர்பொருள் வவ்வி வருபொழு தாங்கொரு நிருதன். ()

வெருக்கொடு புலியின் முடுக்கவப் புளிஞன் வெருக்கொடாங் கமர்சமித் தருவிற், பொருக்கென விவர்ந்தா னிவர்ந்திடு விசையிற் புகலுமத் தருச்சினை நின்றோர், மருக்கமழ் முறியம் மரமுதல் வதிகை மாமுகன் றிருவடி விழுந்த, தரக்கனு மிவர வொருதனி ரமல னணிமுடி மிசையின்வீழ்ந் ததுவே. [௩௬]

இருவரும் பொருதாங் கிருநிலத் திடைவீழ்ந் திறந்தன ரிறைவனின் னருளா, லொருபெரு விமான முறவதி னிவர்ந்தே ருலவுவா முகனுலகடைந்தா ரருள்பெறு மவர்பூ ருவவினை யுரைத்து மணிமலி விதர்ப்பநா டளிப்பான், வருபெயர் சாம்ப னென்னுளா னவன்றன் மந்திரி துன்மதி யென்பான். [௩௭]

அன்னமன் றிரிபா லரசியன் முழுது மடைத்தர சாய்வருசாம்ப, னன்னெறி யொழுகா துன்மதி நுகர்ந்து நாரியர் தங்களுக் காளாய், மன்னின னொருநா ளமைச்சொடும் வனத்து வேட்டம்போய் மீண்டிடும் வழியி, வின்னறீர்த் தருளே ரம்பனை வசிட்ட னிருத்திமுன் னேத்தொரு கோயில். []

§ ஓடதி—மருந்து.
† சொற்பதம்—நெல்லன்னம்,

கலிப்பா.

உயர்சிகரி நெடுங்கானை யுறவங்கே சாம்பனெய்திச்
செயிரில்சின காமவாழ்நஞ் செம்மலுக்கட் பதியர்சிலர்
மயறவிர்வான் பொங்கலிட மஞ்சனமாட் டிடச்சிலர்தாம்
வியனுறுமெதன் கனிமுதலா மிகப்படைத்துச் சிலர்துதிப்ப. [௱௯]

சிலர்நடிபபச் சிலர்சேவை செய்திடக்கண் டையனுந்தன்
கலைபயிலா வமைச்சொடொரு விளையாட்டாக் கனிகாய்தேன்
றலைபெருகாட் டிடைநெருங்கித் தானையதைக் கொடுவரச்செய்
தலகில்விளை யாட்டயரு மைங்கரனார் முன்படைத்தே. [௱௰]

நாளுமுனக் கடிமையென நவின்றுவலஞ் செய்துபின்ன
ரூனமிறன் னகரடைந்தாங் கொள்ளிறையார் மயலின்முற்றி
வானெனவு மண்ணெனவு மலையெனவுங் கடலெனவு
மீனமிகு பாவமுன்போ லீட்டிவாழ்ந் தனன்முடிவில். [௱௰௧]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துன்றிய நடுவன் றூதர் சூழ்ந்தமைச் சோடும் வேந்தை
வன்றிறற் பாசத் தீர்த்து வருத்தியங் கவன்முன் னுய்த்தார்
கன்றுநந் தையைய ராவைக் காணரி புள்ளோ றென்னத்
தென்றிசைக் கிறைவ னேகச் சித்திர குத்தற் கூவி. [௱௰௨]

இவரியல் புரைப்பா யென்ன விருவரு மிறக்குங் காறு
நவையுறு தீமை யன்றி நன்மைசற் றுஞ்செய் யாதா
ரவிளை யாட்டி னோர்நா ளைங்கரப் பெருமான் முன்போய்ப்
பவவுனக் கடிமை யென்னப் பகர்ந்ததுண் டென்றான் கேட்டு. (௱௰௩)

புண்ணியப் பயனை முன்னர்ப் பொருந்துமா றிவர்க்கின் றற்று
னண்ணுபா வப்ப யன்று னரகம்யா வினுமுய்த் தெய்தப்
பண்ணுமி னெனவன் றூதர் படுத்திய பாடு கேட்டோ
ருண்ணினைந் திடினுங் கம்ப முறுவரோ லோதற் காமே. [௱௰௪]

வெய்யநா லேழு கோடி நரகினும் வீழ்த்தி வீழ்த்தி
யையகோ வவையொவ் வொன்றுக் காயிர மதற்கு மேலா
மெய்துமாண் டிடும்பை செய்தா ரிவ்வண மாழ்ந்து லைந்து
முய்வகை யில்லார் பாவத் துற்றிடு மெச்சத் தாலே. [௱௰௫]

நன்னரில் காகங் கூகை நாகந்தே ணகுல மேன
முன்னிகர்த் தபநாய் பூனை யொட்டக மதமால் யானை

யென்னவெண் டிளைநீர் சூழ்ந்த விடமகன் புவியி டத்துப்
பன்னரும் வகையி யற்றும் பவத்துளா யினரா வின்னும். (ஙயகூ)

இழிந்தபல் யோனி தோறு மிவ்வணந் தோன்றித் தோன்றி
யழிந்துயர் இணையாண் பாவி லவதரித் தற்ப மேனும்
வழிந்தொழு கன்பி லாத வல்லரக் கனுமா யீர
மொழிந்தவே டுவனு மாயன் றுயர்சமி மாத்தி வர்ந்தார். [ஙயஎ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்னபா தகப்பே றிவ்வணந் துய்த்தே யகன்றபின் புண்ணியப் பேறு, முன்னமோர் கணேசற் கோர்விளை யாட்டா முடித்தபூ சைப்பயன் றுய்ப்ப, வன்னிவான் றளிர்வீழ்த் தபுத்திபூர் வத்தான் மாய்ந்ததோ ருயர்ந்தபூசனையா, மென்னவத் தருமூ லத்தின்வாழ் கணேச னின்னருள் செயக்கதி சேர்ந்தார். (ஙயஅ)

இனையவைங் கரனை வன்னிநீ ளடியி லிருத்திமால் சடக்கரஞ் செபித்துத், துனிபுரி யிரணி யாசுரற் படுத்துத் தூயவை குந்தமன் றடைந்தான், பினருமவ் விறையைப் பணிந்திர ணியன்றன் பின்னவற் படுத்தவன் றனையன், றனையுமாங் கொழித்து வாமன னுய்ப்பின் சாய்த்தனன் மாவலி தனையும். [ஙயகூ]

இன்னகா ரணத்தாங் கெழுந்தருள் புரியு மிணையிலா விநாயகர் தம்மை, வன்னிமா விண்டு விநாயக ரெனவும் வாமன விநாயக ரெனவும், பன்னுவா ரொன்னப் பண்பொடு பகர்ந்து பங்கயப் பொருட்டுறை பகவன், மின்னுபா சடைசார் சமியொடு மலர்மந் தாரத்தின் மேன்மையும் விளம்பும். (ஙஉய)

பண்டொரு தினத்துக் கயிலையங் கிரியிற் பார்ப்பதி சிவபரஞ் சுடரோன், முண்டக மலர்த்தாள் பணிந்துகுஞ் சரமா முகன்சமி யுவந்ததென் கனிவாய், விண்டினி தருள்கென் றிரப்பவெம் மீசன் விள்ளும்வின் னுதலினுய் புவியில், வண்டினம் முரல்பூம் பொழில்வளை கண்ண மென்றொரு மாநகருண்டே. [ஙஉக]

அன்னதொன் னகர்க்குக் காவலன் பிரிய விரதனு மவன்மனை கீர்த்தி, பொன்னிகர் பிரபை யெனுமிரு வரிற்பின் னவளெனும் பிரபைபாற் பொருந்தி, மன்னன்மா ‡விபவ மளித்திட வவளோர் மகளையும் பயந்துவப் படைந்தான், முன்னவள் கொழுநன் பணிதவ றுளோர் நாண்முத லவனிடத் துறலும். (ஙஉஉ)

---

‡விபவம்—செல்வம்

இளையவள் வெகுண்டிங் கெனடுத் தனையென் றெழுந்துதைத் திடவிஷ்ற பார்த்து, மனியிலன் போல்†வா ளாதிருந் தனன்மூத் தாளுயி ரகற்றிடக் கருதி, புளைவொடு வெளியே வருபொழு தாங்கோர் கணிதனுற் றவண்முக வாட்ட, வினைவறிந் தோம் பனையருச் சிக்கின் வேந்தனின் வயப்படு மின்னே. (௩௨௩)

என்றலும் தியற்று முறைமையு மியம்பி யேகினன் பின்னரக் கீர்த்தி, யொன்றிடர் களைந்து நறுமலர் தூர்வை யாதிதொக் குறுதிர வியத்தாற், றென்றரி யயன்வா னவர்முத லானோர் தூயநற் பூசனை முடித்து, நன்றடை *தேவ தருநிழ லொன்று நாயகன் பூசனை புரிந்தாள். [௩௨௪]

நித்தலும் பரிவி னிவ்வணம் பூசை நிகழ்ந்திவந் திடுதலு மோர்நா, ளுத்தம வறுகு கிட்டுத லின்றி யுளந்திகைத் தெதிருறு வன்னிப், பத்திரம் பறித்துக் கொணர்ந்தனர் பணிசெய் பாவைமா ரறுகிடு நியம, மித்தின மொழிந்த தேயென வுள்ளத் தினைவுகொண் டன்னபொற் றொடியும் (௩௨௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வன்னியந் தளிர்கைக் கொண்டு வரதர்செம் மலர்த்தாண் மீப்பெய்
துன்னரும் பூசா நேச முளுற்றியுந் தினம ருந்து
மன்னமன் றொழித்தா ளத்‡தோ மகன்றிட வருமோ ரம்ப
முன்னவ னவள்க ளுவின் முதிர்சமிச் சடில ராகி. (௩௨௬)

வாணனி விரிம தாணி மார்பணி மானீ தந்த
நீணில மருவும் வன்னி நிலவுமெந் சடையின் மன்னிப்
பூணுதல் காணி னுள்ளப் புன்கணீங் கிடுதி யின்னே
கெனினக் கியைவ நீசெய் கெழுமுபூ சனைக்கு வந்தாம். [௩௨௭]

தருகுது மென்ன லோடுந் தனியிளம் பிடிவ ணங்கி
யருகுறு தூணி னுணி யடுத்தெதி ராடா தங்க
ணுருகுளத் தோடு நிற்ப வுற்றிடு குறிப்பு நோக்கி
முருகவிழ் கடுக்கை வேணி முதல்வனல் லருள்வ ழங்கும். [௩௨௮]

பொற்றொடி யின்று தொட்டுப் பூதலம் பொறுத்தாள் கின்ற
கற்றிணி புயம னின்மேற் காதன்மீக் கூர்வான் வாஞ்சை

†வாளா திருந்தான்—மௌனமாயிருந்தான்.
*தேவதரு—மந்தாரமரம்.
‡தோம்—குற்றம்.

யுற்றிடு பிரமை யாம்பின் னவடெரு ற்றுவா ணின்பூால்
வெற்றிகல் கொருசேய் தோன்றும் விளம்புமோ ராண்டு சென்றுன். [ ]

வருறு மகற்குக் கிப்பி ரப்பிர சாத னென்னப்
பேரிடு பிராய நான்கிற் பிழைசெய்மாற் றவள ருத்து
மாருநஞ் சடிசி னுண்டாங் கலக்கனுற் றழுந்து மீதுந்
திருமெய்த் தவக்கி ருச்ச மதமுனி சேவை யாலே. [௱௩௰]

எனவர மளவின் றீய்ந்தே யிம்மென மறைந்தா ரன்பர்
மனமலர் மிசையின் வைக வைகறை துயிலி னீங்கிக்
குனிநுதல் கனவிற் கண்ட குணனெலா மகத்துட் கொண்டு
புனிதனைங் கரனைப் பூசை புரிந்தினி திருந்தா ளிப்பால். [௱௩௧]

மாற்றவள் பிணியுண் மூழ்கி வனப்பழிந் திடநீள் வையம்
போற்றுமன் னவடன் போகம் போக்கியின் னவட்கே முற்றுந்
தோற்றலில பொக நல்கச சுகமனு பவித்தாண் மூத்தா
ளாற்றலிற் சிறந்த கைம்மா வானன னருளா லம்மா. (௱௩௨)

வளர்சிறப் பனைத்து மல்க வாழ்வுறு மூத்தா ளொற்றை
யிளவலைப் பயந்து கிப்பி ரப்பிர சாத னென்ன
வளைவள ருரகம் பூண்ட வண்ணலன் றிசைத்த வாறே
நளிர்தரு நாமந் தநதா ணுயகற் கேமந் தந்தாள். (௱௩௩)

பிறையென வளர்ந்து மைந்தன் பிராயநான் குறத்தாய் மாற்று
ளிறைமைதன் சேயி மூக்கு மெனவுளத் தெணிக்கொ னஞ்சு
செறியமு தீய்ந்தாண் மூத்தாள் சிறுவனுக் கவனே ஞது
தறைவிழ வஞ்ச னஞ்சி யதுதவிர்த் திடமு யன்று. (௱௩௪)

பல்வகை புரிந்தும் யாதும் பயன்படா திருப்பக் கண்ட
வில்வளர் மணிப்பூண் கோதை விமலனன் றருளிச் செய்த
நல்வர நினைவுட் டோன்ற நலிவுறு கணவற் றேற்றி
மல்வளந் தருசேய்க் கொண்டு வனம்புக மாய்ந்தா னங்கண். [௱௩௫]

மிக்கெழி லுடல முற்றும் வெயர்வொடு குளிர்தல் கண்டாள்
சக்குபஞ் சடையக் கண்டா டளர்ந்துயிர்ப் புடையக் கண்டா
ணக்குபல் கரியக் கண்டா ணுசிகை சரியக கண்டா
டுக்கமிக் கனவென் செய்வாள் சோபமுற் றழு து நைவாள். (௱௩௬)

## வேறு.

என்னருமை மகவேயோ விளமடங்க லேறேயோ விரும்பூ வாரூ, மன்னாசக் குரியமழ மன்னேயோ பொன்னேயோ மணியின் மன்னு, மொன்னலர்செய் பகையினைவு முறவினர்செய் நகையினைவு மொழித்தென் கண்ணே, முன்னவனின் னருளின்வந்து முளைத்தெழுந்த முளையேயோ முடிந்தா யேயோ. (௩௩௭)

ஆவாவென் கண்மணியே மாற்றாந்தாய் கூற்றமென வறையு மாற்றஞ், சாவாவென் பதுதேறச் சான்றாே யான்றாழ்வு சார்ந்தே னென்று, மோவாத மும்மைநல னும்பெறநின் றாதாவை யுன்னு மென்னை, மாவாழுங் கான்விடுத்து வானடுத்த தென்னையிது மாண்பே மைந்தா. [௩௩௮]

## வேறு.

என்னவிவ் வண்ணங் கீர்த்தி யிரங்கிடு மேல்வை யாங்கே
துன்னுபல் விலங்கும் புள்ளுந் துருமமுஞ் சொரிந்த கண்ணீ
ரன்னையே யனைய நாத னருளினவ் வனத்தின் கண்ணே
மன்னுமெய்த் தவக்கி ருச்ச மதமுனி மனத் துணர்ந்து. [௩௩௯]

ஒல்லைவந் தெதிர மாதன் றுவாமுக னருளிச் செய்த
தொல்லைமா தவனென் றுன்னிச் சுதனைமண் கிடத்தி யன்பின்
மல்லன்மா தவற்ப ணிந்து வாவுளா திரந்து நிற்ப
வல்லறிர்த் தருள வல்ல முனிவா னஞ்ச லென்று. [௩௪௰]

பின்னரோர்ந் துரைப்பான் கீர்த்தி பிறங்கவாழ் கீர்த்தி மின்னே
வன்னிமென் றளிர்கொண் டெம்மான் மனாமல ரடிவ ணங்கி
முன்னொரு தினத்துப் பூசை முடித்தனை யதினற் பேறு
தன்னைநின் மைந்த னங்கைத் தலத்தினி தளித்தி யென்றான். [௩௪௧]

அருமைநற் பொருளோ வீதென் றதிசய முடைய ளாகி
யொருமக னங்கை நல்க வுறங்கினேன் விழித்தான் போலும்
பெருமக னெழுந்தான் கீர்த்தி பிறங்குசீர் முனிவற் றாழா
மருவுமிழ் சமியின் மென்மை வழங்கென வழங்கு மேலோன். [௩௪௨)

## வேறு.

உண்ணைக் குருகிப் பணிவோர்க்கே யுறுநோ யொழித்தின் னருள்பொழியும்
வண்ணக் களிற்று முகப்பெருமான் மலர்த்தாட் கன்பு செயுமாதே

கண்ணுக் கினிய சமிநாம மொருகாற் கழறின் வாக்கதனை
லெண்ணுக் கரிய பவங்கடோறு மிழைத்த பவந்தீப் பஞ்சேயாம். (௱௪௩)

நினைக்கிற் கழிந்த பவந்தோறு நிகழ்த்திச் செறிந்த பவத்தோடு
மனத்தி னிகத்துப் புரிந்ததுவு மடியும் வலஞ்சூழ்ந் திடனுடலங்
குனித்து வணங்க லதற்கியற்றிற் குரம்பை யதனாற் புரிதீமை
யனைத்தும் பரிதி யெதிரினிலா தழியு மிருள்போ லழிந்திடுமால். [௱௪௪]

தவத்தான் மகத்தா னினிதளிக்குந் தான மதனா னனிவிரத
மெவற்றா னடையும் பெறும்பேறு மிணையில் சமியின் றளிர்காங்கொண்
டுவப்பா னியற்று மருச்சனைக்கங் கொவ்வா துலக வளங்களொடு
தெவிட்டாக் கனியாம் பாகதியுஞ் சேர்க்கு மெனவின் னதுங்விலும்.[௱௪௫]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பவநனி யகற்று மரியமா தவருட் பாழியா ராளியே றனைய, சவுனக மு னிவ னிடும்பணி புரிமந் தாரனும் பெயரினன் மறையோ, ரவுரகன் புதல்வி சமியெனும் பெயரா டனைமணந் தரியசாந் தியுஞ்செய், துவமையின் மனையு ந் தானுந்தற் பயந்தா ரிற்புக வுனிநெறிச் செல்கால். [௱௪௬]

வினைப்பய னிரண்டுந் தினைத்திடுங் கால மேவலி னவமொதி ருற்ற, த னிக்களிற் றனை முகன்றிரு வுருவந் தாங்கிய புருசுண்டி முனிவன்,முனித்து திக் கையும கன்பெரு வயிறும் பார்ததுமுன் னகைத்தன ரதனா, லனைத்து ல குயிர்க்கும் பயப்படா மரங்க ளாகுமி னெனத்தவன் சபித்தான். (௱௪௭)

தவமுனி சபித்த வாறிரு வருந்தந் தம்பெயர் கொளுமர வுருவா, யவ னியி னெடுகா னின்றன ரதனை யறிந்தன சவுனக முனிவன், கவல்வுகொ ண்‡டொருத்தன் முகனடி பன்னாட் கருத்தினு ளிருத்திநோற் றிடலும், ப வனவன் முன்னா வதனகன் கிலகப் பானிற வரியிவர்ந் தெதிர்ந்தான். [ ]

அரிறபு தவன்கண் டடிபணிந் தெனையா னையமந் தாரனு மவற்குப், புரிவுசேய் மனையாஞ் சமியுமாங் கேய்ந்த புனைசெறி மாவுரு வகன்று, நரவு ருப் பெறுமா றருடியென் றிரப்ப நாதனா் நமதுவெஞ் சாப, மொருபொழு தொழியு மொழிதரா வடியா ருருத்திடு சபிப்பருந் தவனே. [௱௪௯]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னண மாயிற் றேனு மெமக்குநீ யன்பு செய்தா
யன்னத னுலே யன்னோ ரமைந்தவா மாமே யாகத்

‡ஒருத்தல்—யானை.

துன்னுபன் மேன்மை யெல்லாந் துலங்கயா மவற்றி னீழன்
மன்னுது மெம்மோ டாங்கே யவற்றையும் வணங்க யாரும். [௱௫௰]

பாவுபல் பொருளு மங்கைப் படும்வகை விழைகின் றாருந்
தீவினை வலத்து வந்து செறியும்விக் கினங்க ளெல்லாம்
போவதற் குழைகின் றாரும் பொலிவுறு மவற்றி னீழனை
மேவுநம் பதும பாத விரைமலர் பணிதல் செய்க, [௱௫௧]

பலதிர வியங்க ளின்றிப் பத்திசற் றேனு மின்றி
நலனொடு குலமு மின்றி நண்ணினுஞ் சமிமந் தார
விலைமல ரானர்ச் சிப்போ ரெண்ணிய வெண்ணி யாங்கே
நிலைபெற வவர்க்க ளிப்பா நிலவா மிதுவே தொன்று. [௱௫௨]

அத்தகு நிழல்வா யெம்மா னருளின்வீற் றிருந் தானாக
மெய்த்தவ முனிவ னுமச் சவுனகன் முதல வேலோ
ருத்தமச் சமிமந் தாரத் துறுமுறி மலர்கைக் கொண்டு
கத்தனைப் பூசை செய்தா வன்னிமங் கையைப்பெற் றாளும். [௱௫௩]

ஆங்கமர் கணேசற் போற்றி யரியசா லோகம் பெற்று
ளோங்கறு கில்லாத் தோட முயர்மந்தா ரப்பூ நீக்கும்
பாங்கினிவ் விரண்டு மில்லாப் படுகுறை வன்னி போக்குந்
தேங்குநீர்ச் சடையெம் மானுந் திருமுடி மிலைந்தான் வன்னி. [௱௫௪]

என்றுமா தவத்தோன் பின்னு மிரணிய கருப்பன் மேனா
ணன்றருள் சுமுகன் பொற்று ணயந்திடா தியற்று தற்காங்
கொன்றிய மகத்தின் வாணி யுருத்திடு வெஞ்சா பத்தா
லன்றரி யாதி †தேவர் நீருரு வான வாறும். [௱௫௫]

அன்னநீ ருருவ மாற்றற் கவர்மண மகளிர் வன்னிப்
பன்னமென் றளிர்கொண் டெம்மான் பதமலர் பூசித் தேத்தி

† தேவர் நீருருவானதும் அதுமாறியதும் என்பது - முன்னொருகாலத்தில் பிரமனானவன் தன் பத்தினிமார்களிருவரில் சாவித்திரியையன்றி காயத்திரியொடு தேவர்களெல்லாம் புடைசூழச் சையவரைச் சாரலையடுத்து யாகஞ்செய்வதைக் கேள்வியுற்ற அச்சாவித்திரி அவ்வேள்விக்கு உடம்பட்டிருந்த மகாவிஷ்ணுமுதலிய தேவர்களையெல்லாம் நீருருவமாகும்படி சபித்தவாறு அவர்களுக்கமைந்ததை மாற்ற இலக்குமி முதலிய தேவமாதர்கள் விநாயகமூர்த்தியை அநேகவிதமாய் பெருநாள் பூசித்துந் தங்கள் எண்ணம் நிறைவேறாமைக்காக வருந்திய போதுண்டான அசரீரிப்பிரகாரம் வன்னிப்பத்திரத்தால் விநாயகனைப் பூசித்துத் தத்தங் கணவர்களது நீர்வடிவை மாற்றியதாம்.

நன்னயம் பெற்றவாறு நவின்றுகீர்த் தியின்சே யாயுண்
மன்னுநா லெழுத்தா லாய மனுவவன் செவியி னோதி. (௱௫௬)

தலமொடு தீர்த்த மூர்த்தி தன்மையிற் சிறந்தெந் நாளு
நலனருள் காசி மேன்மை நவின்றதற் கிறையாந் திங்கண்
மிலைதரு செக்கர் வேணி விசுவேசர் திருமுன் வாழு
மலவலி தொலைத்தா டுண்டி விநாயகர் மலர்த்தா ளேத்தி. (௱௫௭)

தொகுவரங் கோடி யென்று தூய்க்கிருச் சமத மேலோ
னகறா மகனோ டன்று னவிமுத்தத் தலத்தி னெய்திப்
புகறரு மாசித் திங்கட் பொருவின்மங் கலவா ரத்துத்
தகவுறு மமர பக்கஞ் சதுர்த்தியாஞ் சுபதி னத்தில். (௱௫௮)

காலைசெய் கடன்க ளாற்றிக் கவின்றரு சமிவா யுற்று
நாலெழுத் தோதி மாலை நவிரமதி யுதய வேலை
பாவிழு தறுகு வன்னிப் பாசடை மந்தா ரத்தின்
கோலமென் மலருமற றுங் கொண்டுவா முகற்பூ சித்தான். [௱௫௯]

பூசனை முடிவி னெம்மான் பொருவிலா னனமோ னைந்தாய்க்
கேசரி யிவர்ந்து சேய்முன் கிடைத்திருஞ் செல்வ மாதி
யாசற வுறுக நிறைகென் றறைந்தொரு பாசு நல்கிப்
பேசநிற பாசபாணி யெனப்பிறங் குலகிற் பிள்ளாய். [௱௬௰]

ஆயிர வருட மண்ணாண் டைதிய முலக மென்று
நேயர்தம் முளத்து மன்னு நிருமலன் மறைந்தான் மைந்தன்
றாயொடு தன்னூர் சென்று தரணியா யிரமாண் டாண்டு
பாயொரு மருப்ப னந்தி பதவிபுக் கின்புற் றானல். [௱௬௧]

பொருகைம்மா முகத்தோன் வன்னி புனைந்துவந் ததுவு மற்றால்
வருபெரும் பயனு மீதவ் வரதனும் யாமும் வேறென்
றிருவரை மடந்தாய் சற்று மெண்ணலை யனைய வள்ளற்
குரியன வனைவையும் யாமு முவந்துமே லணிந்தா மாதோ. [௱௬௨]

எனவரா னிமய வல்லிக் கியம்பினன் வன்னி மேன்மை
தனையுளம் பிதிரோ கொள்கத் தனியறு கில்லா வேலை
நனையவிழ் சமிமந் தார நறுமுறி மலர்க ளாலே
யனகனுக் கியைந்த பூசை யாற்றுகென் றியம்பி னின்றான். [௱௬௩]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மனவிட ரொழிக்குஞ் சங்கட சதுர்த்தி மகத்துவங் கேட்டதென் பு
லத்தோன், வினவுவான் கடிலன் மலரடி தொழுதவ் விரதமுற் றுறுவகை

விளம்பு, கெனவது தொடங்கு மதியிலிம்மதியி லெல்லதேழ் மதியில்வளர்
திலையுந், தனிநிகர் சதுர்த்தி நாடவிற் கலசந் தாபித்துத் தட்டமொன் றி
ட்டு. [௱௬௪]

ஒருமடி விரிததேந் திரமமைத் தாங்கே யுவமையில் சித்திபுத்திகளோ,
டருள்பொழி கணேசர் திருவுரு விருததிப் பூசனை யாற்றுக பின்னர்க், கு
ருமினிர் பொன்செய் விநாயக ருருவை யேந்திரத் தொடுகுர வனுக்குப்,
பெருமையி னளித்தா குதிமுறை புரிந்தெட் டெறுமுறை குறுணியீய்ந்
திடுக. [௱௬௫]

பொருளுளார் சுரபி பூமுதற் றன மவரவர் தகுதியிற் புரிக, விரும
றை யாள ரிருபதோ டொருவர்க் கின்னமு தூட்டுக் ஊட்டிப், பெருகிய
சேடந் தனையன்பி னுகர்க பிழைதவிர்த் தேனைநற் பயனுந், தருமரும் விரத
முடிவிஃ தென்னச் சாற்றியே நான்முகன் பின்னும். [௱௬௬]

†தருக்கடை வளையை யொடுக்கிய பொதியத் தமிழ்முனி யாதியர்
பேறு, பெருக்கநல் கின்ன விரதநன் காற்றிப் பெற்றன ரவரவர் வேட்கை,
திருக்கிள ரரியு மமரரும் யானுஞ் செல்லல்வந் துற்றிடி லதனைக, கருக்கவி
வ் விரதம் விதிமுறை யியற்றிக் கனநலம் பெற்றன மென்றான். (௱௬௭)

பிதிரனிவ் வுரைகேட் டியானுமென் குலமும் பிழைத்தன மெனப்பெ
ரி துவந்தவ், விதிசொன படியவ் விரதமேன் மையினை விரைந்தொரு புத்த
கத் தெழுதிச், சுதனடை கனவி னவற்களித் தெமையாள் சுமுகருக் குவந்த
னோன் பியல்பா, மிதுவிதி முறையி னியற்றினன் மகவுண் டென்மக வெ
ன்றகன் றன்னல். [௱௬௮]

மகன்கன வகன்று மனைக்கிது புகன்று மணிதிக டன்னக ரடைந்து,
புகலரு மறைவல் லபனவ ராலப் புத்தகத் தடங்கிய விதியோர்ந், தகமகிழ்ந்
தனைய சதுர்த்திநோன் பியற்றி யந்தணர்க் கேழ்மதி யினிற்பொன், றகவுற
வளித்து நிகழுநாண் மனையோர் தனையனைப் பயந்தனண் மாதோ. (௱௬௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிறுவனைப் பயந்த மாதச் சேயிரு காந்தா ளின்றிப்
பிறவுறப் பமைந்து தோன்றக் கண்டினோர் திடப்பி தாவு
நிறைமகிழ் விலனுய்த் தேறி நிகழ்சாத காதி யாற்றி
விறல்கொடன் சேய்க்குக் கார்த்தி வீரிய னெனப்பே ரிட்டான். [௱௭0]

‡ தருக்கடைவளை—இருமாப்புற்றமலை-அஃதாவது விந்தகிரி.

அன்னசெய் தனக்குப் பன்னீ ‡ரகவைவந் துறலு மாங்கே
முன்னுதெத் தாத்தி ரிப்பேர் முனிவரன் கருணை கூர்ந்து
மன்னுமே காக்க ரத்தை வழங்கமா முகவன் பொற்று
ளுன்னிநோற் றவந்தான் பன்னீ ராண்டுகோ னுற்றம் மைந்தன் [௱௭௧]
கடமுமிழ் கயமு கத்தெங் கடவுளன் னவன்பாற் றோன்றித்
திடமுறு காலி ரண்டுஞ் செங்கையா யிரமு நல்க
முடமெனு நலைதீர் கார்த்தி வீரியன் முதிரன் பெங்கைக்
கடருமக் கான கத்தோ ராலயம் பிறங்க வாற்றி. [௱௭௨]

வேறு.

தவளமதி நிலவுமிழுஞ் செக்கர்வார் சடையண்ண றன்முன் காட்சி
பவளநிற வடிவினல்கு பான்மையினுற் கடல்படுசெம் பவளத் தாலே
சகளவடி வாமூர்த்தஞ் சமைத்தாங்குப் பதிட்டைசெய்து சார்பா வத்தைக்
கவளமிடக் களித்துண்ணுங் கருணைவா ரியைத்தொழுதான் கவலைதீர்வான்.

ஆதலினுல் வெங்கலிதீர்த் தாள்சூர சேனனெனு மரச ரேற
யேதமில்சங் கடசதுர்த்தி யொருநாட்செய் நோன்பதனை யென்கை நல்கிற்
றீதறுசெம் மணிமான மெழுந்துயர்வா னுலகத்துச் சேரு மென்றான்
*மாதவர்தோளிதம்பரிப்பச் சதமகஞ்செய் தும்பனையாண் மகிபன்மன்னோ.

வேறு.

ஆவது பொழுதோ ரில்லி னன்றுறு சதுர்த்தி நோன்பெங்
தேவதே வனைப்பூ சித்து நிவேதிதித்து மிசைசே டத்தைப்
பாவுறு தெருவில் வீசப் பகரொணுப் பசியோ டங்கண்
மேவொரு புலைமா துண்டு வெம்பசி நோய்த ணிந்தாள். [௱௭௫]
பின்னர்தற் செயலா வில்லோர் மும்முறை கணப திப்பேர்
பன்னின ளவளுங் கெட்ட படியப்பேர் பகர்ந்த நீரான்
மின்னெழில் விமான மெய்த விவர்ந்துவிண் படர்வா னோக்கம்
பொன்னகர்க் கிறைமா னத்துப் பொருந்தலா லதுவு மன்னோ. [௱௭௬]
இம்மெனி வெழுத லுற்ற திருமனு முறைப யின்ற
செம்மைமாந் திரிக னேக்காற் சிற்றறி வலகைப் பற்றின்
மம்மருற் றவன்பி ணிப்பற் றெழவினில் வாரோர் மானங்
கம்மடுத் தலுமிம் மானம் போதலுங் கண்ட வேந்தன். (௱௭௭)

‡ அகவை—வயது.

*மாதவர்தோளிதம் பரிப்பச்சதமகஞ்செய்தும் பனையாண்மகிபன்—என்பது பூவலகத்தில் நூறு அசுவமேதயாகஞ் செய்தமகத்துவத்தினுல் இருடிகளில் உயர்ந்தோராகிய, அகத்தியன், ஆங்கீரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்ககண்டன், வசிட்டன் என்னும் சத்தரிஷிகள் சிவிகை தாங்கப்பெற்றும், தேவர்களையாளப்பெற்றும், அரசனுன இந்திரன்.

பூரிமா மதிசேய் வாரத் துற்றமாண் சதுர்த்தி தன்னி
லாசிலவ் விரதங் கைக்கொண் டடுத்தெய்து சதுர்த்தி தோறும்
பேசுரோன் பாற்றி வாழ்நாட் பிறைமருப் பிறையு வந்தோர்
தேசுறு மானந் தேவ கணத்தொடுஞ் செறித்தாங் குய்த்தான். [௱எஅ]

வணங்கலர்க் கரியே றன்ன விறைகண்டு மகிழ்தாங் குற்ற
கணங்களை வணங்க வன்னோர் கற்செய்தோண் மன்ன வெம்மோ
டணங்கு சேர் விமான மூர்ந்தே கெம்பிரா னருள்செய் தானென்
றிணங்கின ரழைப்ப வேந்த னிவர்ந்துட னியம்பு கின்றான். [௱எகூ]

என்னைநீத் திறையும் வாழா விங்கக ரினரு மானங்
துன்னுமா றருண்மி னென்னத் தொகுகணத் தவரு நேர்ந்தா
ரன்னவர் யாரு மானத் திவர்தலு மஃதெ ழாது
மன்னவிற் கணத்தோ ராய்ந்தோர் வணிகன்வெந் தொழுநோ யாளன். [ ]

இன்னபொன் மானத் தூடே யெய்தலா லெழாதாற் றுன்மை
பன்னுது மிவன்பு தப்பேர்ப் பனவஞ்சா வித்தி ரிப்பேர்
நன்மனை யோடும் வாழ்நாட் பாந்தைதோ ணையந்நோர் வின்றித்
தன்னையின் றவளை யோர்நாட் டடிந்திட மனைபொ ருளாய். (௱அக)

மன்புரிந் தனைநீ யந்தோ விருமுது குரவர் தம்மைத்
துன்புறக் கொல்வா ரிந்தத் தொல்லுல கத்து முண்டோ
வன்பின்மே வாது பொன்னி னணையுயா தார்வந் தாலே
பின்புறு பழிபா வத்தைப் பேணிடாப் பேதை நீராய். (௱அஉ)

விலைமகள் பற்று முற்றும் விளையுமுன் வேத மாதி
கலைபயி லறிவு மில்லுட் கனதன மனைத்துந் தோற்றாய்
தலைமைமல் கைய னோடு தாயையு மிழந்தாய் சீரார்
நிலமனை யின்றோ நாளை யேல்காலோ நம்மி னீங்கும். [௱அங]

பின்னர்நன் றோடோ காடோ பெறுமிடம் வரைவின் மாதர்
நன்னிதி யற்றா லின்ப நல்கிடா ரேவல் கொள்வா
ரென்னையொத் தழகுங் கற்பு மிளமையு மேக மாக
வுன்னுமுள் ளன்பு முள்ளார் யாவருண் டுணர்தி நன்றாய். [௱அச]

ஆதலி லன்ப நின்ற றுவலி னடப்பேன் கண்டாய்
கோதுறு பழிபா வங்க ளென்னுடன் கூடி னில்லை
[illegible]துகன் மார்க்க மென்றாள் புதனென்பா னெனக்குப் புத்தி
போதனின் றாமே யென்ன வுடன்றவ டனையுங் கொன்று. (௱அரு)

மன்னிலை யறியிற் றன்னை மாய்க்குமென் றன்றி ராவே
துன்னினன் றவத்தோர் வைகுந் தூய்வனத் தாங்கோர் மேலோன்
பன்னிலைத் தொட்டன் னுள்சா பத்தினாற் றொழுநோ யுற்றே
யுன்னரும் பாவி யாவி யொழிக்தரு ளாகுற் றுங்கே. [௱௮௬]

இன்னவன் படுபா டென்னென் றியம்புகே ளாகி யாவு
மன்னிமுன் பாவ சேடத் தானுமக் கீற்பின் மாது
பன்னிய சாப சேடத் தானும்பின் பாத னுய்த்தோன்
றின்னசன் மத்து மங்நோ யிரிதரா துற்ப வித்தான். [௱௮௭]

அடுபழி யஞ்சா தாற்ற வறன்கடை நின்றான் றன்னைத்
தொடுபழி யாவுந் தீர்க்குஞ் சுமுகர்தாட் போற்றி டாரை
விடுவதொத் திறக்கி மண்ணின் விடின்மணி விமானம் வேங்தே
முடுகிமேற் செலுமோர் கோட்டு முதல்வனு ருலக மென்றார். [௱௮௮]

மன்னவ னனைத்துங் கேட்டு வாய்மையென் றுளத்துத் தெள்ளி
யென்னையாட் கொளவ டுத்தீ ரித்தொழு நோயா ளற்குத்
துன்னிய பாவ மெல்லாந் தொலைந்திடற் குரிய பெற்றி
தன்னைநீர் சூழ்மி னென்றக் கணத்தவர் பதந்தாழ்ந் தானால். [௱௮௯]

இணைமலர்ப் பாத மேத்து மிலைறயவற் கிரங்கி யன்ன
வணிகனைச் சிவக ணத்தோர் வளாருள் விழியி னோக்கிக்
கணபதி யென்று முக்கா லன்னவன் காதி லோத
வணவிய தொழுநோய் நீங்கி யமலமா ரமா னுனன். [௱௯௰]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மேருவை யடைந்த *கொடியும் பொன் னிறமாய் விளங்குமென் றுரை
ப்பரன் னதுபோற், காரிரு ணாகாழ் வணிகனுங் குரிசில் கருணையிற் கதிர
குரித் தானன், சூரசே னனுமப் பதியினுள் ளவருந் தூவிமா னத்தொடு
மெழுந்தாங், காருயிர்க் கருளே ரம்பனு ருலகத் தடைந்தவ ரடிநிழல் வாழ்
க்தார். [௱௯௧]

---

* கொடி—காக்கை.

சங்கடசதுர்த்திவிரதப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (௰௫) க்குத்திருவிருத்தம் (௭௱௨௰).

# காசிபர்முதலியோருபாசனைப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சங்கட சதுர்த்தி நோன்பு தகவுறப் புரிந்தோர் நால்வாய்ச்
செங்கையைந் துடைய வள்ளல் சிவநகர் சென்று னந்தம்
பொங்கிவீற் றிருத்த லீது புகரில்கா சிபன்ப யந்த
மங்கலி லன்ப ரெல்லாம் வழுத்திய திறனுஞ் சொல்வாம். [க]

பங்கயன் பயந்த காசி பப்பெய ரோன்பன் னொன்கா
மங்கைய ரொனுந்த னில்லார் மணிநிக ழகட்டு வந்த
சங்கையி லமர ராதி சராசர வுயிர்கட் கெல்லா
மைங்கரன் றனக்கு ரித்தா மந்திர மநேகத் துள்ளே. [உ]

இன்னல மெளிதி னல்குஞ் சின்மனு வெபித்தி யம்ப
வன்னவ ரமர ராண்டோ ராயிரஞ் செபித்து வந்தார்
மன்னுமூ னுறக்க மின்றி மாமுகப் பெருமா னேகை
துன்னியங் கவர்முன் பல்வே றுருககொடு தோன்றுற் றானல். (௩)

சிலர்முன மரியி வர்ந்துஞ் சிலர்முன மயிலி வர்ந்துஞ்
சிலர்முன மாகு வூர்ந்துஞ் சிலர்முனம் பாய்மா வூர்ந்துஞ்
சிலர்முன மனந்த வெண்ணச் செஞ்சுடர்த் தேசு போன்றும்
சிலர்முன மனந்த வெண்ணத் தெண்மதித் தேசு போன்றும். [௪]

†வித்துரு மத்து மேனி விளங்கிடச் சிலர்கண் முன்னு
மைத்திர ளனைய தாம வடிவொடு சிலர்கண் முன்னுங்
கைத்தல மோரி ரண்டு கவினுறச் சிலர்கண் முன்னு
மத்தமோர் நான்கி லங்கு மழகொடு சிலர்கண் முன்னும். (௫)

துன்னுகை யாறிற் சில்லோர் முனுஞ்சிலர் முனுந்தோ ளெட்டிற்
பொன்னெறி கரங்கள் பத்திற் சிலர்முனும் புயமீ ராறு
மன்னிடச் சில்லோர் முன்னும் வாகுமூ வாறிற் சில்லோர்
முன்னுமம் பாணி யோரா யிரத்திற்சில் லோர்தம் முன்னும். (௬)

சிலர்முனம் விருத்த ரூபஞ் சிலர்முனந் தருண ரூபஞ்
சிலர்முன மழவு ரூபஞ் சிறப்பவுந் தோன்றி நிற்ப
விலகுவா னவர்முன் னுய வேவருங் காணூஉ வென்றாழ்க்
கலர்சல சம்போற் றத்த மகமுடன் முகம லர்ந்தே. [௭]

† வித்துருமம்—பவளம்.

இருநிலத் துடலு மாரூப் புணிந்தருளுந் திறைமதுதி சேர்கின்
றருவிகண் பொழிய வின்ப வாழியுட் படிந்து செங்கை
திருமுடி மிசைமு கிழ்ப்பத் திகழுளத் தன்பு பொங்கிப்
பெருகநாக் குழற மெய்யும் பித்திடத் துதிக்க லுற்றார். [அ]

கலிப்பா.

அடியார்தம் மிடர்கடவிர்த் தாள்பவனே மயின்மயிலைக்
கொடியானே யன்புவலைக் குட்படுமோர் குஞ்சரமே
நெடியோன தாவுருவ நீக்கியரு ளின்மலனே
கடியார்பொற் கொன்றைமுடிக் கணபதிநின் சரணடைந்தாம். [௯]

பாரினிடை யோரைந்தாய்ப் பயத்தினிடை யோர்நான்கா
யாரனலி லோர்மூன்று யசையனிலத் தோரிரண்டா
யேர்பெருகும் விசும்பிலொன்று யியங்கிடுவோ யெனைத்துயிர்க்குங்
காரணனாய் நின்றருளுங் கணபதிநின் சரணடைந்தாம். [௰]

ஆணவமா மலவிருளி லனாதியா வுழலுமுயிராக்
கேணுறுமம் மலநீங்க வினை மாயா மலம்பொருத்திப்
பேணுவினைப் பயனொழித்த பெற்றியாகருந் தனிவீடு
காணியதாத தந்தருளுங் கணபதிநின் சரணடைந்தாம். [௰௧]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எனவனை வருந்து திப்ப விரங்கிநுந் துதிக்கு வந்தா
னனிவரங் கொண்மி னென்ன நலகியெம் பெருமா னீங்க
வனைவருந் தாங்கண் டாங்கவ் வமலனுக் குருநி றீஇயுட்
கனிவுறப் பூசித் தின்ன திருப்பெயர் கழற லுற்றார். [௰௨]

வேறு.

இலங்குஞ் சுமுக ரெனத்தேவ ரேக தந்த ரெனமுனிவர்
பலங்கொள் கபில ரெனவீணை பயில்கந் தருவர் கிம்புருட
ரலங்கு மேனிக் கெசகன்ன ரெனச்சா ரணர்குய் யகாசித்தர்
துலங்கு மிலம்போ தரனென்னத் துகடீ ரகில மானிடரே, [௰௩]

விளங்குங் கணநா யகரென்ன வியாழம் விகட ரென விருகம்
துளங்குந் தூம கேதுவெனச் சொல்லெண் டிக்கி லுள்ளோர்கள்
வளங்க டருவிக் கினராச ரென்ன விலங்கன் மரங்கருணை
தளம்பு பால சந்த்ரரெனத் தளிர்புற் கிடங் கிருமிகளே [௰௪]

பென்னங் கணுத்தி யக்கொனப் பொருவில் கங்கை நதியாதி
துன்னும் பலவாம் பெருந்தீர்த்தந் துலங்குங் கசவா னனென்ன
மன்னு முயிரின் ளுகையனைத்தும் வழங்கி யவன்றன் பணிந்தேத்தி
மின்னுந் தமது பதிபுகுந்து வாழ்ந்தா ரின்ன வியனுமம். [௰௫]

முந்தம் புதியின் மதித்தெடுத்த முதிருஞ் சுவையா ரமுதேபோற்
சந்தம பெருகு மாயிரமா சாற்று நாமந் தனிலாய்ந்து
சிந்தை மகிழ்ந்தங் கெடுத்தனவாந் திகழா யிரமு மெடுத்தோதி
னெந்த நலனு மந்நலனே யிவ்வீ ராறுந் தருமெளிதில். [௰௬]

வேறு.

என்னமு வுலகு மிக்க வெடுத்தினி தியம்பு மெ ணி
னன்னசீர் நாம மேன்மை யாவரோ யறைய வல
தன்னோரோ விகடர் வானுந் தாணியு முப்வா ஞற
மன்னிலீ லையினை யிங்கே வழங்குதுந் தெரிந்த வா ௰எ]

காசிபர்முதலியோருபாசனைப்படல முற்று

ஆகப்படலம் (௰௬) க்குத்திருவிருத்தம ௭

உபாசனகாண்ட முற்றுப்பெற்றது



ஓம்.

விநாயகபுராண சங்கிரகம்.

இரண்டாவது

# இலீலாகாண்டம்.

## வக்கிரதுண்டன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

மழைமதம் பொழிகை மாவின் வதனனாய்ச சுமுகன் வண்மை
தழைதரு கபில னேக தந்தனல் விகடன் றக்கோர்
விழைகெச கன்னன் லம்போ தரன்விக்ன ராச னென்றொண்
குழைகொள்கா தினனாய் நின்றா னெவனவன் குளிர்தாள் போற்றி. (க)

கனிதூம கேது பால சந்திரன் கணாத்தி யக்கன்
றுனிதீருங் கெசான னன்வக் கிரதுண்டன் சூரப்ப கன்னன்
புனையோம் பன்க ணாதி பதிகந்த பூர்வன் போற்றற
கெனவீரெண் டிருப்பேர் கொண்டா னெவனவ னிணைத்தாள் போற்றி.(உ)

சாற்றரு னெறிச்செல் லாதை தாங்கரு நிரையத் துய்த்து
மேற்றனிப் போகத் துய்த்தும் வினையிரண் டையும்பொ ருத்தி
மாற்றரும் பவநோய் தீர்க்கு மருத்துவ னாகி யாரும்
போற்றிட முதற்றே வானா னெவனவன பொறறாள போற்றி. (ங)

வானவர் குழுவு நீர்சூழ் மண்ணவர் குழுவும போறறத்
தேனென வருள்வான் பெய்யுஞ் சிந்தா முகததி னற்கு
ஞானமே கிரியை யென்ன நவிலிரு சத்தி மாராம்
பூநறுங் கூந்தற் சித்தி புத்தியா திருததாள் போற்றி. (ச)

ஓமெனு லயத்து லாவு முவாமுக னுட லெண்ணின்
றாமென வுணர்ப்ப ரோனு மவற்றுளா றிரண்டெ டுத்துக்
காமவேள் புரமெ ரித்த கண்ணுதன் மூர்த்தி நீபத்
தாமவேள் கேட்ப நன்கு சாற்றலுற் றனனெவன் பாரால். (ரு)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

கற்றைவார் சடையான் றிருவவ தாரங் கழறிடின் வக்கிர துண்டன்
வெற்றிகொள் சிந்தா மணிவிநா யகன்சீர் விளங்கிய கசானனன் பலவாங்

சூற்றமுங் குணமாக் கொண்டடி யார்முன் குலவிடும் விக்கின ராசன்
பற்றுமுற் றொழித்தார்க் கருண்மயூ ரேசன் பண்புடைப் பாலசந் திரனே. ௬

கதிதரு தூம கேதுநற் கணேசன் கணபதி பெருமகோற் கடன்மா,
மதியரு டுண்டி வல்லபை கணேச னென்னவா றிரண்டுமேற் றவற்றுட்,
பதுமன்முன் மூவர் போற்றும்வக் கிரதுண் டப்பெயர் மூர்த்த†முன் பகர்ந்
தா, நிதிபொழி சிந்தா மணிவிநா யகன்சீர் நிகழ்த்துது மறிதரு மளவே.எ

வக்கிரதுண்டன் றிருவவதார முற்றுப்பெற்றது.

---

## சிந்தாமணிவிநாயகன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வளைவள நிளையார் முல்லை வளங்கடல் வளநீர் சூழ்ந்த
தளைவளம் பொலிவுற் றோங்குந் தண்டமிழ் நாட்டு வேந்தன்
களையில்சீ ரபிசித் தென்போன் குணவதி யென்னுங் கற்பிற்
புளையிலா மனைவி தன்பாற் கணனென் றோர் புதல்வற் றந்தான். (க)

அத்தகு புதல்வன் பால னாகிய பருவ நீங்கி
வித்தகத் தவமி யற்றி விதுமுடிப் பெருமா னல்கு
முத்தம வரத்தால் வேந்தா யுலகம்வான் பிலமும் வென்று
சித்தமீக் கூர்ந்து தேவர் திரட்கெலா மிடர்பு ரிந்தான். (உ)

புவிபுகழ் கணனிவ் வாறு பூபதி யாகி வாழ்நாட்
கவர்படு வேட்டம் போய்மீள் கால்வழி தப்பி யோர்காட்
டிவர்பரி சனரோ டும்ப ரொட்டுமவான் பொழில்வாய் மௌவ
லவிர்குறும் பந்தர் வாவி யருகுற லகண்டாங் கெய்தி. (௩)

பலகலைச் சங்க நண்ணிப் பயின்றுண ரறிஞர் மான
நிலைபெற வளர்ந்து வாச நிறைமலர்ச் சோலை நீங்கா
வொலிபுனல் வாவி மேவி யொளிர்முல்லைப் பந்தர் தாவி
யலர்மண முழுது முண்டாங் கசைந்தசைந் துலாந்தென் காலும். (௪)

மனமொழி வாக்குக் கெட்டா மறைமுத லொருவ னுய
வனகனை யுன்னிப் பல்கா லருந்தவம் புரிந்து கற்றுச்

---

†முன்பகர்ந்தாம-என்பது உபாசனாகாண்டத்தில் மூலரூபாசனைப் படலத்திற்காண்க.

னையிரிக் தடக்கி ஞர்தஞ் சிந்தையின் றேற்றம் போலும்
புனறெளி கலுழி யுஞ்சீர் பொருந்தாத ஞெக்கு தோறும். (இ)

புளகித மெழலா லன்ன பொற்பமை நதிநீ ராடித்
தளர்வகன் றிடலு மேவ ருங்குவோர் கனிகாய் கந்த
முளகொணர்ந் தளிப்பத் துய்த்தா னிஃதவ னுறைந்து நோற்கும்
வளமலி கபில ஞேர்ந்தம் மன்னிழங் கழைத்தி யென்ன. (சு)

கலிநிலைத்துறை.

நின்ற சேடனை விடுத்திட மன்னவ னோர்ந்து
குன்ற னுன்பதம் பணிதலு மாதனங் கொடுத்து
வென்றி வேந்தனின் டெய்திஞேர் பசியொடு மீளா
ரின்று நீயுநன் கருந்தியே கெனவிறை யிசைந்தான். (எ)

பின்ன ரம்முனி *முன்னர்வா னிறைதரப் பெற்றுத்
தன்னம் மார்பணி யாக்கொள்சிந் தாமணி தனையோர்
பொன்னி ருசனம் வைத்துபா சித்திறை புசிப்ப
நன்ன ளர்விருந் தியற்றுக வெனநவின் றிரந்தான். (அ)

அன்ன மாமணி நன்றென நகரமொன் றமைத்துப்
பொன்னி னற்கலம் பல்பொரு ளுணவமைப் போர்க
ளின்ன வாக்கினான் குணவறு சுவைமற்று மியற்றி
மன்ன னுதியர் மிசைந்திட வழங்கிய தன்றே. (கூ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

மனமகிழ்ந் தயின்ற மன்னன் கபிலமா தவன்ருள் போற்றிப்
பனவருந் தவத்தி னெல்லா மனத்திறுற் படைத்துக் காத்துப்
பினரழித் திடவல் லோய்நிற் கெற்றிற்கிம் மணிபே ராழி
புனையுல வோம்பு வேற்குத் தருமருள் புரிக வென்ருன். (கo)

மாதவன் செவிக்கிம் மாற்றம் புகமிக வெகுண்டு மன்ன
கோதிலிம் மணியென் ருவி போன்றது கொடுத்த லொல்லா
தொழிந் தெதுகேட் டாலுந் தருவலென் றிடப்பின் னெய்துந்
தீதுணரா தா னன்ன மணிவலி தினிற்ப றித்தான். (கக)

---

*முன்னர்வா னிறைதரப்பெற்றுத் தன்னம்மார்பணி யாக்கொள்சிந் தாமணி என்பது-முன்னொருகாலத்திற் கபிலமுனிவரிடத்துப் போந்ததேவேந்திரனுக்குச்செய்த விருந்துக்கு அவ்விந்திரன் உவந்து அம்முனிவரற்குப் பூஷணமாக வணியப்பெற்ற சிந்தாமணி.

ஐம்புலக் குறும்பொ ழித்தே யான்றவா லறிவன் கோபித்
தெம்பொரு டனைவ லிங்கின் றபகரித் தனையித் தீங்கா
லும்பரோத் தெங்கோ வந்துன் னுயிர்தெறு மெனச்ச பித்து
வம்பவே கென்முன் னில்லே லென்மணி யொடும கன்று. (கஉ)

முனிவர னிட்ட சாப முனையென வளர வோர்பா
னனிவிருப பெவையு மன்ன நன்மணி யுதவ வோர்பான்
மனமகிழ் வுற்றான் மன்னன் ‡மணியிழந் தழல்வி யாழ
மெனவுயர் கபிலன் றானு மியமபருந் துயரி னுழா. (கஙு)

வலிந்துதன் பொருள்கைக் கொண்ட மன்னவ னெவ்வாற் றானு
நலிந்திட நினைந்தூண் பள்ளி மறுத்துநெட் டுயிர்த்து நன்மெய்
மெலிந்திடத் தவஞ்செய காலை மேதகு மாயா சத்தி
யலர்ந்தழ லுருவாயத் தோன்றி யறைந்திடுந் தவத்த ரோநே. (கச)

முத்தொழில் புரிவோ ராலு முடிவுறு வரங்கொ ளிவ்வேந்
தித்தலத் தொழிதல வேண்டின விநாயகத் தேவிங் கெய்த
வித்தகத் தவஞ்செய் யென்றவ் விதியுநன் கியம்பி யேக
வுத்தம னவவா றேசோன் போமமற றியற்ற வாங்கே. (கரு)

கலிப்பா

தேசவிர்மா மகுடமொடு திகழ்குழையு மணிவடமு
மாசகலசீர் முககண்ணு நாற்கையு மகதமும
பாசிழையாா சித்திபுத்தி பாகமுமவாயந் தரியிவர்ந்து
நேசமுறத தோன்றினனாக நிரிமவி னோமபன். (கசு)

கத்தனுருக் கண்டிடலுங் கபிலமுனி மகிழ்ந்திறைஞ்சி
யத்தவென துறுகிளையோ டடியேனு முயந்தனனு
னித்தமுநின் னடிபோற்று நெறிநீங்கா தருள்கென்னச்
சித்தமகிழ்ந் திறைமுனிவ தெருமானின் னெடுந்தவத்தால் (கஎ)

நின்மனைப்போந் தனக்கோதி நினக்கிடர்செய் கணனென்னு
மன்னனையின் வினையட்டுன் மணிமீட்பா மெனக்கேட்டு
நன்மகிழ்வுற் றிருந்தானந் நாயகனோர் கணக்கண்டு
தன்னமர்தா தையையமைச்சா தமையபிறரைத் தருவித்தான் (கஅ)

---

‡மணியிழந் தழல்வியாழமென-சிவரத்நத்தை யிழந்து வருந்தும் சர்ப்பம் போல,

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அந்திலன் னவர்வுந் தெய்த வாசன்வா ளாக வீழ்ந்து
சிந்தையா குலித்தி ருந்தா னதுபொழு தபிசித் துப்போர்த்
தந்தையுற் றதையென் னெனக் கபிலன்பாற் சார்ந்தோர் நாற்கை
மைந்தனென் முடிது ணிப்பக் கண்டேன் மற்றந் நீர்மை. (கசு)

துவலுமா றுமைய ழைத்தே னீண்டிடன் றால்வல் லோராய்த்
தவராவர்க் கேற்ற வண்ண மறைந்தன ரோர மைச்சன்
றவவலிக் கபிலற் கோற றகவெனக் கணன்கேட் டன்ன
பவநெறி யமர்க்கெ ழமபும் பான்மையிற் றீவி ரிந்தான். (௨௦)

அறநெறி தவறாத் தாதை யன்னதுர்ச் செயலை யோரா
விறன்மிகு தனையற் பார்த்து விழிசிவந் தியம்பு மைந்த
நிறைமணி மௌலி விண்ணோர் நீளபகை கொண்ட தன்றி
யுறுவர்தம பகையுங் கொண்டா லுறுங்கன வபல மாமோ. (௨க)

ஆதலி னடல்மீக் கொள்ளு மளவறு சேனை யோடு
போதல்செய் திடினும் வென்றி பொருந்திடாய் விளைவி னந்த
மாதவன் பானீ வவ்வு மணியினை கொடுபோய் முன்னர்
மேதக வளித்துப் பின்னர் வேண்டுகொள் ளவனை யென்றான் (௨௨)

இன்னணந் தாதை சாற்றும் வாய்மையை யிறையுந் தேறு
தொரன்னலர்க் காதி வையஞ் சுகமுற வாழ்வித தோம்பு
மன்னனீ யேயா யிங்க ணிருப்பினு மானம் பொன்றிவ்
வுன்னுரை கொம்ளமென வப்போர்க குற்றன னிளைய வேலை. (௨௩)

விருபபொடு கபில மேலோன் விநாயகக் கடவு ளாரக்கு
திருபபளி யெழுச்சிப் பூசை செய்திருத் தலுந்தோர் சிட்டர்
தரிப்புறு தூவோ யன்றுன் றனிமணி பறிததுப் போன
பொருப்புறழ் திண்டோண் மன்னன் போர்க்குற்று னின்பா லென்றார் ௨௪

முனிவான் கேட்டொப் பில்லா முதல்வனு யிரானா மத்தாற்
றனிமலர் கொடுதாண் மீதர்ச் சனைசெய்து பூசை யாற்றி
யனகவென் மணிக வர்ந்து மடவரு கொடியோன் கைநின்
றெனைவிடுத் தருளென் றேத்து மெல்லைவேந் தனுமங் கேய்ந்தான். (௨௫)

கணமெனு மெதிர்வா னங்கைத் தடவுளுட் கனலு மாறோர்ந்
திணைமல ரடிதாழ்ந் தன்று னிடமமர் சித்தி மாதங்

கணைருள் பெற்றுப் பல்வே றடுபடை படைத்தம் மன்னன்
றணிவில்சே னையின்வி டுத்தான் சார்தனு மனையான் பாலோர். (௨௬)

பலபல சேனை யோடும் படர்ந்து சபதங் கூறி
நலிவுற தமர்செய் யேல்வை நாயகி படைமெ லிந்த
சிலைநுந றன்பா னின்றோர் திறலன்றேன் றிடுவா னுன்ன
வலியவோர் வீர ரைம மிலக்கனென் பவன்வந் தானால். (௨௭)

சித்திபால் வருவீ ரன்சென் றமைச்சரா தியர்தேர் மாக்கண்
மொய்த்திறத் தடர்த்தம் மன்சே யிருவரை மொய்ம்பிற் பற்றி
நித்தன்முன் னுய்த்தெந் தாயிந் நிருபமைந் தரைக்காத் தாள்வா
யத்தகு கணைனும் வேந்தென் றோடெதிர்ந் தமரி யற்றான். (௨௮)

ஆகையா லவனை நீயட் டடிநிழ லளித்தி வர்க்கவ்
வோகையா ரரச ளிப்பா யெனவிரந் தனனோர் கோட்டெம்
மேகனு மிசைய வேந்த னிகற்கெதிர்ந் தெம்மான் மின்னார்
பாகனுய்ச் சிய மூரும் படிவனுய்த் தோற்றல் கண்டான். (௨௯)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பண்டுசெய் தவத்தத் திருவுருக் கண்டும் †பால்வழி மறைத்தலிற் கபி லற், கண்டனை விலனுய்க் கருடனை நாகங் காதுமோ வேனிவற் கொணர்ந்தாய், துண்டமாக் குவனோர் கணைகொடிங் கென்றான் குனைக்குநாய் கடித்திடத் துணிந, லுண்டுகொல் கணனை யெனத்தவன் கூளோ டுரைத்தலும் புழுங்கிய வுளத்தான். (௩௦)

வரிசிலை வளைத்தோர் சிலீமுகம் பவந்திர் மாமுகத் திறைவனெற் றியினு, மிருநக மிரண்டு புயத்தினு மிரண்டு புதையிரு பதத்தினு மேவ, வெரிகரு கணைகள் குறிபிழை யாதங் கேகினீ ரூயின வுடலா, ரரியனை யகலா திருந்தவா றமல னனுப்பினன் றனதுகைம் மழுவே. (௩௧)

அன்னது பரிதி பற்பல வொருங்கே யெழுந்தபோ லவிரொளி பரப் பிச், துன்னல னுயிரைப் பொருக்கெனக் குடித்துத் துகளறு கங்கை [illegible]வர்க்கு, முன்னவன் காத்து மீண்டதங் கமரர் மொய்த்துநின் [illegible], மன்னரு ளுலகுக் களித்தவற் றெழுவான் வருதல் [illegible]வந் துதித்தான். (௩௨)

[illegible] சனையனை நோக்கித் தணிவிறன் புற்றாற் றினனுய் வெந்[illegible]ழற் பள்ளி யவனுடற விட்டு மீண்டுதன் னிடத்தமைந் தொளிசேர்

---

†பால்வழி-ஊழின் முறையால்.

கந்தலில் சிந்தா மணியைக்கொண் டடைச்ச ரோடேற் கபிலனுச்சிரமத் தெந்தைசந் நிதிவந் தடியின்வைத் திறைஞ்சி யெண்ணறு மறைகளாற் றுதித்து. (கக)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

கணமனைந் திலுக்கு மேலாங் கடவுணீ யென்ப தோராக்
கணமனிற் கெதிராந்து மாய்ந்தான் கருணையங் கடலே யன்னான்
‡கணமனன் மணிநேரின்ன காதலீக் கரச னிந்தங்
கணமனப் பரிவு நின்றாட் கண்ணெனக் குளவா மாறு. (கச)

வரமருள் கெனவி ரப்ப மதகரி முகத்தே §வாதி
யரசெனு மபிசித தோது முறையுவந் தவன்செய் சேய
னிருவரு மவனே டேக விடுத்தெழின் மணியை முன்னீந
தாமிழந் திறைஞ்சி யேத்துங் கபிலனுக் குரவ வேற்று. (கரு)

அன்னவ னெந்தா யின்ன மணியென்பா லபக ரித்தோதான்
றன்னைமாய்த் தித லாற்சிந் தாமணிப் பெயர் தாலத்தி
னின்னதா கவுமோர் பூண யீதுநின் றிருமே னிக்கட்
டுன்னவு மருள்செய் வாயென் றிரந்தனன் சுமுக வள்ளல். (கசு)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பணியெனக் கொளுமா றவன்பிரார்த் தித்த படிதிரு வுருவினச் சிந்தா, மணியினைத் தரித்தா னதலாற் சிந்தா மணிவிநா யகன்றவக் கபிலன், றணிவின்மா மனைவந் தவதரித் ததனாற் கபிலன்றண் மலர்த்திரு முகநல், லணிதா வரலாற் சுமுகனென் றெவரு மறைந்தன ரவற்குமுப் பெயரே. (கஎ)

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தென்றமிழ்நாட் டரசனபி சித்தென் போன்சீர் சிறந்தமணி தரித்த விநா யகனைப் போற்றித், தன்றிருமா நகரடைந்து பவுரந்தி ரர்க்குந் நா ணியனிதீ தினிதி ருந்தான் சுமுகவள்ள, லின்றகபி லனுக்கருள்செய் தா ருக்க ரந்தா னிகழ்த்துமிது நிற்கவினி யைங்கைப் பெம்மான், மன்றக ஜா னனனுகி யுலகம் போற்ற வருமூன்று மவதாரத் திறன்வ குப்பாம்.

சிந்தாமணிவிநாயகன் றிருவவதாரப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (உ) க்குத் திருவிருத்தம். (சஇ)

---

‡கணமனன் மணிநேரின்ன காதலர்-அழகினால் நிலைபெற்ற நல்லகண மணிபோன்ற புத்திரரிருவர்.

§ஆதியரசு-கணவேந்தனது பிதாவாகிய வேந்தன்.

## கஜானன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

முன்னொரு கற்பந் தன்னின் முளரியான் கொட்டா விப்பால்
வந்தனன் சிந்து ரப்பேர் மருவொரு புருடன் சென்னி
யைந்திரண் டோடு மன்று னழன்றெவர்த் தழுவி னூலும்
வெந்தவர் நீறு மாறு ‡விதியுழி வரம்பெற் றானால். (க)

பெற்றவ னவனி செல்காற் பெற்றவன் வாஞ்சோ திப்பான்
மற்றவன் மாட்டு நண்ணிக் கடல்களும் வறப்ப வானத்
துற்றபல் லுடுவுஞ் சிந்த வுருத்தட்ட காசஞ் செய்தான்
முற்றுல களிப்பா னன்ன மூடனுட் கோளை நோக்கி. (உ)

எனதுட றழுவு தற்கோ வேடவிங் குற்றாய் நன்று
னினதுயிர் குடிப்பா னெந்தை நிருமல கணேசன் றோன்றி
மனுமென வுரைத்தே மால்வா ழிடம்புக்கீ றியம்ப மால்கேட்
டுனியிதைநம் முகத்தே வன்றி யொழிப்பதியா ரொனுங்கால் வெய்யோன் ௩

ஏல்மா விடத்துப் போந்தா னிவற்கஞ்சித் திறலோய் நொய்ய
வாவிலை யொன்றிற் றங்கிக் காவல்செய் யரியான் போதன்
*காலிரு மூன்றுற் றூலுங் கரும்புளே றிடவுந் தாங்கா
வாவிதழ் மனைமேல் வைகு மெல்லியன் மறைக ளோதி. (ச)

ஆக்கல்செய் திடுவா னிவ்வா றலைபுன லனைய யாங்கண்
மேக்குய ரசல மன்ன நின்னொடு வெம்போ ராற்ற
லூக்கமெள் ளளவு மில்லை முயர்வனை வனையை நேர்ந்
னீக்கமில் புகழே யன்றி மற்றென்னை நிகழ்த்து துங்கேள். (ரு)

உலகெலா மழிக்க வல்லா னுளனவ னிருப்போ வெள்ளிச்
சிலையவ னங்கை கொண்ட திகழ்கொடு மாமோ மேருக்
குலவியே யிடப்பா லுற்ற கோமளக் கொழுந்தா ளோ
மலைதரு புதல்வி மெய்யோ வன்னியா மின்னும் யாங்கள். (சு)

இருவரோந் தருக்கைப் புல்கா விரித்துளா னற்றன் மிக்கா
னொருவரு நிகரில் லாதா னுவனுழை நீசென் றேங்கு
செருவினை விளைத்து வெற்றி பெற்றிடிற் றிசைகண் முற்றும்
பெருமைகொண் டாடு மென்னப் பிழைதழை மனச்சிந்தான். (எ)

---

‡விதியுழி—பிரமதேவனிடத்து.
*காலிரு மூன்றுற் றூலுங் கரும்புள்—ஆறுகாலுடைய தாழ்த்தேஞ்செய்யுங் கருநிற வண்டு.

அரிவிரி யுரைய னைத்து மமுதென மாந்தி வெள்ளி
வரையிறைப் போது பாய்ந்தாங் கமர்சிவை வதனங் கண்டிப்
புரையறு தேசி னாளைக் கோடுமென் றவணோர் புக்கான்
பரைபரி தபித்தி யோகத் துற்றமர் பாற்கீ தோதும். (௮)

கண்ணினா நகையி னானுங் காலினா ‡மொன்னார்க் காய்ந்த
வண்ணலே நினைத்தி யானிப் பார்க்கரு ணீயோ கத்து
நண்ணாத லெற்றோ வென்ன நாதனும் விழித்தாங் குற்ற
வெண்ணலற் பொருவான் போந்தா னிரும்படை யாதி யோடும். (௯)

இன்னவேல் வையிற்சிந் தூர னெம்பிரான் றழுவ நேர
வன்னபோ னைங்கை வள்ள லாங்கொரு மறையோன் போன்று
துன்னியோர் பாசு நாட்டித் துன்னல னிரிவா னுற்ற
மின்னுவா ளனைய கூர்ங்கண் விமலையுள் ளுவகை பொங்கி. (௧௦)

ஆங்கவ்வே தியன்போன் றானை யாரைநீ புகறி யென்னத்
தீங்குநிற் கிழைப்பான் போந்த செறுநனைத் தெறுவா னன்னா
யீங்கொரு மகவாய் நின்பால் வருவனீ யஞ்ச லென்று
நீங்கினா னதன்பின் சிந்தூ ரப்பெய ரினனி லத்தில். (௧௧)

மன்னுபல் லுயிர்க ளைந்தன் வன்கையாற் றழுவி நீற்றிப்
பொன்னக ரத்தார்க் கூறு பொருந்தவந் திடலு மன்னார்
துன்னிநான் முகத்தோற் கோத வவரொடுந் தூய வேதாப்
பண்ணுமைங் காப்புத் தேனைத் தியானித்துப் பரிவி னோடும். (௧௨)

வான்வளி யெரிநீர் வைய மதிதின கரனான் மாவென்
றூனவெண் வடிவ மாய்மண் ணாதிதத் துவங்க ளான்மாத்
தானுறப் புணர்த்தி ரண்டு வினையொப்பாஞ் சமையந் தன்றா
னானமில் லா[illegible] சூட்டு முயர்கண பதியே யோலம். (௧௩)

என்றுதோத் திரிப்ப வோர்கோட் டிறையெதிர்ந் தஞ்ச லீர்நுந்
துன்றுதீ தொழிப்பச் சேயாய்ச் சிவைவயிற் றோன்று வோமென்
றன்றுமை திருக்க ருப்பத் தெய்தினா னாக வமமை
நன்றமை பரியி லிப்பேர் வனத்துநம் பரனோ டேய்ந்தாள். (௧௪)

இன்னண முமையாள் காவேட் டிகுளையர் பாவ வாழ்நாண்
முன்னவன் யோகில் வைக முந்தையின் மயேசு ரப்பேர்

---

‡ஒன்னார்—மன்மதன், திரிபுரம், இயமன், ஆகிய இம்மூப்பகைவர்.

பின்னுமோர் தருவன் ருனு ரதமுனி பகர்சா பத்தான்
மன்னினன் வேழ மாயஃ தகலெல்லே வந்த டுப்ப.          (கச)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தணேங்க ருமைவிற் றிருக்குமண் டபத்தைச் சார்ந்தொரு காட்டளாச சாய்ப்பப், புனேயிழை யஞ்சிப் பரமனுக் குரைத்தாள் பொள்ளெனக கனன்றதைச் செருத்தே, யனேயது சிவாய நமவெனு மனுச்சொற் றிறத் தலாற் கதியளித் தருந்து, சினவத ருரித்துப் போர்த்துநல் லன்பிற் றென்றதன் சென்னிபூ சித்தான்.          (கரு)

மதகரி யுரிமெய் போர்த்ததாற் கிருந்தி வாசனென் ஞமமுற ருங்கே முதலவியோ டமர்ந்தா னிதுநிற்க வொருபான் முகமுடைச் சிந்துர ஞெரா நாள், விதியொடச் சுதன்மற் றெவரு மென்றனக்கு வெரின்கொடுத ந வரென வவைக்கண், ணிதமிலான மதமிக் குரைப்பவோர் வாக்கம் தாட தெழுந் ததுமதி யில்லாய்.          (கள)

என்னேநீ செருங்கோ டியம்பினே சிவைபா லிபமுகக் கடவுடான் கருவாய், நின்னேயாய்த் திடவுற் றனைஃ துணர்தி யெனவவ ணடுங்கி நீள் வனஞ்சென், றன்னேயா முறைகண் வளர்தல்பார்த் தகட்டின் மருக் துரு வாயடைந் தாங்கண், மன்னிய கருவின் சிரமரிந் தகன்று விந்தமால் வரையினே யடுத்து.          (கஅ)

நருமதை நதிபால் வைந்தூட னகனு னம்பிரான் சிரமுறு மிடத்துப பெருகுசெம் புனல்செல சூழ்லச சோண நதியெனப் பேசுவ ரன்ன, சிரமொடு புவனி குழிந்தை க ணைச குணடமென றியம்புவா சிறைசார் வரையதிற் சரிந்தவ் வுலகெலாம வணங்க விநாயக ருருவின்மன் னியதே.

இறைதிரு வுருவம் பெற்றவச் சுயம்பை யாவர்பூ சனேபுரிந் திடினு, மறமுத னென்கு பொருளேயு மடைவ ரந்நதி படிந்தவர் விறைழந்த, பெ றுவர்சிந் தூரன்செய் யரியவிச சூழ்சசி யவனுமெம் பிரானுமோர் குவர் பின், னிறைகரு வுயிர்த்தா ளுமைநலே தவிர்செய் கயிலேவெற் பேகியங் கிலேயே.          (உ0)

ஆன்மகோ டிகட்கு மருள்விநா யகர்வே றம்பிகை கண்களித் திட வோர், பானெனுங் கரம்பூண் படைதரிந் திலங்கச் சித்திபுத் தியர்கள்பா லுறப்பஞ், சானன மிவர்ந்து தோன்றியா னன்று யனேத்துயிர கட்குநின் றனக்குந், தினமோர் தருசிந் தூரனேந் தெறநின திருவயிற் றுதித்தன னென்று.          (உக)

விண்டட னேயவ் வுருக்கரந் தேகவிமலையுண் மகிழ்ந்தன ளானிறு, முண்டமற் றுதித்த கான்முளை தனைக்கண் டினைந்தனன் முதல்வனு முவப் புட், கொண்டுமொழ் கினன்போன் றிருப்பமா லமரர் குழாங்கட்கு நந்தியஃ துணர்த்த, வண்டரா தியர்வந் திறைஞ்சியம் மகப்பார்த் தலைகடல் வீழ்த் துமா றறைந்தார். (௨௨)

அன்னவர் தமைவே தாமிகக் கனன்றச் சுறுத்தியவ் வருண்மகப் பார்த் தொம், முன்னவ சென்னி யின்றியீண் டுதித்த தெவனென முகுந்தன் மெய்க் காதி, சென்னியஃ தற்றோர் சேய்வளர்ந் திடலெவ் வாறுபே தாயென்றான் சிறுவ, னென்னவோர்ந் தனைகொன் முத்தொழிற் கிறைக் கியா திருந்தெனின் றாயினென் மாலே. (௨௩)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

குறைமதி யுடை யவானோர் கூறிய தொப்ப நீயும்
பொறியிலார் போலி தேதோ னன்றென்றான் போதன் பின்ன
ரறிவினு ளறிவா யெல்லா மறிபவன் செவிவா யாதி
செறிதலை யிலாதி ருந்துஞ் செப்புவா னிஃது யற்கு. (௨௪)

†முந்தியாஞ் சிருட்டி தந்த முறைமையி னெவ்வா றெம்மைப்
புந்தியோ டன்பு பொங்கக் கண்டுநீ போற்றல் செய்தா
யந்தவா றுமையா ளும்வந் தவதரித் திடலா வின்றுஞ்
சிந்தையா குலம்விட் டோடத் தெரிசிக்கப் பெற்றாய் போதா. (௨௫)

வெய்யசிந் தூர னாவி வீட்டிநல் லோரைக் காக்க
வையைபாற் றோன்றுற் றியார்க்கு மன்பனாய்ப் போற்ற னன்கென்
றுய்வகை தெரிப்ப வீச னுவந்துபோற் றிபமு கத்துச்
செய்யதா னனின்வீழ் சென்னி நம்முருச் சேர்த்தற் கென்றே. (௨௬)

சிரமிலா துதித்ததோ மென்று சிரந்தவிர் விதமுஞ் செப்பி
யருளமுன் னிறைவன் பூசை யாற்றுசென் னியுமாங் கெய்தித்
திருவுரு வொன்ற லான்மா வதனமுந் திகழ்முக் கண்ணும்
பரிவின்வாழ் சித்தி புத்தி பாகமுங் கொண்டு தோன்ற. (௨௭)

---

†முந்தியாஞ் சிருட்டி தந்த முறைமை-என்பது வக்கிரதுண்டவிநாயகராய், பிரமா, விஷ்ணு, ருத்திரர், என்னு மூவரையும்படைத்துப் பிரமாவுக்குச் சிருஷ்டிவிதியை, சித்தி, புத்தி, என்னுந் தமது சத்திகளால், தெரிவித்தகாலவிலைமையாம்.

அன்னமூர்த் தங்கண் டும்ப ராதிய ருவகை பொங்கி
முன்னரோந் தரித்த வேத மனுக்களான் முறையி னேத்தி
யின்னநா டொட்டெங் கோவே கயானன னெனும்பேர் நிற்கு
மன்னிவிக் கினங்கள் யார்க்கும் வாராவண மருளுந் தேவாய். (உஅ)

இம்பரிற் சிறக்க வென்ன விரந்தன ருமையா ளோடு
நம்பனு முத்தி சித்தி நல்குவான் விழைந்த தீவான்
றம்பதந் தொழுவார்க் கின்ன றவிர்த்துமே னையர்க்குந் தந்து
மும்பர்சேர் விக்கி னேச னெனவுரைத் துபாசித் தாரால். (உகூ)

கண்ணுதல் பூசை யாற்றிக் களித்தநா ளிரவி சிங்க
நண்ணிய மதிமுன் பக்கச் சதுர்த்தியா மற்று லந்நாள்
விண்ணவர் மண்ணோ ரெல்லாம் விநாயக சதுர்த்தி யென்று
திண்ணமா வருடந் தோறும் பூசிக்கச் சிறந்த தாமால். (௩0)

திருத்தமா மிந்நாட் பூசை செய்பவர் பேறெண் ணின்றாற்
பொருத்தமின் மனச்சிந் தூரன் புவனபாற் சுமுக வள்ள
லொருத்தன்மா முகங்கொண் டிவ்வா றுதித்தமர்ந் திடறெ ரிந்து
‡கருத்தறை போய்ப்பின் றேறிக் கயிலையம் பொருப்பி னேறி. (௩க)

தரியல னெனக்கென் றீங்கே தங்கிய சிறுக ணிள்ளைக்
கரிமுகன் றலைது மித்துக் கடிதுகொண் டேக யானே
யரியென வந்தே னென்னத் தன்புக ழுரைத்து மோதிப்
பொரவழைத் திடலு மெந்தை பொள்ளென வவன்முன் றோன்றி. (௩உ)

அச்சுறு †தறைகூய் நின்றோ யரிமுதற் றேவர் போலுன்
§பிச்சளத் தெமையு மெண்ணிப் பேசினை யாமே நின்னை
முச்சகம் பழிச்ச வின்னே முடிக்குதுங் காண்டி யென்ன
விச்சுவ ரூபங் காட்டி வீட்டிமுத் தியுமீய்ந் தானால். (௩௩)

மலர்மழை பொழிந்தார் வானோர் விகடன்றோல் வடிவின் மன்னி
நலமணி சூல மீச னல்கவேற் றலரோன் றண்பூச்
சலபதி பாச மற்றோர் தத்தங்கைப் பொருடந் தேத்தக்
குலிசனன் னிருத்த கீதம் புரியக்கொண் டிருக்க ரந்தான். (௩௪)

---

‡கருத்தறைபோதல்—விவேகங்கெடல்.
†அறைகூவல்—போர்க்கழைத்தல்.
§பிச்சளம்—மயக்கம்பொருந்திய மனம்.

இந்தமான் மியம்பு கன்றோ ரொழின்மக வின்பம் மெற்றி
புந்தியின் விழைந்த யாவும் பொருந்துவ ரீது நிற்க
வெந்தைவிக் கினரா சப்பே ரியைநான்கா மவதா ரத்தி
னுந்துமான் மியத்தை யன்று னருள்கொடிங் குரைக்க லுற்றும். (௩௫)

கஜானனன் றிருவவதாரப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (௩) க்குத் திருவிருத்தம். (அ௰)

---

## விக்கினராசன் றிருவவதாரப்படலம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பனிவரை விந்த மென்னப் பகரிரு வரைக்கு நாப்ப
ணணிமலர்ப் பொழில்சூ ழேம வதியென்றோர் நகராள் வேந்தன்
றணியபி நந்த னன்றன் றகவினோர் மகமி யற்ற
வணியணி மகத்தி னோடு மழிப்பவா னவர்கோ னுன்னு. (௧)

உன்னரும் விக்கி னங்க ளுளுற்றிடுங் கால ரூபி
தன்னையங் கேவ வன்னான் சார்ந்தபி நந்த னப்பேர்
மன்னொடு மகம ழித்து மாயவே டங்கொண் டாங்காங்
கின்னல்செய் தேகி வேள்வி யியற்றுவோ ரையுங்கெ டுத்தான். (௨)

பாருளார் கால ரூபி செயல்கண்டு பதைப தைப்பச்
சீருளார் பலரு மாற்று மகமெலாஞ் சிதைந்த வாற்று
ளருளா ராய வேத முனிவரோ ரிடத்து நண்ணி
யேருளார் விகடன் பொற்று ளிணைதுணை யென்னத் தேறி. (௩)

ஆதியாய் நடுவா யீறு யவையொரு மூன்று நீந்த
சோதியாய் நானு வாகித் தோன்றுயிர்க் குயிரா யார்க்கும்
பேதியா யன்ப ருள்ளம் பெருந்திருக் கோயி லாக்கொண்
ணீதியாய் புவிதாங் கொண்ணு விக்கின நீத்தல் வேண்டும். (௪)

பாவலர் மாலை நின்பொற் பதத்தினில் வேய்ந்து வாழ்த்து
நாவலர் தமக்கு வேண்டு நலநிலத் தருளிச் செம்பொற்
பூவடி நிழலு நல்கும் புராதன தேவர்க் கெல்லாந்
தேவவை யகங்கொ ளாத விக்கினந் தீர்த்தல் வேண்டும். (௫)

எனத்துதித் துருக வாங்கே யேரம்பப் பெருமான் றேன்றி
யனைத்திட ரொழிமின் றாய்தி னமர்தரு *வரேணி யன்றன்

---

*வரேணியன்—ஓரரசன்.

மனைக்கண்வந் தவத ரித்து மாற்றுது நுமது புன்கண்
ஞுனிர்தயா தவத்தீ ரென்ன ரோவகன் றிருந்தா ரிப்பால். (௬)

கலிநிலைத்துறை.

முடிவி லாதவின் பருளிய வேரம்ப மூர்த்தி
நெடிய மாதவ நிரப்பிய வரேணியன் மனைவி
படியி லோவியப் பாவைபுட் பகையெனும் பெயராண்
மடியி லார்கருப் புகவவண் மகவுயிர்த் திடலும். (௭)

உயிர்த்த சேயுரு மறைத்திப முகத்தொடா யுதநான்
கயிர்த்த கைகளுஞ் சிறியதா ளொடுபெரு வயிறு
மியற்ப டத்திகழ் வடிவுமுற் றிருத்தல்கண் டிருந்தோர்
பயிர்ப்பி னஞ்சியோ டினரன்னை கவன்றுளம் பதைத்தாள். (௮)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னதம் மடந்தை கேள்வ னறிந்¶துவ ளகத்துச் சென்று
தன்னிக ரில்லா முன்னோன் றயங்கெழி லுருவு கண்டு
மின்னன்மேல் விளக்கு மிச்சே யெனவுள நெண்ணி வீரந்
துன்னுபல் வீரர்க் கூய்க்கைக் கொடுத்திது சொல்ல லுற்றான். (௯)

திடவுட லுடையீ ரின்ன சேயையிவ் விரைவே சோலை
யடர்படு வரையிட் டொல்லை மீளுமி னென்ன வன்னோர்
கடகரி முகநந்த வாஞ்சேய் தனைக்கைக்கொண் டேகிப் பாசத்
தொடர்பொழி பராசு வப்போர்த தொன்முனி சாலைப பாங்கர். (௧௦)

நன்றுறு மடுத்தீ ரத்து நறுந்தளிர் மிசைக் கிடத்திச்
சென்றன ரிறைவ னைக்கை திண்டமுன் னவாசெய் நோன்பு
மன்றநன் மனைவி பாற்றன் மனையவ நரிந்துந் திங்கா
மென்றிட வரோணி யன்முன் பிழைத்தபா வமுமென் னென்கேன். (௧௧)

தளிரணை மிசைக்கி டந்த தம்பிரான் றமது மெய்யி
னொளிசிறி திலகச் செய்ய வுதயவர் கோடி யொருங்கு
வெளியில்வந் ததுபோ லெங்கும் வெயில்விரிந் திருளி ரிந்த
நளினம்வாய் மலர்ந்த வாம்ப னைகைமுகங் குவிந்த வன்றே. (௧௨)

அற்புத மடைந்தா ரும்ப ராரக விடத்தார் தங்கள்
பொற்பமை யிரதி போன்ற பூவையர் செய்கை நீத்தங்

---

¶உவளகம்—அரசன்றேவியிருப்பிடம்.

கெழ்பொழு தகன்ற தென்று வெழுந்தனர் பொழில்வாழ் புட்கள்
பற்பல விருக மெல்லாம் படர்ந்தன விரைக டேர்வான். (௧௩)

பராசுவ முனியுஞ் சந்தி பண்ணுதற் கமையம் வந்த
திராவகன் றதுநன் கென்ன வெழுந்துநண் மடுப்பாங் குற்றங்
காரவணி சடில னென்னை யாள்விரா யகத்தே வைங்கைப்
புராதனன் றவிரின் மீது பொருந்தல்கண் ணுரக் கண்டான். (௧௪)

ஆடின னடுத்து மைந்த னருளுரு நோக்கி நோக்கிப்
பாடின னின்ப வெள்ளம் படிந்தனன் மறைக ளுன்குந்
தேடியுங் காணு னாத சிற்பா னுன்முன் செய்த
நீடிய தவத்திங் கேய்ந்தா னெனவெடுத் தேகி னேரே. (௧௫)

பொருவிறன் மனைப்பு குந்து புலர்பொழு தாகக் கற்பிற்
றிருமனை யவள்கை யீய்ந்தியாஞ் செய்தவப் பேற்று லிச்சேய்
வருநல்கா ணெனக்க ளிப்பின் வழங்கிமா முகத்தே வென்றோர்ந்
துருகலுந் தனஞ்சு ரப்ப வூட்டின ளிவனோன் பென்னே. (௧௬)

வேறு.

இவ்விதமாய்ப் பராசுவனு முனிமனைவி வற்சலைபா லெழிற்க ணேசன்,
செவ்விதமர்ந் திடமுனு ளிமவரைப்பாற் சவுபரிப்பேர் முனிவன் சீர்
சான், மௌவனகை மனோமயையாந் துணையொடுவாழ் பவன்புனறேய்
வான்செல் லோர்கா, லவ்விசும்பார் கிரவுஞ்ச னெனுமொருகந் தருவனவ
ணழகாற் போந்து. (௧௭)

காம்வலிப்ப வவள்வெருளுங் காலையினீர் குடைந்துசெல்கா தலன்
கண் டக்கந், தருவனைமிக் குருந்தருங்கற் புடையவள்கை தீண்டினைகா
தகவித் தீங்கா, லிருணிறமு டிகமாகென் றிட்டனன்வெஞ் சாபமன்னோ
னிடருற் றெந்தாய், தெரிதலிலேன் காம்வலித்த பிழைபொறுத்தா
ளெனவணக்கஞ் செய்ய மேலோன். (௧௮)

காந்தருவர் காவலனே நீர்வெம்மை தீநண்மை காணு மேனு, நாந்
தருவெஞ் சாபமொழி யாதுசர ணடைந்ததனு னவில்சீகம் பின்றுட்,
சாந்தமுனி பராசுவர்தம் மனைவயினே ரம்பனெழுந் தருள்வா னன்றைற்,
கேந்துநல்வா கனமாயுய் குவையென்று னஃதவ்வா றெய்து மேல்வை. ௧௯

துன்னவின்மு டிகமாகிப் பராசுவப்பேர் முனிமனைக்கட் சுலவிப் பல்
வே, றின்னல்விளைத் திடத்தவத்தோன் வருந்தலுமெம் பெருமான்கண்
டினைய லீது, தன்னையடக் குவலெனக்கைப் பாசம்விடுத் தாகுசெலுங்

தான மெங்கு, முன்னைவினை போற்றொடர்வித் தீர்த்தல்செய வயர்ந்தெந் தை முன்வந் தன்றே. (உ0)

அடியார்தம் பவந்தொலைக்கும் விநாயகன்சன் னிதியினிவ்வா றடைந்த வாகு, படியார விறைஞ்சித்தன் வரலாறு சொலக்கேட்டெம் பரியா கென்று, முடியார்பொன் னிதழியந்தார்க் கணேசனதி னிவர்ந்துலக முற்றுஞ் சென்று, கடிதாங்குற் றதின்வலிதீர்த் தலும்பாா சுவமுனிவன் களிப் பிற் போற்றி. (உக)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பொக்குறு மனத்து விக்கின னென்போன் புவிக்கெலாந் துயர்செய் கின் றனனவ், விக்கினந் தவிர்த்தா ளையவென் றிரந்தான் வேண்டுகால் வசிட்டரா தியர்வந், தக்கொடி யவன்றீங் கியம்பலும் விமல னபயமீய்ந் தாகிவர்ந் தங்கை, தொக்கவங் குசத்தை விடுத்துவிக் கினனைக் கொணர் கென்றான் றாய்நதவர் களிப்ப. (உஉ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அங்குச மூலக மெல்லா மஞ்சவல் லேகி வீரந்
தங்குவிக் கினனைப் பற்றித் தம்பிரா னெதிரே யுய்ப்ப
வெங்கணு நிறையே ரம்பன் மூடிகத் திருந்த வாறே
யங்கணின் றழலெ முப்பார்த் தலுமவ னமர்கு றித்தே. (உ௩)

விண்ணவர் முனிவர் மற்றோர் வெருவப்பல் லுருக்கொண் டார்ப்போ
டண்மிவெஞ் செயலி ழைத்தா னவையெலா மையன் மாய்ப்ப
நண்ணும்விக் கினனின் றானை நயந்தன்றி வாழே னென்று
வெண்ணிமுன் னுருவுற் றேத்தி யிகல்செய்தே னெவர்க்கு நிற்கும். (உ௪)

அடிகளே பொறுத்தாட் கொள்ள வேண்டுமென் றிரப்ப வையன்
கொடியவ னமைத்து திப்போர் கும்பிடு வோர்நி னைப்போர்
புடையுறே லேனோர்க் கின்னல் புரிந்தா சியற்றின் றேனீ
கெடுவையென் றருள வவ்வா றியற்றுவ லெனக்கி ளத்தி. (உ௫)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அனுதினின் பெயரென் பெயரொடேய்ந் திருப்ப வருளென விக்கின ராச, வினாயகப் பெயரான் றுலகவெற் கின்று முதலென்றான் விமலன் விக் கினனுந், தனுதுள மகிழ்ந்து பூசைசெய் தகன்றான் றண்மலர் தூர்த் தனர் வானோர், ✱மனுதியால் வழிபா டியற்றிவேண் டியபல் வரங்கள் பெற் றனர்தவ முனிவர். (உ௬)

---

✱மனுதியால்—மனம், வாக்கு, காயம் இம்மூன்றாலும்.

மன்னவர் பெருமா னெனும்வரே ணியனீ தலிந்துநின் மனைவியோ டுவோங்கு, தன்னிக ருவர்வோன் றிலாதவ வடிக டாழ்ந்துநல் வரங்கொ டக் ககன்றான், முன்னவன் றலைமைத் தவப்பரா சுவற்கு முனைமுழு தருத்திய வனைக்கு, மன்னிய வாமீய்ந் துலகுய வுயர்வான் சிவபுரம் வந் துவீற் றிருந்தான். (உஎ)

சரணமவந தடைந்தோர் யாவரா யினுமன் னவர்பிழை தவிர்த்தருள் செய்யும், வரதன்விக் கினமன் பவன்புரி யாந்தை மாய்த்தவன் பெய ருந்தன் பெயர்முன், விரவவைத் துலகந் துதிசெய விதித்த திருமயூ ரே சனுய்க் கமலா, சுரனுயிர் தொலைப்ப வருமவ தார மைந்தினை யினிச்சொ ல லுற்றும். (உஅ)

விக்கினராசன் றிருவவதாரப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலம் (ச) கருத திருவிருத்தம். (ளஅ)

---

## மயூரேசன் றிருவவதாரப்படலம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சிந்தையான் மொழியா லளக்கொணுப் பரமன் றிருவருள் வலியி னுன் மலரோன், முந்தொரு கற்பத் தரவணை யுறங்கு முன்னவ னுந்தி வந் துதித்துப், புந்தியிற் றெளிவு பெறவரு மறையும் புராணமுமு பொருவில்சாத் திரமு, மிந்துசே கரன்பாற் றெளிந்துல கனைத்து மினி தினிற் பண்டுபோற் படைத்தான். (க)

அன்னமா மறையா திகள்பொறித் திட்ட வரியபுத் தகத்தைநான் முகத்தோ, னுன்னிய தியிற்பூ சனைபுரிந் திருக்கு நாளசு ரருக்குநற் சுரர் கரு, மன்னுபோா மூள வும்பர்தோற் றவினுன் மறைமனு வினைப்படை யாக்கிப், பன்னிய பிரமாத் திரத்தொடெய்த் தசுரர் படையெலாந் துரந்து வென் றனரால். (உ)

வலியழி தருவர் வெள்கின ரிருக்கு நாளவர் பரபின்வெண் சங்கொத் திலகுமெய் யொருவன் பிறந்தனன் சங்கா சுரனெனும் பெயரின னிவ னிற், பலமிகு கமலா சுரனென்றே ரிளவ றோன்றிமுன் னவன்பணிப் படிவாழ்ந், துலவல்கண் டிவர்பா லவுணர்யா வரும்வந் தும்பரான் மெலிந் தன முரத்திர். (ங)

நமையடர் புல[illegible] படைத்தோன் றிட்டவின் மறைமனு வனைய, வமைசெய்புத் தகங்க ளயன்புரி[illegible] வலைகவர்ந்

திடினின், றிமையவர் கெடுவ சென்னலுஞ் சங்கா சாவின வல்லிட வவன்மேல், சமையம்வே தாமோ குழத்தல்கள் *டருவிற் றனிச்சவ டிகளெலாங் கவர்ந்து. (௪)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சென்றவன் முன்னோன் முன்னர்ச் செறித்திட வுவப்பி னோக்கி
யன்றவன் கடலுட் காவ லிட்டனை யவற்றை யற்று
னன்றருள் வேத நீதி கானிலத் தருமை யாலே
தான்றுகல் குகனி னுற்று தொல்லுல கத்தோ ரெல்லாம். (௫)

விரியிசழ் மறைவா ழண்ணல் விழித்துழி பூசை யாற்று
மரியபுத் தகங்கள் காணா ‡தலமந்து கயிலை யெய்தி
வரியா வணிவெம் பெருமான் மலரடி யேத்தி யும்பர்
தரியல னிழைத்த யாவுந் தளர்வொடு சாற்ற வெந்தை. (௬)

கண்படை நீங்கி மாயன் கயவருண் முன்னோன் றன்னைத்
திண்படை கொடுப நீத்துச் சிறந்தநின் சுவடி நல்கி
மண்படு துயா முற்று மாற்றிடு மதற்கு முன்னர்
விண்பட மலைக்கும் பின்னோன் றனைவிளித் திடுதல் வேண்டும். (௭)

அன்னவன் வலியோன் றேவ ரனைவரு மொருங்கு கூடித்
துன்னமர் புரிந்திட் டாலுந் தொலைவுறா னவனி ருப்பின்
முன்னவன் மாய்த லுறானு மரிதுமுண் டகத்தோ யற்றான்
மன்னருள் புரியே ரம்ப வள்ளலைப் பணிதி யாயின் (௮)

தீதியற் றிடும்பின் னோனைத் தெறுதருந் தின்ன மென்று
வேதனை விடுப்ப வன்னோன் விதிமுறை தவறா தைங்கைப்
போதக முகத்து வள்ளல் புனைகழல் கருதிப் பூசை
காதலி னியற்ற நாளுங் கணேசனின் னருள்செய் தாங்கே. (௯)

பாசமங் குசந்தண் கஞ்சம் பாசமர் நாற்கை யோடு
தேசவிர் சித்தி புத்தி சிறந்திரு பாலும் வைக
மாசறு வயமா வூர்ந்து வீரவான் பார்த்துள் ளூறு
கேசமே லெழுவா னந்த கேயியுண் முழ்கி யிப்பால். (௧௦)

---

* அருவில் --உருவந்தோன்றுவண்ணம்புகுந்து.
‡ அலமந்து--வருந்தி.

கண்ணிவிர் வாச நெஞ்சங் கரையவென் காமுங் கூப்பி
மண்ணிடை வீழ்ந்தெ முமுஞ்க் கிடப்பமா முகத்து வள்ள
றண்ணருள் சாந்த யன்றன் றனிர்க்காம் பிடித்தெ முப்பிப்
பண்ணிறை மறையோ னுள்ளப் பரிவுதீர்க் கருளிற் பன்னும். (௧௧)

அருமைசான் மறைபு ராணஞ் சாத்திர மாமிம் மூன்றும்
பெருகொளி தருநம் மூன்று விழியினும பிறந்த தாகு
மருவளர் கமலத் தோய்மற் றவையெலா மாண்ட தாகக்
கருதியுள் ளிவையன் முன்போற் கவினுற விளங்கச் செய்வேம். (௧௨)

பண்ணவர் முனிவ ரேனைப் பாருளா ரெவரு மின்ன
னண்ணவெவ் வினைக ளாற்றி நலன்றராக் கமல னென்னுந்
திண்ணிய வசா ருவி செருநிலத் தியாமே கொள்வேங்
கண்ணனெம் மருளாற் சங்கா காறுயிர் காதும் பின்னர். (௧௩)

என்றொரு மறையோ னுவி யிருமறை யாதி ¶கோசம்
வென்றிகொ டோளிட் டோது மாயிரம் வியன்மா னுக்கர்
துன்றவந் தாத்தி னின்றுஞ் சுந்தராச் சிரம நோக்கி
யன்றனை யிழிந்தா னெண்ணில் வான்சுடர் வருத லேய்ப்ப. (௧௪)

அந்தராச் சிரமத் துள்ள தொன்மைமா தவர்க ளெல்லா
மிந்தவா றொளியா தென்னு வுளத்திறும் பூது பூத்து
வந்தமா மறையோன் பாதம் வணங்கிநின் றயந்தே மெந்தா
யெந்தவூர் நமக்கு நாம மெவன்வந்த தெவன்கொ லென்றார். (௧௫)

பவவினை தவிர்த்தா னங்கைப் பனவனூர் கருணை கூர்ந்து
தவவலி யுடையீர் செம்மைச் சாற்றுமல் லால ரென்ன
நவைபறு மறையவ் வாறே யுலகமு நவிறல் செய்யு
மிவனரு மறைக ளோதன் மகங்களாற் றிடுமி யறைக. (௧௬)

நித்தியத் தோடு நைமித் தியங்களு நிகழ்த லின்றி
முத்தலத் தோரு நோயுண் மூழ்கலோர்ந் தியாமுன் சொன்ன
வித்தையத் தனையுஞ் செவ்வே பொறித்தல்செய் துணர்வின் மிக்க
புத்தகங் கொணர்ந்தா மேற்றுப் பொருடெளி வுறவே கற்று. (௧௭)

பண்டுபோற் கிரியை யாவும் பயிற்றியின் புற்று வாழ்மின்
மண்டுசீ $ருறையு ளொன்று வளங்குமி னெமக்கிங் கென்று

---

¶ கோசம்-புத்தகம்.

$ உறையுள்-வீடு.

ரண்டரேத் தெம்பி ராஞ ரருளனா தலைக்கொண் டாங்கட்
கொண்டதோ ருறையு ணல்கிக் கோதம ஞதி மேலோர். (௧௮)

அருணிறை மறைகேட் டையத் தகன்றனர் சில்லோர் சில்லோர்
தெருணிறை புராண முற்றுஞ் செவிக்கமு தெனக்கேட் டுள்ளத்
திருணிறை மயக்க நீத்தா ரிணையிலா கமங்கேட் டுண்மைப்
பொருணிரு ணயமோர்ந் தாங்கே புலப்பகை வென்றார் சில்லோர். (௧௯)

இன்னண மனைத்துங் கேட்டுஞ் சிந்தித்துந் தெளிந்து மின்பிற்
றுன்னுதம் மாணுக கர்க்குத் துகளறப் பயிற்று வித்துந்
தென்னிறை கிரியை யாவும் பண்டுபோற் செய்து வந்தார்
முன்னவன் முன்வந் தெய்தின் முடிவுறுப் பொருளொன் றுண்டே. (௨௦)

வேறு.

வண்டுளருந் தண்டுளவ மணிமார்ப னுந்திவந்த மலரோன் முன்ன, ரண்டர்பிரான் றனக்குரைத்த முதனூலை நியதிமுட்டா தருச்சித் தேத்திக், கொண்டிருந்த தொழிந்நதெனை மனககவலை கொண்டிருந்துங் குலவு வேத, மெண்டிசையுந் தழைந்தெனவோர்ந் தின்புற்றே ரமபனடி யி றைஞ்சி வாழ்ந்தான். (௨௧)

தெள்ளுமறை முதற்றென்னூ னெறியுலகி னிவ்வாறு செறித னோக்கிக், கள்ளவுளக் கமலனெனுந் தீயவுணன் றனதுமுன்னோன் கழற்கா ளுழ்ந்து, முள்ளரையம் புயத்துறையுந் திசைமுகத்தோன் சுவடியெலா முனர்யான் சென்று, கொள்ளைகொடு வந்ததனாற் பயனென்னை குணன் சிறிதுங் கொண்டே மல்லேம். (௨௨)

சுந்தரநல் லாச்சிரமத் தொருமறையோன் சுவடியொடு தோன்றி யாங் கே, யந்தணர்தம் முளமகிழ மறைமுதனூற் பொருள்விரித்தா னவ்வூக் கத்தாற், சந்தமறை நெறியொழுக்க மாச்சிரமம் வருணமுமுற தவறு தெங்கும், பந்தமுற வேவளர்ந்த மகநிமிர்ந்த வமரரவிப் பாகம் பெற்றார்.

இனியெவரு நமைமதியார் வடிவினைத்தே மொன்றின்முயன் றிண்ட யிற் றேற்ற, றனிவலியோ வெனவயர்வீற் சாற்றலுமூத் தோனிளை யோய் தளர னம்பா, னனிதிறனே மியனுதி யமரரும்பொர்க் குன்றார் கைப் பலியே றுண்கொள், பனவனெதிர் பவனோபோ யவற்படுத்* தி லேகமெனும் பகுதி யாவும். (௨௩)

* இலேகம்-எழுதியபுத்தகம்.

## வேறு.

கவர்ந்திவண் மீடி யென்னக் கழறின னாகப் பின்னே
னுவந்திருந் தும்பை சூடி யொருவயப் புரவி மென்மீ
திவர்ந்தொலி கடல்போற் றானை யெம்மருங் கினுஞ்சூழ் போதத்
தவம்பயி லுரவோர் வைகுஞ் சுந்தராச் சிரமஞ் சார்ந்தான். (உரு)

அன்னவன் வருதல் காய வாணியா லறிஞர் கேட்டு
முன்னவன் மலர்த்தாள் போற்றி முகிழ்த்தகை சிரமே லேற்றித்
தன்னிக ரில்லாத் தீய தருவனுங் கமல னிங்கண்
டுன்னின னெமைய டற்குத் தொகையறு தானை யோடும். (உசு)

எவரினி யஞ்ச லென்றெம் மிரும்பகை நீக்கு விப்பா
ரெவர்சரண் சார்வேஞ் சாரா திரியவோர் வழியுங் காணே
மெவர்வலி யவுண னேடிங் கெதிர்த்தவ னுயிரை யுண்பா
ரெவருமின் றழியு நாள்வந் தியைந்ததென் றிணைந்து நிற்ப. (உஎ)

வரந்தரு பனவ மூர்த்தி மறுகுமா தவரை நோக்கி
யிரங்கலி ரெவரு நம்பின் னிருமினத் தருவன் றன்னைப்
பரந்தவெஞ் சேனை யோடும் படுத்துநஞ் சேவ கத்தி
னுரந்தனை நும்க்கின் றேகாட் டுதுமென்று ரைங்கவ் வேலை. (உஅ)

எண்டவிர் படைஞர் தாமவ் விறையரு ளாற்¶றா சோடு
மீண்டிவர் திறைஞ்சி யாஞ்செய் பணியெவ னெனமிக் கார்ப்பக்
†கண்டக வவுணன் கண்டு கனன்றுதன் படையை யுய்த்தான்
றிண்டிறற் படையி ரண்டுஞ் செருச்செயத் தொடங்க லுற்ற. (உகூ)

தேர்கரி பரிந டாய்வெஞ் செருச்செயும் வேலை வஞ்சன்
பேர்படு சேனை யஞ்சிப் பிறகிட வழன்றன் னேன்கைக்
கூரிய கட்கங் கொண்டெங் கோன்படை களைத்து ரங்தே
யாருயிர்க் குயிரா னானை யடுத்தடு படைவிட் டார்த்தான். (ஙய)

விடுபடை யனைத்து நூறி விடையவன் படையை யெம்மான்
றொடவிஃ தடுமென் றஞ்சித் தோற்றுமா யையினாற் றீயோன்
புடைபடு தன்னூர் புக்கான் பொன்றுசே னையையெழுப்பி
மிட்டல்கொடு மீண்டா னெந்தை சுந்தராச் சிரமமேவ. (ஙக)

---

¶ தூசு--படைவகுப்பு.

† கண்டகவவுணன்--கொடியவனான அசுரன்.

சிந்தூர முகக்கோன் பாற்செய் தியல்பொர் பார்த்த 0நீது
சிந்தூர முகத்தல் போன்மேற் சிந்துவின் மூழ்கி னு*னென்
றந்தவென் றடர்த்த நீதிற் றுநிறத் தெங்க ணும்ப
ரந்தவென் றடுத்து ளாத்தாங் கடர்ந்தது விசும்பிற் கங்குல். (௩௨)

அடுகளத் தொளித்தூர் புக்க வவுணனை முன்னோன் பார்த்தென்
மிடலிகின் றுளிசெய்த் தோர்பார் விழினுமாங் கதினின் போல்வா
ருடனுதித் திடுவ ரன்ன தோர்ந்திலை மீண்டா யின்னும்
புடைபடை தொகச்செல் போர்மேற் பொருளெனன் மான மன்றே. (௩௩)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

எனவவ னிசைந்து புலர்பொழு தெதிர்ப்பார்த் திருப்பயா வையு முண ரெந்தை, மனமகிழ் தவத்தோர்ப் பார்த்தற வீரம் மலைதலின் மலைந்து செல் லவுணன், சினமிகுந் தினியேற் றுலகெலா மளிப்பச் செல்வனன் ன வற்றெற வெமக்கோர், புனைமயிற் பரிமேற் றான் றிடமகம் புரிவல் பொருந் ‡துப காரணநீர் கொணாமின். (௩௪)

என்றருந் திருவாய் மலர்தலு மவர்வேள் டியவனைத் தினையுமாங் குதவத், தன்றுணை ஞானங் கிரியையி னுருக்கொள் சத்தியாஞ் சித்தி புத் திகள்வந், தொன்றவுன் னுதலும் மனையவர்போத வொளிர்மகம் விதி வழி புரிந்தா, னன்றருண் மகமு மதனுள பொருள்கள் யாவுமா மொரு தனி நாதன். (௩௫)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பாகமா வேள்வி முற்றப் பசியவெற பென்ன வாங்கோர்
கேகய மெழுந்தே பண்டங் கிழிபட வுரத்துக் கூவி
நாகமன் னவனுஞ் சேட னடுத்தலை நெரிய மண்ணில்
வாகுறு கால்கண் மாறி மாறிவைத் தாடிற் றன்றே. (௩௬)

வருமயூ ரத்தி வர்ந்தான் வள்ளலன் றதனு ளும
மொருமயூ ரேச னென்ன வுரைத்தன ருறுவ ரின்ன
திருமலி நாமஞ் சொன்னோர் சிந்தித்தோர் திருவி னெய்வர்
தருணமற் றுகக் கீழைச் சாகரத் துதித்தான் வெய்யோன். (௩௭)

---

0 நீது சிந்தூர முகத்தல்போல--நீதைச்சிந்தத் தக்கவலிமைப் பாட்டை முகந்து கொள்ளுதல் போல
*என்று-சூரியன்
‡உபகாரணம்-அங்கமானபொருள்

அன்னபோ தவுணன் முன்போ லளவறு தானை யோடு
துன்னவே ரம்பன் பாதத் துணையடி தொழுது புத்தி
யென்னுமா தைய யான்சென் றவுணனோ டிகற்போ ராற்றி
வென்னிட வென்றி கொண்டு மீள்வலெற் கருள்க வென்றான் (௩௮)

அவ்வண மருளப் புத்தி யமர்க்களஞ் சென்று வேண்டுந்
தெவ்வடு படைசி ருட்டி செய்துய்ப்ப விருதி றத்தும்
வெவ்விய வீரர் பாய்மா வேழந்தே ராதி யாகத்
தவ்வலில் வகைக டாந்திச் சாரிசென் றமர்செய் தாரால். (௩௯)

செருமிக மேல்வை புத்தி சேனைவாள் வயவ ராற்று
தொருவிசின் றிடுத லோக்கி யுறுவிழி சிவந்தா ளாங்கே
பொருபடை தரித்தோர் வீர னுதித்தவ னிணைத்தாள் போற்றி
யருமைமா தவர்வாழ் புண்யாச் சிரமனுசென் றைங்கைப் புத்தேள். (௪௰)

சீரடி தொழக்கண் டெங்கை திருவுள மகிழ்ந்து தொண்டர்
போர்மலி யினைய னந்தம் புதல்வனு மிவனு னுங்கட்
கார்தரு மிலாப மிக்கா மிலாபனென் றழைமி மென்ன
வாரமுற் றழைத்துத் தாழ்ந்தார் மாதவ ரதன்பி னெங்கோன். (௪௧)

தன்னரும் புதல்வன் றன்னைத் தனையினின் றெழச்செய் தேபோர்க்
கின்னினிச் செலக்கு றிப்ப வேகினு னேக லோடு
நன்னர்மா தவரோத் தைங்கை நாதன்றன் சிறுவ னுட
லொன்னலர் முனையிற் காண்டு மென்றுட னேகி னன்பின் (௪௨)

அரிகரி குழாத்துட் புக்காங் கடுகளத் தடுத்த வீரன்
வரிசிலை குனித்து வாளி மழைசொரி தொறுமெ திர்ந்த
தரியலன் சேனை யாவுந் தளர்ந்துட லழிய வாவி
யெரியுமிழ் செங்கட் கூற்றா ரிம்மெனப் புகுந்த மர்ந்த (௪௩)

முன்னவனருள்சே யிவ்வா றெதிர்படை முழுது மறத்
துன்னல னுய சங்கா சுரன்றனக் கிளவ லோக்கி
யுன்னருந் திறத்தின் னுனை யுபாயத்தாற் படுத்தல் வேண்டு
மென்னவங் குன்னி மோகாத் திரமெடுத் துபயோ கித்தான். (௪௪)

மொய்த்தவப் படையாற் றுனை யணைத்தொடு முனிவர் தாமு
மெய்த்துவெஞ் சோகத் தேய்ந்தா ரின்னதீர்த் தருளே ரம்ப
மெய்த்தரு மூர்த்தி தானு மனையமா தவர்போன் மேவ
வத்திற னறியா தாட விலாபனப் படையை மீறி. (௪௫)

வானவ ரெவரு மெச்ச வன்சமர் புரியா நிற்பத்
தானவன் விடம்போற் சீறிச் சாமமை பொழிந்தா னன்ன
மானமிக் கிருவர் தாமும் வருகணை விலக்கிப் பின்னுஞ்
சோனையிற் சொரிவார் சாரி சுற்றுவா ரவனி நின்றும். (௪௬)

விண்ணுல காதி சேடன் வீழ்பில மாதி கீழ்மே
லெண்ணறு தானந் தோறு மேன்றிரு மூன்று திங்க
ணண்ணள வுடற்றத் தீயோ னலிதளர் வொழித்தேய் வேனென்
றுண்ணிநொந் தேகி னானம் நொந்திலா பனுமீ ளுற்றான். (௪௭)

மீண்டவன் கடைநாட் சீவர் சுழுர்தியில் வீழ்தன் மான
வாண்டறி ஞருமற் றேரு மறிவொரீஇக் கிடத்தல் கண்ணுற்
காண்டலு மிக்கேதம் மென்னு கலங்குழு ரெய்திப் பின்னு
மீண்டு மருந்தோன் றுண்டே யெனத்தெளிந் தியற்ற லுற்றான். (௪௮)

வெவ்வினை தவிர்த்தா ளெந்தை விநாயகர் திருநா மத்தை
யொவ்வநூற் றெட்டு வட்ட முளங்கொடொண் ணீறு வீசித்
திவ்விய மனுவை வீழ்ந்து சாம்பினோர் செவிதோ றோத
வவ்வழி யெம்மா னன்றி யனைவரு மெழுந்தா ரன்றே. (௪௯)

அனையவ ரெழலுந் தாதை பெறாமைகண் டிலாப வண்ண
வினையது சாந்த மன்றென் பிழையினேய் வுற்ற தாமென்
றுனியழன் மூட்டிப் பாயப் புகவுவா முகத்தே மைந்த
நினதுளஞ் சோதித் தேனுற் பத்தியி னிறைந்தோ னீயே. (௫௰)

என்றெழுந் தருமை மைந்தற் கின்னருள் செய்தே னோர்க்கு
நன்றுபா லித்தா னீது நிற்கமுன் னேவியாப் போரிற்
றன்றளர் வகற்றச் சென்ற தருவன்மொய்ம் புற்றுச் சேனை
துன்றவெய் திடலு முத்தி தோய்சிப்பா னினைந்தன் னா முன். (௫௧)

மாகத மலைநேர் மஞ்ஞை யிவர்ந்தைங்கை வாத னிற்பக்
கருணைவெற் பினைக்கண் ணுற்ற கருநலன் றோன்றா லென்முன்
0 குருவிவென் னிவர்ந்தி வர்ந்தாய் கொலைபயி லெனத யிற்கிங்
கினையுனை யிடுவே னென்ன வெந்தையுங் கனன்று கூறும். (௫௨)

வக்கிர துண்ட னானே மூவரை வருத்தல் செய்வான்
பொக்கமில் கணமன் னாவி போக்கிடச் சுமுக னானேஞ்

0 குருவிவென்னிவர்ந்து-மயிலென்னும் ஓர்பறவையினது முது
கின்மேலேறி

செக்கரார் நிறச்சிந் தூரற் றெறக்கயா னனனென் ருனேமை
விக்கினன் கொடுமை மாய்க்க விக்கின ராச ஞனேனம். (௫௩)

இன்றுன துயிரை வௌவ விம்மயூ ரேச ஞனே
மொன்றுநம் மவதா ரப்பாங் குணர்கிலே யுணர்வி றீயோய்
நன்றறி யெனவே †வீற்று நாண்முகி லெனப்பொ ழிந்து
நின்றன னவற்றோ டன்னுன் சேனையுஞ் சிதைத்தா னித்தன். (௫௪)

கறைதிரை நதியா வோடிக் கடல்புகக் கழுகு சேனம்
பிறையெயிற் றலகை யுண்ணப் பிணக்குவை படலாற் சேனை
பொறியிலி யழன்று தெய்வப் படைதொட்டா னவற்றைப் போக்கி
யிறைவரோர் தண்டன் ஞனெஞ் சிடையுய்த்தா னிழியச்செந்நீர். (௫௫)

இருநிலத் திழிந்த செந்நீர்த் துளிதொறு நின்றின் ஞேன்றால்
வரமுறு செயலால் வீரம் வடிவமா தியிற்ற னைப்போற்
கரையில ருதித்தார் வானோர் கலங்டாந் தையிற்சு ழன்று
ரரியயன் மகவா னஞ்சி யம்பொனேங் கலிமெஞ ளிந்தார். (௫௬)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அரந்தைசெய் யவுண னொருவனூற்றலுக்காற் று[illegible]
பரந்தன ரெனினென் செய்துமென் றுள்ளம் பதை பதை[illegible],
பெருந்தவர் பசிய பிணிமுக மூர்ந்தார்க் கிடை[illegible],
நிரந்தர மகிழ்ந்தான் பரமன்மற் றெவரோ நினையவு நிகழவு [illegible]. (௫௭)

உலகொரு மூன்று முய்யுமா றெம்மா னும்பரோ டிம்பரும் வியக்கும், வலிமலி மயிலைத் திசையெலாங் கடவி வளர்ந்த தசகரங் களினு, மலகி லம் பகழி மழைபொழிந் துதித்த வசுரனைத் தெறுந்தொறு மவர்தந், தொலைவில்செல் குருதித் துளிகளி னின்றுந் தொகையறு தகுவர்வந் துதித்தார். (௫௮)

உதித்தவர் தமையுந் தெறத்தெறப் பின்னு மொழிவிலா தெழுவர்பல் வீரர், மதிப்பற வவுண வெள்ளமிவ் வாறு வருதலைத் தனைத்தொழு வோர்க்கே, கதித்திற மருடே வருளிலா பன்றுன் கண்டுமுன் றனையனை மாராய், விதித்திடுஞ் சித்தி புத்திக டன்பால் விளங்குற வுளத்திடை நினைந்தான்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னவ ரிருவர் தாமு மாங்குவந் தொன்பான் கோடி
பன்னருந்திறத்தி ேனுங்கு பூதரைப் படைத்துவிட்டா

† ஈற்றுநாண்முகிலென-கற்பாந்தகாலத்துப்பொழியுஞ் சத்த மேகம்போல.

நினர்பல் கசுரர் தம்மை யெடுத்துவாய் மடுத்து மண்ணிற்
றன்றுசா ரியையு நக்கத் தொலைவுற்று ருதிப்போ ரெல்லாம். (சுய)

சாலநா ளிழைத்த தூய தவத்தினும் பெருஞ்செல் வத்தை
ஞாலமீ தறஞ்செய் யாது நழுவவிட் டிடுவார் மான
மேலைநாட் டவத்தான் வாணாள் விளைந்தனை யோம்பா தந்தோ
மூலகா ரணற்ப கைத்து ¶முடிக்குநா ளடுத்த தீயோன். (சுக)

தன்னருந் தளமு மேகத் தாங்குகைப் படையு மேக
வுன்னரும் வாமு மேக வொருவனாய் நின்று னன்னான்
மன்னுயிர் தனது செந்தா மரையடி புகவெம் மான்பின்
கொன்னவி றிரிசூ லத்தாற் றடிந்துமுக் கூறு கண்டான். (சுஉ)

மருமல ரிறைத்தார் வானோர் மாதவர் தொழுது நின்று
ரரிமுத லமரர் போந்தாங் கமலன்சீர் பாச லுற்றா
பொருவினன் முகனா ரன்பிற் பூசை செய் தனனவ் வேலை
காகநீர் கவிழ்ந்தோ ராறாய்க் கதழ்ந்தவ ணோடிற் றன்றே. (சுங)

ஓடுநீ ணதியி னோடி யுறுவர ராரா தித்தார்
நீடுவான் கருணை பூத்து நின்மலன் மகிழ்ந்தெ ரவரகுருந
சேடுசேர் வரந்த ரிக்கத திருநதி நதிகட் கெல்லாம்
பீடுசான் றெமக்கு ரிததாய்ப பிறங்குமிங் கமாவோ மென்றும். (சுச)

என்னலுங் கமலத் தோனோ நிகேதன மியற றுவிக்கத்
தன்னிக ரில்லா னங்கட் டங்கின னினைய வாற்று
லந்நதி படிந்தெம் மானை யருச்சித்தோர் கருப்ப ணுதி
துன்னுவித தவர்சேய் செலவம சுகமுற ரனை டபார ராவர். (சுரு)

வருமயூ ரேச னைய வணமிஃ தவனே பின்னா
முருகுலாங் கொன்றை சூடு முக்கணர் வாம பாகம்
பிரிவு று வுமையாட் கேமம் பெருகவோர் மகவாய்த் தோன்றிப்
பொருவிலா மஞ்ஞை யூர்ந்த புகழினி யுரைக்க லுற்றாம். (சுசு)

மயூரேசன்றிருவவதாரப்படலமுற்றுப்பெற்றது.

ஆகப்படலம் ரு-க்குத்திரு விருத்தம். (ளஎயச)



---

¶முடிக்குநாள்-மயூரேசமூர்த்தியால் தான்முடிவுடையப்பெறுங்காலம்.

யாமே யாய தலைமையுளா னருளே யிசைந்த வடிவமுளான்
றேமே றிதழி முடியுடையான் சிறுகண் வேழ முகமுடையான்
றாமே தினியுற் றெதிரினல்லாற் றனுவும் வாமு மழியாவென்
றேமே லருளி யுருக்காந்தா ளிப்பே றடைந்து மிறந்தனனால். (அ)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

இத்தகு வரங்கள் பெற்றதசிந் துவுமீண் டெழிறிகழ் கண்டக புரத்துற், றொத்தசீர்த் துக்கை தனைமணந் துய்ர்க வுத்துவன் மித்திர னமைச்சா, வைத்தக னிலத்தா ரசுரார தியனை வலிதின்வென் றும்பனை வெளவி, மெய்த்தகு சுரரோ டரியையுஞ் சிறையின் வீக்கினன் கொடிதவன் வீரம்.

அழிவில்சீர் வேத யாதிநூல் கலையா றகன்மடிக் கடலினுய்த்தமரர்; குழுவெலா மிறைஞ்சத் தன்னைநோர்த் துருக்கள் குயிற்றியீய்ந் தனன் முற சறைவித, திழிதொழி லினும்வே றியற்றின றற்று திமையவர் குரு வையுற் றெந்தாய், பழிபடு செயதீர்ந் துய்யுமா றெங்ஙன் பகரென விறை ஞ்சலும் பாரா. (ய)

ஒண்ணிட ரனைத்துந் தெறும்விநா யகனை யுன்னியா ராதிமி னிவி, ரெண்ணியாங் கெய்து மெனவவன் மொழிநதாங் கியற்றினர் புகர்முகத் திறையோர்ந், தண்ணன்மா மடங்க லிவர்ந்திரு மருங்கு மணியிழைச் சித்திபுத் திகளு, நண்ணவந் துமைசே யாகிநுந் தெவ்வை நலிக்குது மெனச்சுரர் மகிழ்ந்தார். (யக)

சிந்துசெய் துயரா லிரிந்தமா தவத்தோர் சிலர்திரி சந்திவைப் பிருந்து, கந்தாங் கறுத்த முதல்வனை யுளத்துக கருதிநோற் றனரவர்க் கிரங்கி, யிந்துசே கான்வெற் பரசியோ டெருதூர்ந் தெதிர்ந்தவ ருனாவினு யரு ள்வா, னந்திலாங் கியோகத் தமர்ந்தனன் மலைமா தையுநீஇ யெம்பிராற் பணிந்தே. (யஉ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

நினையுமயோ கினர்க்கு நல்கு நிமலநீ யோகு முப்பென்
னெனவிஃ தரிய நன்*மந் தணமென்று னற்றே லெற்கு
மனையது தெளிய நல்கென் றிடவறைந் தோரொ ழுத்துட்
கனிவினோர் வித்தா னீரா றுண்டதைக் கணித்து நோற்றாள். (யங)

மலைமக டிருமுன் னைங்கை வள்ளலம் புயன்மா லீச
னலர்திரு முகங்கண் மூன்றும் வலமிட நடுவாக் கண்க

---

*மந்தணம்—இரகசியம்

விலகவே மூக்கை யாறு வெண்குமுத் தலைவேல் சங்கங்
கொலைமழு வக்க மாலை குண்டிகை யாறுந் தாங்கி. (கச)

வெண்ணிற முடைய ராய்வெள் விடையிவர்ந் தெதிர்நிற் பக்கண்
டெண்ணிறை யுவப்பி னோக்கி யொருவநின் பாலன் பென்று
நண்ணவெற் கருளென் றேத்த நயந்துநின் மகவாய் வந்து
றெண்ணுசிந் துவைக்காய் வாமென் றிசைத்தகன் றனன் பிராட்டி. (கரு)

உற்றவிப் பான்மை யெந்தைக் கோதிவாழ் தலுஞ்ச துர்த்தி
பெற்றநாள் வரக்க ணேச னுருப்பிரு துவியி னாகி
முற்றளி யோடு பூசை முடித்தன ளதற்கு வந்தே
மற்றவ னெங்குந் தானு மருவுபே ரொளியாய் நின்றான். (கசு)

நிற்றலு முமையா ளஞ்ச நிருமல னுறுப்பொவ் வொன்றுஞ்
சொற்றலுக் கொண்ணு வெண்ணந் துலங்கிடக் கொண்டா னாக
மற்றதன் னவள்கண் டைய வொருமக வாகி நீயிங்
குற்றிடல் வேண்டு மென்ன விரந்தன ளுவந்தெம் மானும். (கஎ)

மூவிரு கரமு மூன்று விழியும்வெண் ணிறமு முத்துக்
கோவையார்ந் திலகு மார்புங் குலவவோர் மகவ தாகித்
தேவிமுன் னின்றான் கண்டு திருவுள மகிழ்ந்தெ டுத்தே
யாவிநா யகன்றி ருக்கை யீயநுதன் னங்கை யேற்று. (கஅ)

குளிர்புன லாட்டி யன்பு கூட்டிததன் முலைப்பா லூட்டிக்
களிமிக விருந்தா ளாகக் களங்கம்வா னறநீர் முற்றுந்
தெளிவுற வசந்தம் வீசத் தீய்ந்தநீ டருக்க ளெல்லாந்
துளிருறக் கறவை நீத்த சுரபிகள் கறப்ப வாக. (கசு)

மூவுல கத்தி னோர்க்கு முடிவுறு வின்பந் தானு
மேவின வுருமி மறன்ன விண்டுதுந் துபிக ளார்த்த
தேவர்நன் னிமித்தங் கண்டார் சிந்துதுன் னிமித்தங் கண்டா
னுவிது பெரிதே யைய னுடலொவ் வொன்று மாயின். (உ0)

கண்டஃ@வுற் பாதத் தாலாங் காரியந் தேற வுன்னி
யண்டரைத் தனையிட் டாளு மடற்சிந்து வொற்றர்க் கூவித்
தெண்டிரை யுவரி ஞாலஞ் சென்றுசென் றதிச யங்க
ளுண்டெனி லறிந்து வம்மி னெல்லையி னெனவி டுத்தான். (உக)

அன்னவொற் றுவர்தஞ் செய்கை யறைதும்பின் வனத்தி னேற்ற
மன்னுமா தவரில் லோடும் வந்தச னுமைசே யாய

@ உற்பாதம்-துன்னிமித்தம்.

தன்னிக ரில்லான் பாதந் தாழ்ந்திறைஞ் சித்தி ருப்பேர்
பன்னிஷர் கணேச னென்னப் பரிவினற் றுக வோர்நாள்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அங்குயர் மரீசி முனிவரன் கணேச னடிதொழச் சென்றக லேல்வை, தங்குமா தவரன் னவற்பணிந் தெமக்கோர் தளர்வுறு வகையுரை யெனவத், துங்கமா முனிவிக் கினந்தவி ரிறைபார்ப் பதிக்கொரு சுத னெனத் தோன்றி, யிங்கிருத் தலியெனன் றளர்ச்சியா யினுமவ் விறைம கிழ் கவசமொன் றுரைப்பன். (௨௩)

முதனுகத் தினிற்றேள் பத்துருப பொன்மை முடங்குளே வாகன மிரண்டா, நுதலுகத் தினிற்றொ னாறுரு வெண்மை நெறின்மயில் வாக னமூன்றும், விதயுகத் தினிறறே ளுள்குருசு செம்மை மூடிகம் வாக னம் விரினாற், பதயுகத தினிறறொ னிரண்டிருந தூமம பாயபரி வாகன மாகும். (௨௪)

இவ்வடை வினின்மா முகப்பிரான் வடிவுன் னிருத்தியே யோகசா தனத்தாற், கவ்வையில சிரையை விநாயகன் முடியை மகோற்கடன் கவின்றிகழ் நுதலே, யொவ்வுமா சிபன்னிலை னிநாபுரு வசுதை மகோதரன் ஞொளிர்தரு விழியைக், தெயவடு பால சந்தர னிநைழந கெஜமுகன் செவ்விய நாவை.

உயர்கணக் கிரீட னுடியையங் கிரீசை சுப்புரவந தோதிய வாக்கைச, செயவிநா யகனன் னகையிஜைச கிறந் துனமுநன் கேள்விசால செவியை, மயர்வறு பாச பாணிநா சியைச் சிந்தாம னமா மதங்கா முகத்தை, யியல்கரு ணேசன் கழுதகிளை மகிமை னிருபடிய நை நய்க்க பூரவன். ௨௫

முலையைவிக் கினவி நாசனமுன னிதயந் தலைநாய னாரன் பொய் வயிற்றை, நிலை செயே ரம்ப னேரிரு புறசசை தாரதா னிப்பிருட் டத்தை, யலைவறு சீர்விக் கினகர னிலிங்கத நீனைவியாட் பூடவா னுங்கே புலனிலாக் குயத்தை வககிர துண்டன்சகனதனை யனபன்புன மெறுடையை

மங்களமூர்த்தி யிருமுழந் தாளை மகாபுத்தி வனசமேர் யதத்தைச், சங்கையி லேக தந்தன்றிண் காத்தைச் சார்ந்தகிப் பிரப்பிர சாத, னங் கையை யாசா பூரகன் விரலைப் பதுமவர்த் தனனணி நகத்தை, யிங்கித மருளும் விநாயகன் காக்க வியனுஞா னங்கல்வி மானம். (௨௬)

குலமதி தானந் தவம்புகழ் மெய்ம்மை கொழுநிதி தானிய மணுட்டி, யிலகுசேய் மனைநட் போடுநோற் கதியு மினியசர் வாயுதன் கேண்மை,

மலிபவுத் திரார தியஙினை யனைத்து மாமயூ ரேசனுள் ளுயினா, நலமருள்
கபில னற்படை யதனை விகடன்வே தாளமோ கினியே. (௨௯)

பிறவுயிர் களினுல் வருந்துயர் பற்பல் பெயருறு நோய்களு மனுகா,
திறவுயர் பாசாங் குசதரன் காக்க வேய்ந்திடு நன்பகற் போது, மறமலி
யேக தந்தனற் பொழுது மற்றிரு சந்தியு மாரூத், திறன்மலி தருவிக்
கினகிரு துப்பேர்ச் செம்மறண் ணருளொடுங் காக்க. (௩௰)

இந்திரன் றிசையுத் தீசன்றீத் திசைசித் தீசனந் தகன்றிசை விளைப்ப,
வந்தவி ருமாபுத் திரன்வரு நிருதி திசைகணே சரன்வரு ணன்போற்,
றந்திசை விக்கி னவர்தனன் பவனன் றிசைகெச கன்னனுர் நிதிக்கோன்,
றந்திசை நிதிப னினியவீ சானன் றிசையீச நந்தனன் காக்க. (௩௧)

என்றுயி ருடலம் தந்தெய னலந்தி திடம்பொழு தனைத்தினுங் காப்
பான, மன்றநா டொறுமப போதுமவவிறைவை வழுத்தலா மிக்கவ
சதநா, என்றறி முனிவீர போற்றுமி னிடர்போ நலமுறுஞ் சரதமீ
தொழுக்கன், பொனறு மறறவளா யன்றியார் செயினு மெண்ணியாங்
குறுவபொன் றுகவாறுவ (௩௨)

அறுசீரக் கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

செப்புமி திருககச சிநது செலுநதுதா துவமொங் கெங்குந்
தபபுறு தேகிப் பின்னாந திரிசந்தி, யலஞ்சாரந தாஙகே
யெபபுவ னத்து மெனறு மறியா விவ்வதி சயந்தோர்ந்
தப்பரி சொலலே போயதநம மாசறுக் கறையனுற்றா. (௩௩)

செருவிரும பிறைவ வண்டீரந திரிசநதி வனமென் றென்றுங்
கிருவருந துருவ ணைடோ னிமமலே வலலி யோடும
பொருவருந தவநதோர் பூநா போற்றவாழ் கின்று னன்றி
யொருபெரும் புதுமை மேனு முண்டுகொ துரைத்து மாதோ. (௩௪)

கண்ணக லுலகின் றேமபுங் கவுரிநோன் பியற்றி னென்னற்
றண்மதி வாரத துற்ற சதுரத்தி *வை காசி நாளி
லெண்ணிலக கனஞசிங் கங்கோ ளொழிறசுதி னத்த வட்கோர்
விண்ணவா புகழ்நதி றைஞ்சும் விமலநந தனன்றோன் றுற்றான். (௩௫)

§ஒழுக்கன் பொன்றுமற்றவளையன் றியார் செயினும் என்பது—
பொருந்திய ஒழுககமும் அன்பும் இல்லாதவர் மிக்கதகுதியுடைய வராயினும் அவருக்
கின்றி பொருந்திய ஒழுக்கமும் அன்பும் உடையவர் எளியதகுதியுடையவராயினும்
அவருக்குப்பயன் படுமென்பதுகருத்து.

வைகாசிநாள்-விசாகநட்சத்திரம்.

பணங்கொ ளுகணைப் பள்ளியோ னுதிமு வருக்கு
மிணங்கு முத்தொழி லீய்ந்தய னிருங் § தொழி லறிவாங்
குணங்கொள் புத்திசித் திப்பெயர்க் கோதையா மகாளை
மணம்பு ரிந்தருள் புரிந்திடு வரதநின் னபயம். (௩௰)

பார்ந னுச்சியிற் பதிதரத் தாங்குபாப் பணைதுஞ்
சோர ரிக்கவன் செவியினின் றுதிக்குமோ * ரிரண்டு
வீர ரைத்தெற வலியிலா தஞ்சலின் விட்டுந்
தீர மன்னவற் களித்தருள் செல்வநின் னபயம். (௩௰௧)

தக்க மன்னனும் விறல்கொள்வல் லாளனுந தனியே
றெக்கும் வீமனு மவன்றரு முருக்குமாங் கதனும்
பொக்க மின்மண வலாரியு மருந்தவம புரிய
மிக்க நல்வர மருளிய விமலநின் னபயம். (௩௰௨)

தகை மலர்ப்பெரு வனத்துறோன் புறகிருச் சமதன்
கதமி குத்திடு திரிபுரன் கற்பக நாட்டுக்
கதிபன் மற்றையர்க் கருள்செய்து முப்புர மழிப்பான்
விதுமு டித்தவற் குதவுறு மெய்யநின் னபயம. (௩௰௩)

முன்னு ருத்திரா கர்த்தமன் மூவிரு முகத்தோன்
பன்னு சேடன்வே ணளன்பகர் சந்திராங் கதம
னென்னு மின்னவர் விநாயக சதுர்த்திநோன் பெற்ற
வன்னர் வேண்டியாங் கருளிய வனகநின் னபயம். (௩௰௪)

---

டியசோழனென்னும்பெயரிய அரசன் ஆலவாயிறைவனைத்தரிசிக்கும் பேரவாவினனுகி யும் பாண்டிவேந்தன்பகைமைக்கஞ்சியிருத்தலையுணர்ந்து, ஆலவாயிறைவன் ஓரிரவில் சோழவேந்தன்கனவிற்போந்து நீ ஒருத்தனுகி, உருத்திரிந்து தனித்துவந்து நம்மைத் தரிசித்துச்செல்க எனத்திருவாய்மலர்ந்தருளியபடி அன்றிரவில் அவ்வரசன் நெறிக் கொண்டு வையையடகரைவருகையில் அந்நதிப்பிரளயத்ததாகித் தடைபடுத்தலால்வருந்த, அவ்விறைவன் நனவிலும் அவன்பாற்போந்து நதிப்பிரளயத்தைவறப்பித்தும்,கோட்டை வடக்குவாயிலைத்திறப்பித்தும், தம்மைத்தரிசிப்பித்தும், மீண்டுஅவனைவிடுப்பித்தும், அவ்வாயிற்குவிடைக்குறிபொறிப்பித்தும், அருளியது எனக்கொள்க.

§ தொழிலறிவு, கிரியாசத்தியும் ஞானசத்தியும்.

* இரண்டுவீரரை' மதுகைடவரை.

பூங்கணைப்பெரு நெறிப்படு புருசுண்டி முனிவன்
வாரி சுற்றுறு நிலமகண் மகனென வருசேய்
சீர்மி குத்திடு வெண்மதி பெருந்தவஞ் செயல்கண்
டேரு றத்திரு வருள்செய்த விறைவநின் னபயம். (௩௫)

அறுகு வந்தொரு புலைச்சிக்கும் விடைக்குமத் திரிக்கு
முறுவ ரங்கொடுத் தடுத்தபல் லுறுவரர்ச் சிக்கு
மறுகு கொண் § டொரு பார்ப்பனி யுதவுமோ ரறுகுண்
டுறுவ ரந்துலை யறுகினல் கொருவநின் னபயம் (௩௬)

சமிக றுந்தளி ருவந்தொரு வேட்டுவன் றனக்குந்
திமிர நேர்மெய்யோ ரரக்கற்கு மருள் செய்தோர் சமிவா
யமைய வர்ச்சித்த மாயனுக் கிரணிய னுகி
குமையச் செய்திற மருள்செய்த குமரநின் னபயம். (௩௭)

இலகு வன்னிமந் தாரையாந் தருக்கணீற் றிருந்தும்
புலவர் மாதரார் வன்னியந் தளிர்கொடு பூசை
நிலைபெ றச்செய வருள்செய்தும் விடருகர் நீர்மை
யுலைய வன்னியான் மாய்த்துமா னொருவநின் னபயம். (௩௮)

பொருவில் சங்கட சதுர்த்திநோன் பாலரும் புதல்வன்
இருத வீரியன் சூரசே னப்பெயர் இளத்து
மொருமு னுமொரடுன் னுலகநற் கசியபன் முதலோர்
பெருகு நல்வரம் பெறவருள் பெருமநின் னபயம். (௩௯)

கணம றத்தலும் பு[illegible]திடாக் கபிலனுக் கிடரை
யணுகு வித்திடு கணனென னுமன்னனை யழித்து
வணமி குத்திடு மாமுகங் கொண்டுசிந் தூரப்
பணிவிறுட்டனை யட்டிடு பரமநின் னபயம். (௪0)

விக்கி னம்புரி விக்கினன் றருக்கொழித தொரு † நாற்
றிக்கு வத்திரன் மறைகவர் தகுவனைச் செகுப்பித்
தக்க மூன்றுடைச் சிந்துமன் னுவினை யருந்தி
மிக்க வெற்றிகொண் மெய்யர்தம் மெய்யநின் னபயம். (௪௧)

---

§ ஒருபார்ப்பனி, திரிசிரசென்னும் ஒருபார்ப்பான் மனைவியான, விரோசனையாம்.

† நாற்றிக்குவத்திரன் மறை கவர்தகுவன், நான்குமுகங்களையுடையபிரமதேவ
னி [illegible] பூசை [illegible] வேதாகமாதிகளை அபகரித்த கமலனெனும் அசு

இணையி லாமனைக் கயமுகா சுரனையெவ் வுயிர்க்கும்
பிணிசெய் * யந்தக ரிருவரைத் தாராசதப் பெயர்கொ
டணிவில் வெய்யனைச் சமரிடைச் சாய்த்துல களித்த
கணித மற்றிடு கருணைமா வடிவநின் னபயம். (௪௨)

புனித பங்கயன் புதல்வனு மரீசிபாற் புதல்வி
யெனவி மாசல மகளாவல் லபையெனு நாமம்
பனவ ளித்தர னனைவந்து மணந்திடப் பாக
மனவ மைத்தருள் வல்லபை கணேசநின் னபயம். (௪௩)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

புவனமத் தனையு மாக்கப் § போதபோ தகவில் லோனாய்
புவனமத் தனையுங் காக்கப் * பூவைபூ வையின்மெய் யோனாய்
புவனமத் தனையும் போக்கப் * பூதிபூ தியமுள் ளோனாய்
புவனமத் தனையும் வேறாப் பொருந்தவாழ் விமல போற்றி. (௪௪)

அணுவனைத் தினும்வி யாபித் * தத்தனா யாகி நின்று
யணுவனைத் தினுந்தோ யாதோ ரரியநுண் பொருளாய் நின்று
யணுவனைத் திலுஞ்சேர் பாச மறுத்தருள் குருவாய் நின்று
யணுவனைத் தினுமுள் ளன்பி லகன்றிடா வமுதே போற்றி. (௪௫)

முத்தொழில் களைநி கழ்த்த மூவர்க்கு மருளா நிற்பாய்
முத்தொழின் முடிந்த நாளின் மூவர்க்கு மேலா நிற்பாய்
முத்தொழி லினருந் தம்முண் முறைபிறழ்ந் துதிப்ப வைப்பாய்
முத்தொழி லையுநின் னன்பின் முதிர்பவர்க் கருள்வாய் போற்றி. (௪௬)

உருவெலா நோக்கு தோறுன் னுருவென்றே யிதய முன்னு
மருவிவாய் துதிக்குஞ் சென்னி வணங்குமெய் முகம னன்று
லொருவமண் டலபூ சைக்கிங் குறுபுனற் பெருக்கா னூறு
தருமதோ வென்று தாழ்ந்தேன் தாபந்தீர்த் தருளல் வேண்டும். (௪௭)

---

* அந்தக ரிருவர், தேவாந்தகன், நராந்தகனென்னு மிரண்டசுரன்.

§ போதபோதகவில்லோனாய், பூவினுள்ளிடத்தைவீடாகவுடையபிரமதேவராகி

* பூவைபூவையின்மெய்யோனாய், காயாம்பூப்போலுந்திருமேனியில், இலக்குமியைவைத்தவிஷ்ணு தேவராகி.

* பூதிபூதியமுள்ளோனாய், திருமேனிமுற்றுந்திருவெண்ணீறிலங்கும் உருத்திரமூர்த்தியாகி.

* அத்தனாயாகி, பிதாவுமாதாவுமாகி.

அடியவர் குறைவு தீர்த்தாண் டருண்மத மழைபெய் தற்கே
நெடியதாம் புடைக்கை கொண்ட நின்மலா வசந்த நாட்செய்
கடிவிழா° முடிவிழாவாக் களிகொண்மண் டலபூ சைக்கு
வடியநீர் நதியிற் பண்டை வழக்கத்தி னருளல் வேண்டும். [௪௮]

எனவடி யவரெ லாஞ்சேர்ந் தெந்தைபே ரருணி னைந்து
கனியுள மயர்ந் * தெட் டங்க நானிலம் படியக் கண்கள்
புனல்வடி தாவி றைஞ்சப் புனல்வடி திக்கண் ணூற்றான்
றனுமுத லெனைத்து நல்குந் தந்திமா முகத்து வள்ளல். [௪௯]

வருநன்னீர் தொன்னீ ராக மற்றைநாண் மதிரா ளாகக்
கருதுவா ரெவரு மீது கணபதி நமதன் போர்வா
னொருவிளை யாடல் செய்த தன்றிமற் றொன்றின் றென்னப்
பருகினார் களிம துப்பின் படர்ந்துளா ரெந்தை கோயில். [௫௰]

முத்திசா தனர்வெண் ணீற்றார் முழுமெய்யர் முனிவர் யோகர்
சித்திகை வந்தோ ரூழாற் சித்தியெட் டடையுமுற் றூனர்
தத்தமுண் ணிலைதி றம்பாத் தகவுசால் சீவ முத்தர்
பத்திசெய் முதியோ ரீட்டம் பலபடக் குழுமி யார்த்த. [௫௧]

மூவகைப் பசுக்கட் காப்ப மூவகை வடிவு கொள்ளுந்
தேவதே வமருங் கோயிற் றிருமெழுக் கிடுவோர் தூர்ப்போர்
பூவின்மா லைகள்ச மைப்போர் காவணம் புதுக்கு வோர் * நாற்
பாவலோ ராதி மெய்நாத் தொண்டர்பற் பலர்மி டைந்தார். [௫௨]

ஈசனார் திருத்தா ணுளு மிதயவா லயத்த மைத்துப்
பூசனை புரிகிற் போனாம் புலக்குறும் பெறிந்து பொய்தீர்
நேசமீ சன்பால் வைத்து நிகழ்மறைச் செபதி யான
மூசிய மனத்துத் தொண்டர் முறைமுறை மருவினாரால். [௫௩]

அந்தண ரரையர் நாய்க ரரியவே ளாளர் மற்றோர்
தந்தமா சாரத் தில்லக் கிழத்தியர் மகார்தம் மோடும்
வந்துவந் தனைசெய் தியாண்டும வதிந்தனர் துளைதோ றந்தி
யுந்துகஞ் சனைபாட் டாலைந் தொலிசெய்வோர் தொகையு மார்ந்த [௫௪]

---

* எட்டங்கநானிலம்படியவிறைஞ்சல், தலை, மோவாய், செவியிரண்டு, கையிரண்டு, காலிரண்டு, இவ் எட்டு அவயவங்களும் பூமியிற்படும்படி நமஸ்கரித்தல்.

* நாற்பாவலோர், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், எனப்படும் ஸ்தோத்திரக் கவிவல்லோர்.

ம்மைமதம் பொழித டக்கை மாமுகப் பெருமான் கோயி
லழகினுக் கழகு செய்தாங் காம்பைபைங் கமுகு தன்னல்
குழைமலர்த் தொடைகு யின்றா கோதில்பஃ தீபந் தூபந்
தழைதா விட்டார் கோலஞ் சாந்தஞ்சுண் ணத்த மைத்தார். [ருரு]

மண்டல பூசைக் கின்னும் வேண்டுவ வமைப டச்சேர்த்
தெண்டகு சுமுக மூர்த்திக் கியற்றபி டேக வர்க்கந்
தண்டளிர் புனைபட் டாடை யாதிமீ சாத்து வர்க்கம்
வெண்டா ளங்கோ மேத வடமுதல் வேய்பூண் வர்க்கம். [ருசு]

தூத்தள வனங்கள் தூர்வைத் தொடைமுதன் மிலையும் வாக்கம்
பாத்தடு ததிகு ளம்பான் முதல்விராம் பதத்தின் வர்க்க
மாத்தில புஞ்சங் கஞ்ச மாதிபண் ணியத்து வர்க்கந்
தேத்துளி கதலி மாவா சினிமுதற் கனியின் வர்க்கம். [ருஎ]

ஏனவு மமைத்துக் கும்பத் தாபன மியற்று வித்துத்
தூநறுந் * தயிலக் காப்புத் தொடங்கியா ரக்கு ழம்பீ
றுனமட் டித்துக் கும்ப மாட்டியொற் றுடை சாத்தி
வானநீ றாதி யாவும் வனைவித்து நைவே தித்து [ருஅ]

தூபதீ பமும்வி ளக்கிச் § சோடச முகம னாற்றித்
‡ தாபதர் மறையுஞ் $ சைவா சாரியர் முறையும் பண்ணே
டேயபின் முறைது திப்ப வியமுழங் கறைக திப்ப
§ மாபரன் புராண மோது மரபொழுக் கியல்வி திப்ப. [ருகூ]

---

*தயிலக்காப்புத்தொடங்கியாரக்குழம்பீறு[க]தயிலக்காப்பு[உ]மாக்காப்பு(௩)நெல்லிக்காப்பு[ச]மஞ்சட்காப்பு(ரு)பஞ்சகவ்வியம்(சு)ரசபஞ்சாமிர்தம்.[எ]பலபஞ்சாமிர்தம்[அ]பால்(கூ)தயிர்(ய)நெய்[யக]தேன்[யஉ]கருப்பஞ்சாறு[ய௩]எலுமிச்சை, நாரத்தை,தமரத்தை,குளஞ்சி,மாதுளை,இவ்வைந்தின்பழச்சாறாகியபலோதகம்[யச]இளநீர்(யரு) அன்னம்[யசு]சகஸ்திரத்தாரை[யஎ]சங்கம்(யஅ)காண்டாமிருகக்கொம்பு[யகூ]விபூதி[உய]வில்வக்குழம்பு(உக)சந்தனம்ஆம்,நெய்அபிடேகத்துக்குப்பின்இளவேன்னீர்அபிடேகஞ்செய்தலும், ஓர் முறையாம், ரசபஞ்சாமிர்தம்என்பது,பால்,தயிர்,நெய்,தேன்,சர்க்கரை இவ்வைந்தும் விதிப்படி கூட்டியதாம். பலபஞ்சாமிர்தம்,என்பது, ரசபஞ்சாமிர்தத்துடன் வாழைப்பழம் மாம்பழம்,பலாப்பழம்,இம்மூன்றுங்கூடச் சேர்ப்பதாம்.

§ "சோடசமுகமன்" ஆவன – ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், ஆராத்திரிகை, ஜெபசமர்ப்பணை, என்னப்படும் பதினறுவகை உபசாரங்களாம். இவற்றுள் ஆராத்திரிகையின் அங்கங்கள்;

இரசதீபம், நாகதீபம், இடபதீபம், அன்னதீபம், புருடாமிருகதீபம், சிங்கதீபம், கூர்மதீபம், நவமுகதீபம், சத்தமுகதீபம், பஞ்சமுகதீபம், திரிமுகதீபம, ஏகமுகதீபம், கும்பதீபம், பருவததீபம், நட்சத்திரதீபம், கர்ப்பூரதீபம், ஆக இப்பதினாறு வகை ஆராதனத்துடன், குடை, சுருட்டி, கண்ணாடி, சாமரம், விசிறியாகிய பஞ்சோபசாரங்களுஞ் சேர்த்து இருபத்தொரு வகையாம்.

‡"நாபதர்மறையும்". கோத்திர சூத்திரங்களிற்றவறாது ஷட்கருமங்களில் வழுவாதொழுகுஞ் சிரத்தையாளராகிய அந்தணர்கள் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், என்னும் நான்கு வேதங்களையும், சந்தஸ்முறைமை தெரிந்து குழுமிப்பாராயணத்தாற்றுதித்தல்.

§ "சைவாசாரியர் முறைமையும் பண்ணோடேபயின்முறை" வைதிக சைவசமையா சாரியர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரால் அருளிச்செய்து மூன்று திருமுறையாகவும், திருநாவுக்கரசுநாயனாரால் அருளிச்செய்து மூன்று திருமுறையாகவும், சுந்தரமூர்த்தி நாயனாரால் அருளிச்செய்து ஒரு திருமுறையாகவும், திருநாரையூர் பொல்லாப்பிள்ளையார் அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப்பட்டிருக்கின்ற எழுதிருமுறைகளாகிய தேவாரமென்னுந்தமிழ் மறைப்பதிகங்களையும், புறநீர்மை, காந்தாரம், பியந்தைக்காந்தாரம், கௌசிகம், இந்தளம், தக்கேசி, சாதாரி, நட்டபாடை, நட்டராகம், பழம்பஞ்சுரம் காந்தாரபஞ்சமம், பஞ்சமம், என்னும், பகற்பண் (௰௨) தக்கராகம், பழந்தக்கராகம், சீகாமரம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், வியாழக்குறிஞ்சி, மேகராககுறிஞ்சி, அந்தாளிகுறிஞ்சி, குறிஞ்சி, என்னும் இராப்பண் [௮] செவ்வழி, செந்துருத்தி, திருத்தாண்டகம், என்னும்பொதுப் பண் (௩) இவற்றால் அவ்வக் காலங்களின் முறைப்படிக்கும், மாணிக்கவாசக சுவாமிகளால் அருளிச்செய்து எட்டாந் திருமுறையாக வகுக்கப்பட்டிருக்கின்ற "திருவாசகம்" திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் நாயன் மார் ஒன்பதின் மரால் அருளிச்செய்து ஒன்பதாந் திருமுறையாக வகுக்கப்பட்டிருக்கின்ற "திருவிசைப்பா" "திருப்பல்லாண்டு" சேக்கிழார் நாயனாரால் அருளிச்செய்து பன்னிரண்டாந் திருமுறையாக வகுக்கப்பட்டிருக்கின்ற பெரிய புராணம், அல்லது மற்றைய சிவபுராணங்கள், இவற்றையும், அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த திருப்புகழையும் அவ்வப்பண்களால் அமையவும் மூர்த்த சன்னிதான முறைநோக்கி ஓதுதலாம்.

§ "மாபரன் புராண மோது மரபொழுகியல்" என்பது பரமசரித்திரமென்னும், புராண படனம் பண்ணுவிக்குங்காலை திருக்கோயில், மடம், நதிக்கரை முதலியவற்றில் புராணசாலை வகுத்து அணிசெய்வித்து சுதினத்தில் உத்தம சதுர் வருணத்து நித்தோராய், அங்கஹீனம், தீயொழுக்க மில்லோராய் இலக்கிய, இலக்கண, சிவாகமத்தேர்ச்சி, சிவபூசை பஸ்பமருத்திரா க்ஷதாரணம் நீங்காத சிரத்தை யாளராய் உள்ளோனைப் பௌராணிகராக வரித்து ஆசாரத்துடன் சுத்த பீடத்தில் புராணத்தை வைத்து அருக்கிய நைவேத்திய தூபதீபமுதலிய வற்றாற் பூசித்துக் கீழ்திசை நோக்கி ஆசனத்திருந்து அவருக்கு அடுத்த தரமுள்ள சிடர்களைக்கொண்டு மூலம் வாசிப்பித்து அவ்விராகத்திலே அவரும் அருத்தஞ்சொல்லும்படி வேண்டுதல்செய்து, ஆசனத்திலிருந்தும்

நாரணன் முதற்றே வானோர் நணுகிவான் மலர்க டூவ
வாரண முகத்தோ மென்ன வாய்மனு வகத்தோ வன்பர்
சீரண வுளகத்தோ புத்தி சித்திமார் வளத்தோ யாண்டும்
பூரண னெனத்தோய் வுற்ற புண்ணிய னுவப்பச் செய் தார். [௩௰]

கத்துசீர் வசந்தச் சாறு நடத்துமண் டலபூ சைக்கப்
§ பத்தருக் கருள்வெள் ளத்தாற் பாலிப்பான் பாங்கர் தற்சூழ்
புத்தெழிற் பொருளை நேர்த்தொண் பூதியங் கம்போர்ப் பாரஞ்
சுத்தநீ ரனம ருந்தந் தொடைசெய்பல் பொருள்சொல் லின்ன. [௩௧]

---

காலை நீட்டியும், உடம்பு போர்த்தும், தாம்பூலம் தரித்தும், பரிகசித்தும், துயின்றும், இடையே பிரிந்தும், நிந்தித்தும், பிறிதொன்று வசனித்தும், இருப்பாரை அப்புறப்படுத்திச் சபாரஞ்சிதப்பட உண்மைப்பொருள் உரைத்தலை, நல்லொழுக்கங்களைத் தெரிதலினும் நித்தியாநித்தியங்களைப் பகுத்தறிதலினும் விருப்பமுள்ள அனைவருங் கேட்டுணர்ந்துய்யும்படி செய்வித்தலாம்.

§ பத்தருக் கருள்வெள்ளத்தாற் பாலிப்பான் பாங்கர் தற்சூழ், புத்தெழிற் பொருளை நேர்த்தொண் பூதியங்கம் போர்ப்பாரஞ், சுத்தநீரனமருந்தந் தொடைசெய்பல் பொருள்சொல்லின்ன, என்பவற்றில் பொருளைநதி ரூப எழுந்தருளியிருக்கும் கணபதி மூர்த்தியின்மேற் செல்லுங்கால் (க) பூதியங்கம் போர்ப்பு (உ) ஆரம் (௩) சுத்தநீர் [௪] அன்னம் [௫] அருந்தம் [௬] தொடை [௭] செய்பல்பொருள் [௮] சொல் என எண்வகையாகப் பகுத்து இவற்றுள் பூதியங்கம் போர்ப்பு என்பது, பரம சந்நிதானத்தில் மஹைசொரியம் என்னும் திருவெண்ணீற்றுப் பிரசாதத்தைக் கையேற்றவுடன், என்றும் பிறவிக்கு ஹேதுவான ஆணவாதிமல நோயை நீற்றுந் திவ்விய பஸ்பமாகப் பரிசிக்கும்பொருட்டுத் தமக்கு கற்ப, உபகற்ப, அநுகற்ப, முக்கிய, அமுக்கிய, சாமானியம் என்னும் விபூதிகளை தருதற்குரிய வித்தாக விசுவாசித்து சென்னிமுதலிய விதித்த அவயவங்களிற் றரித்துக்கொள்ளச்செய்தல். ஆரம் என்பது, அபிடேகித்த சந்தனக்குளம்புப்பிரசாதத்தைக் கையேற்றவுடன் என்றும் சரீரம், உஷ்ணதுர்க்கந்தப்படவொட்டாத திரவியமாகத் திமிர்ந்துகொள்ளும் பொருட்டுத் தமக்குச் சீதசுகந்த வஸ்துக்களைத் தருதற்குரிய வித்தாகப்பாவித்துத் திலகமிட்டுப் பூசிக்கொள்ளச்செய்தல். சுத்தநீர் என்பது, அபிடேகித்த தீர்த்தப் பிரசாதத்தைக் கையேற்றவுடன், என்றும் அகக்கரணங்களையும் புறக்கரணங்களையும் பரிசுத்தப்படுத்தும் அமிர்தமாகக்கொள்ளும்பொருட்டுத் தமக்குப் புனிதரசவர்க்கங்களைத் தருதற்குரிய வித்தாக அங்கீகரித்து ஆசமித்தும் புரோக்ஷித்துங் கொள்ளச்செய்தல். அன்னம் என்பது நிவேதித்த அன்னப்பிரசாதங்களைக் கையேற்றவுடன், என்றும் பசிப்பிணியை மாற்றும் மருந்தாகப் புசிக்கும்பொருட்டுத் தமக்கு அறுவகைச் சுவையுள்ள நால்வகை யுணவுகளை தருதற்குரிய வித்தாக எண்ணிப் புசித்துக்கொள்ளச்செய்தல். அருந்தம் என்பது, சருக்கரையும் எலுமிச்சங்கனிரசமுஞ் சுத்தோதகத்துடன் கலந்து நிவேதித்த பானகம், என்னும் பிரசாதத்தைக் கையேற்றவுடன், என்றும் தாகப்பிணியைத் தீர்க்கும் மருந்தாகப் பானஞ்செய்யும்பொருட்டுத் தமக்கு தவனநீரைத் தருதற்குரிய வித்தாக நினைத்து அருந்திக்

உவப்புற வுதவி யேனை யுலகவாழ் வுள்ள நல்கிப்
பவந்தடல் கடந்து மேலைப் பாகதிக் கணைசேர்ந் துய்யத்
† தவப்புனை விருப்பர்க்கென்றுந் தண்டைக்கா லினையீய் கின்றான்
சிவப்பெரு மதலை யென்றான் றேவதே வென்ன நின்றான் [கூஉ]

---

கொள்ளச்செய்தல். தொடையென்பது, சாத்தியமாலையும், அருச்சித்த வில்வ முதலி யதுமாகிய நிருமாலியப்பிரசாதத்தைக் கையேற்ற வுடன், என்றும் சரீரத்தை அழகிய தாக்கும்பொருட்டுத் தமக்கு வஸ்திராபரண மலர்மாலைவருக்கங்களை தருதற்குரிய வித் தாகக் கருதிப்புனைந்துகொள்ளச் செய்தல். செய்பல் பொருள் என்பது, மற்றநைவே த்தியமான அபூபமுதலிய பலகாரவருக்கம், நாளிகேரகதலிபலம் முதலிய கனிவர்க்கம், வெள்ளிலைச்சுருள் முதலிய திற்றிவர்க்கமாகிய நானாவிதப் பிரசாதங்களையும் கையேற் றவுடன் என்றும் சரீர சுகபோகானுபவத்திற்கு நுகரும் பொருட்டுத் தமக்குத்தின்ப ண்டங்களைத்தருதற்குரிய வித்தாகச்சிந்தித்து நுகர்ந்து கொள்ளச்செய்சல். சொல் எ ன்பது, பாராயணபடனுதிகளால் பயின்றஸ்தோத்திரங்களைச் செவியேற்றவுடன் என்றும் வருண, ஆச்சிரம, சமைய, ஆசார, பத்தியாதிகளை உணரும்பொருட்டுத் தமக் குக் கல்வி கேள்விகளைத் தருதற்குரிய வித்தாக நம்பி இறைவனை நோக்கி வேண்டுவ னவற்றைப் பிரார்த்தித்து, பிராயச்சித்த, உபசாரவிண்ணப்பம் பண்ணிக்கொள்ளச் செய்தல் எனப் பொருள்படுதல்காண்க. கணபதி மூர்த்தியைச் சூழ்ந்து செல்லும் பொருனையாற்றின் மேற்செல்லுங்கால் (க) பூதியங்கம்போர்ப்பு (உ) ஆரம் [ங] சுத்த நீர் (ச) அன்னமருந்து (ரு) அம்தொடை (சு) செய் (எ) பல்பொருள் (அ) சொல் எ ன எண்வகையாகப்பகுத்து இவற்றுள் பூதியங்கம்போர்ப்பு என்பது, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், என்னும் ஐந்திணைகளுள் பூசாரமுள்ள விடங்களனைத்தினு ம் இடையறாது நீரொழுக்கால் நிறைவித்தல். ஆரம் என்பது, முத்துப்பிறப்பிடம் ப லவற்றுள், மேகம் யானைக்கொம்பு, சிப்பி, சங்கம், மூங்கில், மீன்களாற்றோன்றுட முத் துத்திரளை இருபாலிலும் அலைக்கரங்களால் வீசச்செய்தல். சுத்தநீர் என்பது, உமாபர மேசுரியின் திருககரத்தினின்றும் பிறந்து கங்காநதியின் பிரிவான புண்ணிய தீர்த் தமாய்ச் சிரத்தையுடன் வந்து மூழ்குவோர்களுப் பயன்றருவதுமன்றி, சரீரம், இடம், வஸ்துக்களைச்சுத்தி செய்வித்தல். அன்னமருந்து என்பது, வைத்தியசாஸ்திர முறைப் படி அந்நீரைச்சுத்திசெய்து நீற்றினுல் தாம்பிரபஸ்பமென்னு மருந்தாய்ப்பிணி நீக்கு வி த்தல். அந்தொடை என்பது, திணைதோறும் வியாபித்திருப்பினும் மருதத்திணையையே நீர்வளம்பொருந்திய ஊரகத்ததாக்கி அழகு செய்வித்தல். செய்என்பது, பரல் உவர்மு தலிய வெறு நிலங்களையும், தானியாதி விளைவிக்கும் வயல் நிலமாகததிருத்து வித்தல். பல்பொருள் என்பது, பொதுவில் யாவர்க்கும் யாவைக்கும் உதவிப்பொருள்களாவத ன்றி உத்தம வருணுச்சிரமத்தவர்கசு புனிதஉபகரணமாகும் கந்தமூலபதாதிகள் தே வபூசை, யாகமுதலிய கிரிகைகட்குவேண்டும், சுகந்த புஷ்பபத்திரகொடி திரணசமித் த்து ஓஷதிமுதலியவற்றைவளர்ப்பித்தல். சொல் என்பது பரமநைவேத்தியத்துக்கு ம், மாந்தருணவுகளுக்குஞ் சிரேட்டபதார்த்தமாகிய சம்பாமுதலிய பலவகை நெற்குவி யல்களை உண்டாக்குவித்தல், எனப்பொருள் படுதல்காண்க.

† தவப்புனை விருப்பார்க்கென்றுந் தண்டைக்காலினையீய்கின்றான், என்பதில்

## எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

இன்னபான் மையதாக் கணபதி மூர்த்தி யிணையடித் துணைமுடிக் கொண்டு, முன்னையோ ரருளும் விநாயக புராண முழுவதுஞ் சங்கிர கப்போர் பன்னியாத் தருமைச் சிந்துபூந் துறையிற் பகர்சித்தி யைங்கரன் கோயி றன்னினன் காங்கேற் றினன்சிறி யேன்சான் றவர்முனோ தினர்க்கெய்துந் திருவே. [௬௩]

வாழ்கதொல் வேதம் வைதிக சைவ மாமக மந்தணர் வானம்
வாழ்கசெங் கோன்மன் னவரொடு கோவும வண்பயிர் வர்க்கமெய் யன்பர்
வாழ்கநல் லறமுன் னானாற் பொருளு மல்லலம் புவியுமிக் கோங்க
வாழ்கவிந் நூல்கேட் பவர்பயில் வோர்கண் மற்றைய யாவையு மகிழ்ந்தே [௬௪]

வசந்தோத்சவோ பாசனைப்படல முற்றுப்பெற்றது.

---

ஆகப்படலம் ௰௩க்குத் திருவிருத்தம் ௬௱௨௰௩

ஆக காண்டம் இரண்டுக்குத் திருவிருத்தம் ௲௩௱௬௰

திருச்சிற்றம்பலம்.

மஹாகணபதிதுணை

---

ஜலக்கடல்கடக்க மரக்கலம்பற்றும் மீகாமர்க்குக்களையும், திசைக்காற்றும் ஆகியஇரண்டும் அவசியம் வேண்டுதல்போல, பவககடல்கடக்கத் தவப்புணைபற்றும் அன்பர்களு வேதச்சிலம்பணிந்த ஞானபாத கிரியாபாத சொரூபமாகிய இரண்டுதிருவடிகளும் அவசியம்வேண்டுதலின் அவற்றை அருளசெய்கினரன் எனப்பொருளபட்டு நிற்றல் காண்க.

விநாயகபுராணத்தின் விரிந்தயாப்பைச்சுருக்கியியாப்பது அமைத்த "விநாயகபுராணசங்கிரகம்" எனப்பெயரிட்டிருப்பதால அக்கதாசாரத்தின் வாயில்பற்றி அர்த்தசாரமெளிது புலப்படுமெனக்கருதிப் படலசாரசங்கிரகத்தையும் இங்ஙனங் காட்டவேண்டியதாயிற்று.

[அஃதுவருமாறு]

உபாசனாகாண்டத்தில்

## வியாசருபாசனைப்படல சாரசங்கிரகம்

வியாசமுனிவரென்பவர் ஆதியான ஏகவேதத்தை துவாபரயுகத்தில் நான்கு பாகப்படுத்தியருளியவர், அவர் அவ்வாறே விரிவானபுராணங்களையும்பதினெண்டொகைப்படுத்தத் தொடங்கியகாலை அதற்குவேண்டும் அறிவுடைமைக்கு விக்கினமுண்டாகி விபரீதத்தைத்தொலைக்கும் வழியுமறியாதவராய்ப் பிரமதேவர் பாற்சென்றறிவிக்க அவர் ஞானநோக்கால் இவ்விக்கினம் விநாயகமூர்த்தியை முன்வழுத்தாக குறையால் சம்பவித்ததென்றறிந்து அவ்விக்கினத்தை நிவர்த்திக்கும் வழியையும் விநாயகமூர்த்தி மான்மியங்களை [illegible] தக்கேட்டு அவ்வாறே வழிபாடாற்றி விநாயகமூர்த்தியின அருட்பிரசாதத்தால் அவ்விக்கின நிவர்த்திபெற்றுப் பதினெண் வகைப்பட முதன்மைப் புராணங்களையும் உபபுராணங்களையும் இயற்றப்பெற்றதை விரித்துக் கூறியதாம்

## உ சோமகாந்தனுபாசனைப்படல சாரசங்கிரகம்.

சோமகாந்தன் என்பவன் சௌராட்டிரதேசத்து அரசன் இவன் ராஜசம்பத்தினனுபவித்திருக்குங் காலை, கண்டோர் அருவருக்கத்தக்க குட்டநோயணுகியதால் அரசியல் முதலியவற்றில் வெறுப்புற்று இராச்சிய பாரத்தை ஏகணடனென்னுந் தன் மகன் மேலிறக்கி பரிவாரங்க[illegible] தன் மனைவி அமைச்சர் இருவருடனும் வனம்புகுந்து பிருகு முனிவரைக் காணப்பெற்றுக் குறையிரந்தான அம்முனிவர் ஞானநோக்கால் [illegible] ஜென்ம [illegible]பல்புர, வியாதிவரலாறும அறிந்து அரசனை நோக்கி நீ முற்ப வத்தில் [illegible] கொலைமுதலிய பாவஞ்செய்தற கஞ்சாதவன் ஆயினும் [illegible] கணேசர் ஆலயம் ஜீர்ணோத்தாரணஞ்செய்து உற்சவாதிகள் முடிக்க [illegible] நாள் கழிந்தபின் [illegible] விடுக்கப்பட்ட அவனை உன் [illegible] பல [illegible] விளைவியசில் தீயோனையொப்ப [illegible] பின்னும் அனுபவிக்கப்படவேண்டிஞ்ய், அவ்வாறநுபவிக்க [illegible] திலு முன இராஜசம்பத்தினையும் பின் குட்டநோயாளியுமாயினாய், என்று உணர்த்தினார் கேட்ட அரசன் அதில் ஐயமுற்ற நிமித்தம் அங்நோய் முன்னிலும் கொடிய வருத்தஞ்செய்பக்கூலப்பட்டது, அது பொறு அரசன் பின்பு மிகவுங் குறையிரப்ப முனிவர் இரங்கிச்செய்தத்தற்கால சிகிற்சையால் பாவசேஷமுங்கொண்ட ஐயமும் நீங்கப்பெற்றான். உடனே அம்முனிவர் அரசனுக்குக் கணேசமூர்த்தியின் மான்மியத்தை முற்றுணர்த்த அதை விசுவாசித்து ஒருவருஷ பாராயணஞ்செய்த புண்ணியத்தால் அவனுக்கு ஜீவன்முத்தபக்குவம்வரகணேசர் அருளால்

தேவவிமானம் போந்து அழைக்கத்தானும் மற்றைய மூவரும் ஆரோகணித்து அந்நெறியே செல்லுகையில் தன் தேயத்திற் றங்கிக் கணேச உபாசனையிற் சிறந்து அருட்சாட்சி செய்ததன் புதல்வனையும் நகரத்தவரையும் பரிசுத்தராக்கி விமானத்தேற்றி கணேசலோகஞ்சேர்ந்து தான் சாரூபபதவியடைய மற்றயோர் சாமீபபதவியுற்றனர் என்பதை விரித்துக் கூறியதாம்

## ௩ மூவருபாசனைப்படல சாரசங்கிரகம்.

திரிமூர்த்திகளெனனும் பிரமவிஷ்ணுருத்திரர் ஆகிய மூவரும் ஓர் கற்பத்தில் தங்களைத் தோன்றச்செய்த வக்கிரதுண்டாவதார கணேசமூர்த்தியை நோக்கி நோன்பியற்ற அவர் முறையே சிருட்டி, திதி, சங்காரம் என்னும் முத்தொழில்களையும் அவர்களுக்கு அநுக்கிரகித்ததும், சிருட்டிப் பினியல் பறியாத பிரமதேவருக்கு அதையறிவிக்க விசுவரூபங்கொண்டு தமது திருவயிற்றுக்குள் சமஸ்த ஜெகரூபமுங்காட்டியதும், தம்மை முன்னிட்டு சிருட்டிசெய்யாமையால் விக்கினப்பட்ட பிரமதேவருக்கு அதை நீக்கி சித்திபுத்தியென்னும் தமது சத்திகளால் விளங்கச்செய்து அவன் பால் அவர்களை புத்திரிபாவனையாக வளரச்செய்ததும், விரித்துக்கூறியதாம்

## ௪ திருமணப்படல சாரசங்கிரகம்

கணேசமூர்த்தி முற்படலத்திற் கண்டபடி பிரமதேவன் பால்மகளிராய் வளர்ந்த தமது ஞானம், கிரிகை, யாகிய சித்திபுத்தி என்னும் சத்திமார்களையும் அவனால் அளிக்கப்பெற்று உயிர் வருக்கங்களுக்கு தனுகரணபுவன போகங்களை யூட்டுமாறு விளக்கும் பாவனையாகத் திருமணஞ்செய்தருளியதை விரித்துக்கூறியதாம்.

## ௫ விஷ்ணு உபாசனைப்படலசாரசங்கிரகம்

விஷ்ணுபகவான் தங்காதுற்றெழுந்த மது, கயிடவனென்னு மிரண்டு அசுரரை வெல்ல விநாயகமூர்த்தியினுடைய சடாக்ஷர மந்திரத்தைப் பரமசிவனால் உபதேசிக்கப்பெற்றுத் தவமியற்றி வரம்பெற்று அவர்களை வென்றதும், அவர் பரசுராமனவதாரஞ்செய்தகாலத்தும் விநாயகமூர்த்தியைப் பூசித்து வரம் வாங்கி பகைமன்னர் குலங்களை மாய்த்து அவர்கள் பூமியை அந்தணர்களுக்கு வழங்கியதும், விரித்துக் கூறியதாம்.

## ௬ வீமனுபாசனைப்படலசாரசங்கிரகம்.

வீமனென்பவன் விதற்பதேயத்து அரசன் அவன் புத்திரப்பேறில்லாமையால் வனம்புகுந்து விசுவாமித்திரரையடுத்து முன் கணேசமூர்த்திக் கன்புசெய்துவந்ததன் மூதாதையாகிய தக்க மகாராஜன் வரலாற்றையும் அவன் முற்பிறப்பில் கணேசமூர்த்தியைப் பூசித்த வல்லாளனென்னும் ஒரு புத்திரனைப் பெற்றிருந்ததால் அவனுக்குச் சம்பவித்தவற்றையும் அவரால் அறிந்து கணேசமூர்த்தியை உபாசித்து உருக்குமாங்கதனென்னும் ஒரு சற்புத்திரனைப்பெற்று வாழ்ந்ததை விரித்துக் கூறியதாம்.

## ௭ உருக்குமாங்கதனுபாசனைப்படல சாரசங்கிரகம்.

உருக்குமாங்கதன் என்பவன் முற்கூறிய வீமராசன் மகனாகிய விதற்பதேயத்து அரசன் இவனது சவுந்தரியத்தைக்கண்ட கவிமுனிவரது மனைவி முகுந்தை என்ப

வன் மயங்கித் தன்னைப் புணர விரும்பியதை மறுத்தலின் அவளது சாபத்தால் தொழுநோயுற்று நாரதமுனிவரால் காரணம் பெற்று முறையிட அவர் அவ்வியாதியின் வரலாறு தெரிந்து அவ்வரசனை நோக்கி, கௌதமமுனிவரது பத்தினியாகிய அகலிகையைச் சோரமாய்த் தழுவிய இந்திரனுக்குப்பதிவிரதையின் ஒரு யோனியை இச்சித்த பாவத்தால் உடல் முற்றும் பலயோனியாகும்படி அம்முனிவரிட்ட சாபநிமித்தம் அவன் அவ்வாறாகி வெள்கி மறைந்திருத்தல்கண்டு தேவர்கள் அம்முனிவரைக் குறையிரந்துதங்கள் அரசனுக்கு அவ்யோனிமுற்றும் கண்களாம்படி மாற்றுவித்ததின்பேரில் அவன் புனிதனாய் கதம்பமாவனத்திற்கு வந்து அங்குள்ள கணேசகுண்டத்தின் மூழ்கிச் சிந்தாமணிப்பெயர் விநாயகமூர்த்தியை அங்குப்பிரதிட்டை செய்து பூசித்து வரம்பெற்றிருக்கின்றானாகலால் நீயும் அவ்விடத்திற்குச்சென்று அக் கணேசகுண்டத்தில் மூழ்கி அவ்விநாயக மூர்த்தியைத் தெரிசிக்கின், அந்நோய் நீங்கப்பெறுவாயென்று உபதேசித்தபடி அவ்வாறியற்றித்தன் பெற்றோர் முதலியரோடு முத்தியடைந்தனன் என்பதை விரித்துக்கூறியதாம்.

## ௮ கிருச்சமதனு பாசனைப்படல சாரசங்கிரகம்.

கிருச்சமதன் என்பவன் முற்கூறிய முகுந்தை என்பவளை உருக்குமாங்கதன் வடிவங்கொண்டு சோரத்தாற்றழுவிய இந்திரனுக்கு அவள் பால் உற்பவித்துக் கவிமுனிவர் புத்திரனென்று பெயர்கொண்டிருந்தவனும், அவன் வசிட்டர்முதலிய முனிவர்களோடு கலைவாதஞ்செய்தகாலத்தில் தன்னை முனிபுதல்வனன்றென்று அவர்களுரைத்த இழிவுவார்த்தையைக் கேள்வியுற்று தாயால் நிச்சயந்தெரிந்து அவளுக்குச்சாபங்கொடுத்துக் கணேசனை உள்ளன்போடு பூசித்துச் சாபானுக்கிரகஞ்செய்யவும் அவிமுத்துக்கு உபாத்தியாகவும் நல்லவரங்களைப் பெற்றதும் பின்பு அவன் நிஷ்டையாளனாய் வாழ்ந்திருக்கையில் திரிபுரனெனப்படுகிற பலியென்னும் புதல்வனை அங்கிட்டையிற்றோன்றச்செய்ததும் விரித்துக் கூறியதாம்.

## ௯ விமலநுபாசனைப்படல சாரசங்கிரகம்.

சிவபிரான்முற்கூறிய கிருச்சமத முனிவரது புத்திரனாய்க் கணேச மூர்த்தியை ஆராதித்து அவர் வரப்பிரசாதத்தால் பொன், வெள்ளி, இரும்பு என்னும் மும்மதில்களைப்பெற்றுத் தேவர்களுக்கு இடுக்கணுற்றிய பலியென்னுந் திரிபுரனை அப்புரங்களோடு தீவாய்ப்படுத்தும்பொருட்டு விநாயகக்கடவுளிடத்து வரம்பெற்றதும், அதற்குக்கைம்மாறாக அவ்விமலர் யாவரும் உம்மைவணங்கி யியற்றாத கன்மம் பலவித விக்கினங்கட்கு உட்படுகவென விநாயக மூர்த்திக்கு வரங்கொடுத்ததும் விரித்துக் கூறியதாம்.

## ௰ சதுர்த்திவிரதப்படல சாரசங்கிரகம்.

உமாதேவியார் தன்னைச்சிவபிரான்கங்கைக்குமுன் மணஞ்செய்யும்பொருட்டுஇமயமலை அரசனாகியதன் பிதாவால்கணபதிக்குரிய சதுர்த்தி விரதமகிமையைக் கேள்வியுற்று சிங்கமதிசுக்கிலபக்கம் சதுர்த்தி த்திதிமுதல் கன்னிமதி சுக்கிலபக்கம் சதுர்த்தித்திதிவரை ஊண்துயிலொழித்து இவ்விரதம் இயற்றிக்கணேசமூர்த்தி வரப்பிரசாதத்தால் அவ்வாறு மணக்கப்பெற்றதும்,இவ்விரதத்தை சந்திரான்கன்முதலியோர் நோற்றுக்காமித்தவரம்பெற்றதும் விரித்துக்கூறியதாம்.

### ௰௩ சங்கடசதுர்த்தி விரதப்படல சாரசங்கிரகம்.

விநாயகமூர்த்திக்கு உவந்தசங்கட சதுர்த்திவிரதமென்பது மாசிமாதம் கிருஷ்ணபக்கத்துச் சதுர்த்தித்திதியும் மங்கலவாரமும் சந்திரோதயமு மொத்தகாலத்தில்* அறுகு,வன்னி,மந்தாரை,யென்னும் இம்மூவகை பத்திரபுஷ்பங்களால் கணபதிமூர்த்தியை அருச்சித்து உபாசிக்கப்படுவதாம் இவ்விரதத்துக்கு மங்கலவாரமும்சந்திரோதயமுங்கூடிய காலமும் அறுகு, வன்னி, மந்தாரஅருச்சனையும் விசேடமானதின் காரணத்தையும் அநுட்டித்தோரது பேற்றையும் பிரமதேவரால் கேள்விப்பட்ட பிதிர்தேவன் சுவடியிலெழுதியதை அவன் குமாரனைகிருதவீரியன் என்னும் அரசன்பெற்று அதிற்கண்டவிதிப்படிஅநுட்டித்து கார்த்தவீரியனென்று காலும் கையு மற்ற ஒருகுரூப புத்திரனைபெற்றதும் அப்புதல்வன் தவமியற்றிக் கணேசர்அருளால் இரண்டுகாலும் ஆயிரங்கையும் பெற்றுக்குரூப நீங்கியதும் இவற்றையெல்லாம் ஒருகாலக்கதப் புருசுண்டி மாமுனிவரைத்தெரிசித்து விமானமேறி அங்கரதெறியாகவரும் இந்திரன் மத்திமதேயத்துக்கு நேரே வருகையில் அத்தேயத்துக்குட்டநோயன் ஒருவன் கண்ணைதிரப்பட்டுத் தன் விமானங் கீழிறங்கினவுடன் தன்னைக்காண வந்த அத்தேசத்து அரசனாகிய சூரசேனமகாராஜனுக்குச் சொல்லி முடிந்த காலை அத்தேசத்தில் இவ்விரதம் அநுட்டித் தோர் புசித்துத் செருவில் வீசிய சேடத்தைப்புசித்த ஒருபுலைச்சிக்கு தேவவிமானம் போந்தழைத்துச் செல்லும்போது அவள் கண்ணோக்கம் இவ்விந்திரனது விமானத்திற்படவே அவ்விமானமும் மேலேயெழுந்தது இதைக்கண்ணுற்ற அசசூரசேன மகாராஜனும் இச்சங்கடசதுர்த்தி விரதம் இயற்றித் தன்னகரத்தோடு முத்தியடைந்ததும் விரித்துக கூறியதாம்.

### (௧௨) காசிபர்முதலியோ ருபாசனைப்படல சாரசங்கிரகம்.

காசிபர் என்னும் முனிவர் அதிதிமுதலிய தம்மனைவியர்பெற்ற தேவராதிசராசரங்கட்கெல்லாம் கணபதி திருமந்திரங்களில் எளிதிற்பயன்றரும் மந்திரோபதேசஞ்செய்ய அவற்றால் உபாசித்த சராசரங்களின்முன் கணபதிமூர்த்தி வெவ்வேறுருககொடு பிரசன்னமாகிவரமருளிய காலை அவருக்குசுமுகர்முதலிய பன்னிரண்டு திருநாமம் இடப்பட்டன என்பதும் அந்நாமங்களின்ஸ்துதி அம்மூர்த்தியை சகஸ்திரநாமங்களாற்றுதித் தற்கொப்பாகும் என்பதும் விரித்துக்கூறியதாம்.

## இலீலாகாண்டத்தில்

### [௧] வக்கிரதுண்டன் றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

வக்கிரதுண்டமூர்த்தி திருவவுதாரத்தின் விபரம் முன் உபாசனா காண்டத்து மூவருபாசனைப்படலத்திற் காட்டியதேயாம்.

### [௨] சிந்தாமணி விநாயகன் றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

கபிலமுனிவரது மார்பணியான சிந்தாமணியை அபகரித்த தமிழ்நாட்டுவேந்தனாகிய கணனென்பவனைச் சங்கரிக்கும்பொருட்டு அம்முனிவரதுமனையில் விநாயகமூர்த்தி திருவவதாரஞ்செய்தருளி அவ்வரசனை சங்கரித்துச் சிந்தாமணியை முனிவற்குகல்க அவர்பிரார்த்தனையால் அதைத்தாம்தரித்து சிந்தாமணிப்பெயரோடு சுமுகர், கபிலர் என்ற மூத்திருநாமம்பெற்றதை விரித்துக்கூறியதாம்.

[௩] கஜானன விநாயகன் றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

பிரமதேவரது கொட்டாவியினின்றும் பத்துச்சிரத்தோடு தோன்றியவனைக் கண்டு கட்டித்தழுவப்பட்டயாரும் நீறாம்வண்ணம் வரப்பெற்றவனை சிந்தூரனென்போன் தன் வரப்பேற்றைச்சோதிக்கப் பிரமதேவரையே தழுவவந்தகாலையில் மகாவிஷ்ணு சூழ்ச்சியால் கயிலைபங்கிரிக்குப்போய் பரமசிவனைத்தழுவுதற்காக நெருங்கி விநாயகக்கடவுளாற்றடைப்பட்டு மீண்டு தேவர்முதலியோருக்கு இடுக்கண் செய்துவந்ததால் அவனைச்செறும்பொருட்டு விநாயகக்கடவுள் உமாதேவியால் ஆவணிமாசம் சுக்கிலபக்கம் சதுர்த்தியில் சொரூபிலாக வடிவத்தரிய் அவதரித்த இறைவன் பூசித்த யானையின் சிரம் ஒன்றைப்பெற்று கஜானனர் என்ற ஒரு நாமமும்பெற்று இறைவன்முதலியோர் செய்த விநாயகசதுர்த்திப்பூசையேற்றதும், பின்பு விசுவரூபங்கொண்டு அச்சிந்தூரனை மாய்த்ததும் விரித்துக்கூறியதாம்.

௪ விக்கினராஜ விநாயகன் றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

எமவதியென்னும் நகரத்து அரசனாகிய அபிநந்தனன் இயற்றியயாகத்தையழிக்கும்பொருட்டு இந்திரன் காலரூபி என்னும் ஒரு கொடியவனை யனுப்ப அவன் அம்மகத்தையும் பின்னும் முனிவர்செய்யும் மகங்களையும் அழிக்கத் தலைப்பட்டான். அதுபொறாது, முனிவர் குழுமி விநாயகமூர்த்தியைத் துதிசெய்ய அவர், அவர்கள் முன்றோன்றி வரேணியன் என்பவன் மனைக்கண் அவதரித்து நுமது விக்கினங்களை மாற்றுவோமென்றருளி அவ்வாறு வரேணியனது மனைவி புட்பகை என்பவள், மகவுயிர்த்த காலத்து அம்மகவை மறைந்து தாமரை யானைமுகம் முதலியவற்றோடு கூடிய மகவாய்க் காணப்பட்டதால் அதுகண்டு பெற்றோர் வெருவி ஒரு மடுக்கரையில் விடுவிக்க அதைப் பராசர முனிவர் கண்டெடுத்து தம்மனைவி வற்சலையினிடம் கொடுக்கப்பட்டு வளரும்போது முன் காந்தருவ அரசனொருவன சவரியென்னும் ஒரு முனிவரால் சாபம்பெற்று பெருச்சாளியாகி உபத்திரவித்தல் கண்டு அதன ஆண்மையையடக்கித் தமக்கு வாகனமாக்கிக்கொண்டதையும், முனிவர்க்கு காலரூபிசெய்யும் விக்கினத்தை மாற்றித் தம்மை உண்மையுடன் வழிபட்ட அவன் பெயர் தம்பெயர்க்குமுன் கூட்டி விக்கினராஜ விநாயகன் என்னும் ஒரு திருநாமங்கொண்டதையும் விரித்துக் கூறியதாம்.

௫ மயூரேசன்றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

பிரமதேவர் ஒருகற்பத்தில் விஷ்ணுதேவரது உந்தியிலுதித்துச் சிவபெருமானிடம் வேதாகம புராணோபதேசம்பெற்றுச் சுவடிகளாக எழுதி அருச்சனை புரிந்துவருங்கால் கமலன் என்னும் ஓர் அசுரன் அருவத்தனாய் வந்து அச்சுவடிகளைக் கவர்ந்து செல்ல அதனால் உலகில் வேதநீதியற்றதை நோக்கிவருந்தி உபாசித்த பிரமதேவர்முன் விநாயகமூர்த்தி தோன்றி வேதாகமாதிகளின் உற்பத்தியையுணர்த்திப் பின்பு சுந்தராச்சிரமமென்னுமோர்வனத்தில் அநேகசீடர்கள் சூழமல்லாலரென்னும் பெயர்கொண்டு தோன்றி அங்குள்ளமுனிவர்களுக்கு வேதாகமாதிகளைப்போதித்ததும், இதனால் முன்போல் வேதநிதி தழைத்தோங்கியதைக்கண்டு பொறாமையுற்றுத்தம்முடன்போர்க்குவந்த கமலாசுரனைச் சங்கரிக்கும் பொருட்டு யாகமியற்றி அதில் உற்பவித்தமயிலில் தாம் ஆரோகணித்து மயூரேசன் என்னுந்திருநாமங்கொண்டு அவ்வசுரனை மாய்த்ததும் விரித்துக்கூறியதாம்.

## பிந்தியமயூரேசன் திருவவதாரப்படல சாரசங்கிரகம்.

மைதலமென்னுந் தேயத்து அரசனான சக்கரபாணி யென்பவனது குமாரன் சிந்து வென்பானுடைய யௌவன தெசையை நோக்கிய சுக்கிராசாரியர் இவன் தேவர்களை வெல்லும் வீரனுவானென்ற உத்தேசத்தால் சிவபெருமானைநோக்கித் தவம்புரியத்தக்க மந்திரோபதேசஞ் செய்ய அவன் அவ்வாறியற்றி விநாயகக்கடவுளை யன்றி மற்றவர்களால் தனக்கு அழிவில்லை யென்பது முதலிய வரமேற்றும் தன் அரசியலைப் பெற்றும் கொடுங்கோன்மை செய்து தேவர்களைச் சிறை யிட்டமையால் அவர்கள் விநாயகக்கடவுளைப்பிரார்த்திக்க அம்மூர்த்தி பிரசன்னராய் நாம் உமாதேவி பாலகனாகி வந்து அச்சிந்துவை மாய்ப்பேமென வாக்கருளி அவ்வாறே திரிசந்தி என்னும் வனத்திற் பரமனுடனமர்ந்தருளிய உமாதேவிபால் வெண்ணிறத்தராய் ஆறுகரத்துடன் அவதரித்து அங்குள்ள முனிவர்கள் கணேசநாமத்தால் வழிபடப்பெற்று விளங்குகையில் சில துன்னிமித்தங் கண்ட சிந்துமன் ஒற்றர் மூலமாய் முற்கூறிய அனைத்தும் அறிந்து இம்மகவு தன்னைக் கொல்லும் அதன்முன் தான் அதனைக்கொல்லவேண்டுமென்ற துராலோசனையால் அநேகமாயைவல்ல அசுரர்களை ஏவ அவர்கள் பற்பல ரூபமெடுத்து வர அவர்களை யெல்லாம் வதைத்தும் இடையில் காசிபமுனிவரது மனைவிகளில் வினதையின் புதல்வர்களாகிய சம்பாதி முதலிய மூவரை கத்துருவின் புதல்வர்களாகிய புயங்கர்கள் பாதாளத்தில் சிறையிட்டிருந்ததைக் கேட்டு, அவ்வினதை வயிற்றுதித்திருந்த முட்டையினின்றும் எழுந்த மயிலில் ஆரோகணித்து அப்புயங்கர்களை யடக்கி தமக்கு ஆபரணமாக்கி முற்கூறிய வினதைபுதல்வர் சிறையை நீக்கியும், மயூரேசனெனத் திருநாமம் பெற்றதும், அப்பால் தம்மோடு ஆடல்செய்யும் முனிவர் சிறுவர் புலிவடிவத்துடன் வந்து வாய்ப்பெய்த அவனைவென்று அவனால் மாண்ட சிறுவர்களை யமனால் வருவித்ததும், பின்பு சேனைகளுடன் ஏவப்பட்ட கமலாசுரனைக் கணேசமூர்த்தி மாய்த்ததைக்கேட்ட சிந்துமன் அவர் வசித்தருளிய திரிசந்தி வனத்தில் சூரியன் முதலியோர் பிரவேசியாவண்ணம் தடைசெய்ய அவர்களைத் தமது முக்கண்களினின்றும் உதிப்பித்ததும், அப்பால் இறைவன் ஆக்கினைப்படி சண்முகமூர்த்தி முதலிய பதினெண் சிவகணங்களைப் படைத்தலைவராகக்கொண்டு மைதலதேயஞ் சென்றருளி நந்தி தேவரைத் தூதனுப்பியும் தேவர்கள் சிறை நீக்காமையால் அச்சிந்துமன்னைச் சங்கரித்துச் சிறைநீக்கியதும், அவன் பிதாவான சக்கரபாணிக்கு அரசியலீய்ந்ததும் விரித்துக்கூறியதாம்.

## ௬ பாலசந்திரன் திருவவதாரப்படல சாரசங்கிரகம்.

பாலசந்திரமூர்த்தி திருவவதாரம் முன் இயமனது புதல்வன் அனலன் என்பவனை விநாயகக்கடவுள் சங்கரித்தபோது தமது திருவுருவிலும்

எல்லா வுயிர்களின் வயிற்றிலும் உண்டான வெப்பத்தை ஆற்றுவிக்க முனிவர்கள் அறுகு கொண்டு வந்து விநாயகமூர்த்தியை அருச்சிக்க அது நிவிர்த்தியாய போது பாலசந்திரன் என்னுந் திருநாமம் பெற்றதாம் அதுமுன் உபாசனு காண்டத்துச் சங்கடசதுர்த்தி விரதப்படலத்தில் விரித்துக் கூறியிருத்தலாற் காண்க.

௭ தூமகேது திருவவதாரப்படல சாரசங்கிரகம்.

மகிவாதினியென்னும் நகரில் அரையர் குலத்திற் றோன்றியமாதவனென்பவனது மனைவி சுமுதை என்பவள் புத்திரப்பேறு வேண்டி விஷ்ணு தேவனை நோக்கித் தவஞ்செய்ய விநாயகக்கடவுள் அவ்விஷ்ணு தேவனைப்போ லுருக்கொண்டு அவள்முன் பிரசன்னராய்த் தாமே குழந்தையாய் வருவதாக வரமருளி அவ்வாறு விஷ்ணுதேவனை அவள் வயிற்றுட் கருப்பமெய்தச் செய்ததும, அக்கருவி லுதிக்கும் மகவானது தன்னை வதைசெய்புமென்று ஆகாயவாணியாற் கேள்வியுற்ற அந்நகர்க்கு அரசனுயிருந்த தூமன் என்னும் ஓர் அரசன் அம்மகவைப் பிறந்தபோதே கொல்லுவிக்க முயற்சித்தகாலத்து விநாயகக் கடவுள் தோன்றித் திருவாயினின்றும் புகையெழச்செய்து அவ் அசுரன்முதலியோரை வதைத்துப்புகையுயிர்த்தகாரணத்தால் தூமகேது, என்னுந் திருநாமம் பெற்றதும் விரித்துக் கூறியதாம்.

அ கணேசன் திருவ்வதாரப்படல சாரசங்கிரகம்.

கணேசமூர்த்தி திருவவதாரம் முன் திரிபுரனென்பவனை எரிக்கும்படி விமலர் உபாசித்தபோது அவர் திருமுகத்தினின்றும் விநாயகக்கடவுள் பிரசன்னமானதைக் கூறியதாம். அதுமுன் உபாசனுகாண்டம் விமலர் உபாசனைப்படலத்திற்காண்க.

௯ கணபதி திருவவதாரப்படல சாரசங்கிரகம்.

ஓர் வசந்த பருவத்துத் திருக்கயிலையங்கிரியில் சிவபெருமானுடன் உமாதேவியார் உய்யான வனம்புகுந்து அணி நோக்கி வருகையில் இறைவனருளால் அங்குள்ள ஓர் சித்திர மண்டபத்திற் சித்திரித்திருந்த பிரணவாகூத்தரத்தி னின்றும் களிறும்பிடியுமா யிருருத் தோன்றி முயங்குதலைக்கண்ணுற்று இதென்னவென்று இறைவனை வினவ இறைவனும் அதை நோக்கி யருளுகையில் அவ்வடிவினின்றும் விநாயகக்கடவுள் மதகஜமுகசேயாயுற்பவித்து யாவர் எக்கருமஞ் செய்யத் தொடங்கினும் தம்மை முதலிலுபாசித்திடிற் காரியசித்தியும் மற்றைப்படி விக்கினப்படுதலும் விளைவித்துக் கணங்கட்கெல்லாம் மேலாய்க்கணபதியென்று திருநாமத்துட

ன் விளங்க இறைவன் பால் வரம் பெற்றதும், பின்பு தேவர்க்கிடரியற்றிய கயமுகாசுரனைத் தமது வலக்கொம்பை யொடித்து ஆயுதமாக எவிமாய்த்து அவன் மூடி கவடிவெடுத்து எதிர்த்துவர அதன் ஆண்மையை யடக்கி ஆரோகணித்ததும், அவனுக்குத் தேவர்களியற்றிய தோப்புக்கரணம், குட்டுகளாகிய வணக்கங்களை தமக்கியற்ற அவர்கள் பிரார்த்தித்தபடி தாம் ஏற்று இவ்வணக்கம் யாவர் செயினும் அவர்களுக்குப்பேறு அளிக்க அருளியதும பார்பதி தேவியாரால் குருட்டரவின் வடிவமாம்படி சாபம் பெற்ற விஷ்ணுதேவருக்கு அதை மாற்றிப் பழைய உருவமளித்து அவரியற்றிய சஷ்டித் திதிவிரதப்பூசையை ஏற்றுக்கொண்டதும் விரித்துக் கூறியதாம்.

ஸ்ரீ மகோற்கடன் றிருவவதாரப்படல சாரசங்கிரகம்.

அங்கமென்னுந் தேயத்து காந்திரகென்றும் நகரத்தில் இரவுத்திரகேதுவென்னும் ஓர் வேதியனது, தேவாந்தகன், நராந்தகன், என்னும் பெயரையுடைய இரட்டைப் புதல்வர்கள் விநாயகக்கடவுளையன்றி மற்றவர்களால் அழியாதிருக்க இறைவனால் வரம்பெற்று வீமகாயத்தினால் தானவர்ப் போன்றுவானவர் மானவர்க் கிடரியற்றினாகள் அதை மாற்றும்படி வானவர் தாயாகிய அதிதி விநாயகக்கடவுளை உபாசித்து வரம்பெற்றபடி அவர் அவள்பால் ஒரு மகவடிவாயத்தோன்றி மகோற்கடனென்னுந் திருநாமம்பெற்றிருந்தார். அதை யவ்விருவரில் இளையோனான நராந்தகன் உற்பாதத்தால் அறிந்து அவரை வதைசெய்ய மாயைவல்ல சில அவுணர்களை யனுப்ப அவர் அவர்களையெல்லாம் மாய்த்ததும, தமது உபநயன காலத்துச் செருக்குற்ற இந்திரனைத் தமமுடைய விசுவரூபத்தினால் அடக்கியதும், அமமூர்த்தி காசிதேசத்து அரசனது குமாரனுக்குத் திருமணஞ் செய்விக்கச்செல்லுங்கால் முற்கூறிய நராந்தகனால் ஏவப்பட்டு பற்பல உருவெடுத்துவந்த மாயாசுரர்களை வதைத்ததுமன்றி இடையில அக்காசி நகரின் புரோகிதராய் இருந்த பிரமதேவருக்கு சித்திபுத்தி என்னும் பெயருடன் அவதரித்த இரண்டு குமாரத்திகளாகிய சத்திகளை மணந்ததும், புருசுண்டிமாமுனிவரது பேரன்பைக்காசி நகரத்து அரசனுக்குத் தெரிவித்ததும் அந்நகரத்தார் ஒவ்வொருவர் வீட்டிலும் ஏககாலத்தில புசித்தருளித் தமது சர்வவியாபகத்தைத் தெரிவித்ததில் சுக்கிலனென்னும பிராமணனது முதிர்ந்த அன்பை வெளிப்படுத்தியதும்,பின்பு காசிஅரசனுடன் எதிர்த்த முற்கூறிய நராந்தகன் தேவாந்தகனாகிய இருவரையும் செருக்களத்தில் தாமே மாய்த்துக் காசிராஜா புதல்வனுக்குக் கலியாணச்சடங்கியற்றியதும, அந்நகரினின்றும் மீளுங்கால் பிரிவாற்றாது துயர்ந்துவந்த அந்நகரவாசிகளுக்கு அவ்வவர் மனைதோறும் கணபதிமூர்த்தியைச் சகளவடிவில் ஆராதித்துவரும்படி திருவாய் மலர்ந்தருளி பின்பு ஆனந்தபவனமென்னுந் தமது சிவலோகஞ்சென்று

தம்மை யிடைவிடாது சிந்தித்த காசிராஜனுக்கு முத்தியளித்ததும் விரித்துக்கூறியதாம்.

௯க துண்டிவிநாயகர் திருவவதாரப் படலசாரசங்கிரகம்.

பன்மகமென்ற நகரையாண்ட துராசதன் என்னும் ஓர் அசுரன் தேவர்களுக்குத் துயர்செய்தலாற் பயந்து திருக்காசிமாநகரில் வந்து விசுவேசர் பாதந் தஞ்சமென்றிருக்க அங்கும் அப்பாதகன் இடரியற்ற வந்தான் அவ்வேளை விசுவேசர் தேவர்களோடு திருக்கைலாசப் பிரியமாத் திருவுளங் கொண்டெழுந்தருளியதால் தேவர்கள் உமாதேவியைப் பிரார்த்திக்க அத்தேவியினது திருமுகத்தினின்றும் விநாயகமூர்த்தி திருவவதாரமாய் வக்கிரதுண்டரென்றுந் திருநாமம்பெற்றுத் திருக்காசிநகருக்குவந்து ஐம்பத்தாறு திருமூர்த்தங்கொண்டு அத்துராசதன் அமைச்சரையடக்கிக் கிழைவாயதலில் அவனை யிருத்தியபின் விசுவேசர் சந்நிதானத்தில் அமர்ந்தருளியதும், முன்னொருக்கால் திருக்கைலாசத்தை விட்டுப் பிரிந்ததை விரும்பியமர்ந்தருளிய விசுவேசரிடம் காசியம்பதியில் வீற்றிருந்தருளச் செய்வித்ததும் விரித்துக்கூறியதாம்.

௯உ வல்லவை கணேசர் திருவவதாரப் படலசாரசங்கிரகம்.

ஓர் காலத்துத் தவப்பிரமாக்களில் ஒருவராகிய மரீசிமுனிவர் பிதாவாகிய பிரமதேவரை நோக்கி சிருட்டி, திதி, சங்காரமென்னும் முத்தொழிற் கர்த்தாக்களில் முதன்மையுடையவர் யாவர் என்று ஐயுற்று வினவ அவர் அநேக ஏதுக்களாலும் எடுத்துக்காட்டி யாவரும் ஐங்கரரே முத்தொழிற் கர்த்தரே முதன்மையுடையவர் கணநாதராகிய அவரே யென்று தெளிவிக்கத் தெளிந்தபின் மரீசிமுனிவர் அவரை நோக்கித் தவம்புரிந்ததில் பிரசன்னமாய் விரும்பிய வரத்துடன் யாவரும் பேறும் அவருக்குப் புதல்வியாம்படி வரமருளியதும், அவ்வரத்தைப் பெற்ற இறைவன் அருளால் அத்தேவி யமுனாநதியில் ஒரு தாமரை மலரில் சங்குருவாயும் பின் குழந்தைவடிவாயும் காணப்பட்டு நீராடச்சென்ற மரீசிமுனிவர்க்குப் புதல்வியாகி வல்லபையென்ப் பேரிடப்பெற்றுப் பன்னிரண்டு வயதுவரை தவஞ்செய்ய அவ்விறைவன் பத்துக்கரமுடைய கணேசவடிவத்தராய் மயின்மீது ஆரோகணித்து அவட்குக் காட்சிநல்கி இடப்பாகங்கொடுத்தாற் திருமணம் செய்து வல்லவை கணேசரென்ற திருநாமங்கொண்டது, பின்பு வித்துருவேசர் இலக்குமிதேவி சித்திராயவந்து தானின்ற யோகத்தினால் முன்னிய பன்னிரு புதல்வியர்களையுந் திருமணஞ் செய்து கொள்ளும்படி பிரார்த்திக்க அவ்வாறே மணந்ததுமன்றி அவருக்கு ஞானோபதேசஞ்செய்தருளி மணித்தீவென்னும் லோகத்துக்கெழுந் தருளியதும் விரித்துக்கூறியதாம்.

முற்றுப் பெற்றன.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | **சிறப்புப்பாயிரங்கள்** | |
| ௫ | ௰ | வுளோப | வுலோப |
| ௬ | ௰௬ | குளிதது | குளித்து |
| | | **உபாசனா காண்டம்** | |
| ௧௬ | ௩௧ | மரலை | மாலை |
| ௨௧ | ௬ | மொருவன்றன | மொருவன்றன் |
| ௨௨ | ௬ | இவ்வகை | இவ்வணை |
| ௨௪ | ௨௩ | கிழைத்தி | கிழைதி |
| ௨௫ | ௩௰ | சாம்ன் | சாமன் |
| ௨௭ | ௨௧ | ருலசிடை | ருலசிடை |
| ௩௨ | ௰௩ | வழியுணாந் | வழியுணர்ந் |
| ௩௨ | ௰௮ | மனஞ்செய்து | மணஞ்செய்து |
| ௩௭ | ௫௨ | விநாகர் | விநாயகர் |
| ௩௭ | ௫௩ | ஹேறாம்பவிநாயகா | ஹேரம்பவிநாயகர் |
| ௩௭ | ௬௧ | விரயகர் | விநாயகா |
| ௩௮ | ௨௫ | சுமங்கள்விநாயகர் | சுமங்களவிநாயகா |
| ௬௭ | ௪ | வநத | வந்த |
| ௭௪ | ௧ | பெற்றபயனும் | பெறற்பயனும் |
| ௭௬ | ௰௧ | தெணணாகியம் | தெண்ணாகியம |
| ௭௮ | ௫ | மலர்ததாள் | மலாத்தாள் |
| ௮௪ | ௰௫ | பொறை | புறை |
| ௮௪ | ௩௧ | வுடடங்கி | வுட்டஙகி |
| ௮௭ | ௪ | செய | செய் |
| ௮௭ | ௨௫ | கவினுற் | கவினுற |
| ௮௮ | ௰௪ | கோதறு | கோதறு |
| ௮௮ | ௨௪ | பசீ | பசி |
| ௯௧ | ௰௫ | சுத்மே | சுத்தமே |
| ௯௧ | ௨௬ | வந்றுரு | வந்துரு |
| ௯௪ | ௪ | பெர்டு | பொடு |
| ௯௪ | ௨௰ | பேறெலொம் | பேறெலாம் |
| ௯௪ | ௩௭ | ஏவல | ஏவல் |
| ௯௬ | ௪ | சிஎகரம | சிணகரம் |
| ௯௬ | ௭ | திடக்ககண் | திடக்கண் |
| ௯௬ | ௰௭ | முனனுய்ததார் | முன்னுய்த்தார் |
| ௱ | ௰௧ | வுணாதிரந்து | வுணாத்திரந்து |
| ௱ | ௨௰ | வல்லறிர் | வல்லறீர் |
| ௱ | ௨௰௮ | மென்மை | மேன்மை |
| ௱௪ | ௬ | விருதநி | விருத்தி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௯௰௩ | ௰ | வல்லாளனுக | வல்லாளனுங் |
| ௯௰௫ | ௫ | தழைதா | தழைதர |
| ௯௰௫ | ௰ | வாக்கம் | வர்க்கம் |
| ௯௫ | ௰௫ | ஞாநறுங் | தூநறுங் |
| ௯௫ | ௨௭ | வேன்னீர் | வெந்நீர் |
| ௯௬ | ௨௬ | பூந்துருததி | பூந்துருத்தி |
| ௯௬ | ௨௭ | புருடோததம | புருடோத்தம |
| ௯௬ | ௩௮ | பஸ்பம | பஸ்ப |
| ௯௭ | ௬ | வுளததோ | வுளத்தோ |
| ௯௭ | ௫ | செய்யார் | செய்தார் |
| ௯௮ | ௰௬ | செவி | செவி |
| ௯௮ | ௰௬ | யேற்றவடன் | யேற்றவுடன் |
| ௯௯ | ௮ | கொல் | தொல் |
| ௱௧ | ௩௰௧ | திருவவுதார | திருவவதார |
| ௱௪ | ௰௩ | திருவாதார | திருவவதார |
| ௱௬ | ௰௯ | பட்பகை | புட்பகை |
| ௱௬ | ௰௯ | மகவயிர்த்த | மகவுயிர்த்த |
| ௱௬ | ௨௮ | திருவதார | திருவவதார |
| ௱௬ | ௩௰௬ | வேதநிதி | வேதந்தி |